டக்ளஸ் ஆடம்ஸ்

தமிழாக்கம் :

ஜெயபாண்டியன் கோட்டாளம்

# பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி



# பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி

## டக்ளஸ் ஆடம்ஸ்

# Hitchhiker's Guide to the Galaxy

## Douglas Adams

ஜெயபாண்டியன் கோட்டாளம்

ஒரு சிரிப்பான
அறிவியல் புனைவு

ஒரு வியாழக்கிழமை காலை வழக்கம்போல் விழித்தெழுந்த ஆரதன் அண்டத்தில் நிகழ்ந்த பல நிகழ்தகவின்மை நிகழ்ச்சிகளால் வெவ்வேறு உலகங்களுக்கு சென்று பலவித உயிரினங்களை சந்தித்து சில இக்கட்டான நிலைமைகளில் சிக்கி பிறகு தப்பித்து இறுதியில் வேற்றுலக நண்பர்களுடன் வாழ்கிறான்.

ஆங்கிலத்திலிருந்து
தமிழாக்கம்
ஜெயபாண்டியன்
கோட்டாளம்

# பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி

டக்ளஸ் ஆடம்ஸ்

# Hitchhiker's Guide to the Galaxy

Douglas Adams

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் - ஜெயபாண்டியன் கோட்டாளம்
jkottalam@gmail.com

அட்டைப்படம் — மனோஜ் குமார் — socrates1857@gmail.com

மின்னூல் வெளியீடு : http://FreeTamilEbooks.com

# பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி

*டக்ளஸ் ஆடம்ஸ் எழுதியவற்றிலே மிகவும் புகழ்வாய்ந்தது மட்டுமல்லாமல் ஆங்கிலப்புதினங்களில் மிக அதிக அளவில் விற்பனையானவற்றிலொன்றாகிய பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி (The Hitchhiker's Guide to the Galaxy) என்ற நூல் ஒரு சிரிப்பான அறிவியல் புனைவு. முதலில் வானொலி ஒலிபரப்புக்காக எழுதப்பட்ட இந்தக்கதை பிறகு நூலாகவும், தொலைக்காட்சித்தொடராகவும், திரைப்படமாகவும், மேடைநாடகமாகவும் பரிணமித்தது. இந்த நூலின் வெற்றியால் தூண்டப்பட்டு இந்தக்கதையின் தொடராக வேறு பல நூல்களையும் டக்ளஸ் ஆடம்ஸ் எழுதினார்.*

*நிகழ்ச்சிகள் பால்வீதி (Milky Way) எனப்படும் நம் விண்மீன்திரளில் நடப்பதாக இந்தக்கதை அமைந்துள்ளது. கதிரவனும் அதைச்சுற்றிவரும் புவியும் பால்வீதியின் மிகமிகச்சிறு உறுப்பினர்களே. கதிரவனைப்போன்ற பல விண்மீன்களைச்சுற்றியுமுள்ள மற்றக்கோள்களில் வாழும் உயிரினங்களும் கதையில் இடம்பெறுகின்றனர். அவ்வாறான உயிரினங்களில் ஒருவனாகிய புவியைச்சார்ந்த ஆரதன் என்பவன்தான் கதையின் நாயகன். வேற்றுலகிலிருந்து புவியைப்பார்க்கவந்தவனும் டாட்டா என்ற பெயரை வைத்துக்கொண்டவனுமாகிய ஒரு சுற்றுலாப்பயணி ஆரதனின் நண்பனாகிறான். புவியின் ஓர் இக்கட்டான நிலையிலிருந்து தப்பிக்க அந்தவழியே செல்லும் ஒரு வெளிக்கப்பலில் திருட்டுத்தனமாக ஏறிச்செல்லும் டாட்டா ஆரதனையும் தன்னுடன் அழைத்துச்செல்கிறான். அந்த கப்பலின் தலைவன் இவர்களை கண்டுபிடித்து கட்டிவைத்து தன்கவிதைகளை படித்துக்காட்டி துன்புறுத்துகிறான். இறுதியில் அவர்களை கப்பலிலிருந்து வெட்டவெளியில் எறிந்துவிடுகிறான்.*

*அவ்வாறு எறியப்பட்டவர்கள் மீட்கப்பட்டு வேறொரு கப்பலில் பயணம் செய்வதும், பால்வீதியின் அதிபரை ஆரதன் சந்திப்பதும், கோள்களை கட்டுமானமாக்கும் ஒரு பொறியியலாளர் புவி உருவாக்கப்பட்டவிதத்தை ஆரதனுக்கு விளக்குவதும், சுண்டெலிகள் ஆரதனின் மூளைக்கு விலைபேசுவதும் ஆகிய பல சுவையான நிகழ்ச்சிகள் இடம்பெறுகின்றன.*

# டக்ளஸ் ஆடம்ஸ்



*டக்ளஸ் ஆடம்ஸ் மார்ச்சு 1952-இல் இங்கிலாந்திலுள்ள கேம்பிரிட்ஜ் நகரில் பிறந்து அதே நகரிலுள்ள புனித யோவான் கல்லூரியில் (St. John's College) 1974-ஆமாண்டு ஆங்கில இலக்கியத்தில் இளங்கலைப்பட்டமும் அதன்பின் முதுகலைப்பட்டமும் பெற்றார்.*

*புகழ்வாய்ந்த பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி (The Hitchhiker's Guide to the Galaxy) என்ற அறிவியல் புனைவின் எல்லா வடிவங்களையும் இவர்தான் உருவாக்கினார். இது முதலில் மார்ச்சு 1978-இல் BBC வானொலி 4 நிலையத்தின் ஒலிபரப்பாக தொடங்கி, அதிக விற்பனையன பல நூல்களாக உருமாறி, தொலைக்காட்சி தொடர்நிகழ்ச்சி, திரைப்படம், கணினி விளையாட்டுகள், மேடை நாடகங்கள் முதலியவற்றிலும் பங்குபெற்றது. அதைத்தொடர்ந்து அதே வரிசையில் மேலும் பல புதினங்களையும் எழுதினார். இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் அவரது நூல்கள் ஒன்றரைக்கோடி நகல்கள் விற்றிருக்கின்றன. பல ஐரோப்பிய மொழிகளிலும் பெயர்க்கப்பட்டுள்ளன.*

*தங்கத்தட்டு (Golden Pan) என்ற பரிசை மூன்றுமுறை வெவ்வேறு நூல்களுக்காக ஆடம்ஸ் பெற்றார். முதன்முறையாக 1984-ஆம் ஆண்டில் பெற்றபோது, அந்த பரிசு வழங்கப்பட்ட எழுத்தாளர்களிலே மிகவும் இளையவராயிருந்தார். சிறந்த பிரித்தானிய இளம் புதின எழுத்தாளர்களுக்கான பரிசுக்கும் அவர் முன்மொழியபட்டார்.*

*அறிவியல் தொழில்நுட்ப அடிப்படையில் புனைவுகள் மட்டுமல்லாமல், இயற்கையை கேடுறாக்காப்பதையும் விலங்குகளை அழியாக்காப்பதையும் பற்றியும் புதினமற்ற நூல்களையும் ஆடம்ஸ் எழுதியிருக்கிறார். அவற்றுள் முக்கியமான இறுதி வாய்ப்பு (Last chance to see) என்ற நூல் அருகிவரும் பல உயிரினங்களைப்பற்றி விவரிக்கிறது.*

*ஆடம்ஸ் 2001-ஆம் ஆண்டில் எதிர்பாராமல் மாரடைப்பால் இறந்ததைக்குறித்து, ரிச்சர்டு டாக்கின்ஸ் என்ற அறிவியலாளர் 'அறிவியல் ஒரு நல்ல நண்பரையிழந்தது; இலக்கியம் ஒரு நல்ல அறிவாளியையிழந்தது; கொரில்லாவும் காண்டாமிருகமும் ஒரு நல்ல ஆதரவாளரையிழந்தன' என்றார்.*

# ஜெ. கோட்டாளம்



*ஜெ. கோட்டாளம் அறிவியல் தகவல்தொழில்நுட்ப ஆய்வும் வளராக்கமுமாகிய துறைகளில் பணியாற்றி ஓய்வு பெற்றவர். இவர் 1954-ஆம் ஆண்டு இந்தியாவின் தென் தமிழ்நாட்டிலுள்ள ஒரு சிற்றூரில் பிறந்து, தற்போது அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கலிபோர்னியா மாநிலத்தில் வசித்து வருகிறார். சென்னையிலுள்ள இந்தியப் தொழில்நுட்பப் பயிலகத்திலும் (IIT Madras), மிச்சிகன் மாநிலப் பல்கலைக்கழகத்திலும் உயர்கல்வி பெற்று, சாண்டியேகோவிலுள்ள கலிபோர்னியா பல்கலைக்கழகம் (UCSD), ஸ்க்ரிப்ஸ் ஆய்வுப் பயிலகம் (Scripps Research Institute), ஹார்வர்டு பல்கலைக்கழகம், கிரே ஆய்வகம் (Cray Research) முதலிய இடங்களில் பணியாற்றினார். புரதம், அணுக்கரு அமிலம் போன்ற பெருமூலக்கூறுகளின் கட்டமைப்பையும் இயக்கங்களையும் மிகைக்கணினியில் பாவனையாக்குவதற்கான (simulation) மென்பொருளை உருவாக்குவதில் இவர் பங்களித்தார். மேலும், கணக்கீட்டுப் பாய்ம இயக்கவியல் (computational fluid dynamics), புள்ளியிய இயற்பியல் (statistical physics) ஆகிய துறைகளிலும் பங்களித்துள்ளார். தற்போது ஆங்கில மொழியிலுள்ள அறிவியற்செல்வங்களை திட்டமிட்ட ஒழுங்குமுறையில் தமிழுக்குக்கொண்டுவருவதற்கு தேவையான கருவிகளை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.*

*பால்வீதியின் கிழக்குச்சுருளிக்கையின் புறக்கடை போன்ற ஒதுக்குப்புறங்களில் வரையிடப்படாமலிருக்கும் வட்டாரங்களில் யாருந்தேடாத ஒரு சிறு மஞ்சள்நிற விண்மீன் கிடக்கிறது.*

*இதனைச்சுற்றி சுமார் நூற்றுநாற்பத்தேழு இருமடியாயிரம் கிலோமீட்டர் தொலைவில் சற்றும் முக்கியத்துவமில்லாத ஒரு சிறு பசுநீலக்கோள் வலம் வருகிறது. இக்கோளில் குரங்கிலிருந்து வந்த உயிரினங்கள் அலைபேசி ஒரு தலைசிறந்த கண்டுபிடிப்பு என்றெண்ணும் வளர்நிலையில் இருக்கிறார்கள்.*

*இந்தக்கோளில் ஒரு சிக்கல் இருக்கிறது; அஃதாவது இருந்தது. அஃதென்னவென்றால், அதிலுள்ள பெரும்பான்மை மக்கள் பெரும்பான்மை நேரங்களில் மகிழ்ச்சியில்லாமலிருந்தனர். இந்த சிக்கலுக்கு பல தீர்வுகள் பரிந்துரைக்கப்பட்டன. அவை யாவும் பச்சைமையாலும் சிவப்புமையாலும் அச்சிடப்பட்ட சிறு காகிதத்துண்டுகளை சேகரிப்பதிலே அதிகக்கவனம் செலுத்தின. மகிழ்ச்சியில்லாமலிருந்தது அந்த காகிதத்துண்டுகளல்லாததால் அவ்வாறான தீர்வுகள் இறுதியில் பலனளிக்கவில்லை.*

*ஆகவே அந்தச்சிக்கல் நீடித்தது. பலர் தீயவர்களாயிருந்தனர்; பெரும்பான்மையோர் துயரிலாழ்ந்திருந்தனர், அலைபேசிகள் வைத்திருந்தவர்கள் உட்பட.*

*முதலில் மரத்திலிருந்து கீழிறங்கி வந்ததே பெருந்தவறென்ற எண்ணம் பலரிடையே வலுவடைந்துவந்தது. அவர்களில் சிலர் மரங்களுக்குச்சென்றதே தவறென்றும் கடலிலிருந்து வெளியேறியிருக்கக்கூடாதென்றும் கூறினர்.*

*அவ்வாறிருக்கும்போது, மக்கள் ஒருவரோடொருவர் அன்பாயிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று சொன்ன ஒரு மனிதரை சிலுவையிலறைந்த காலத்திலிருந்து சுமார் இரண்டாயிரமாண்டுகள் கழிந்தபின், ஒரு வியாழக்கிழமை, அரிமாப்பட்டியிலுள்ள ஒரு காப்பிக்கடையில் தனியாக அமர்ந்து காப்பிபருகிக்கொண்டிருந்த ஒரு பெண், உலகில் அதுவரை நேர்ந்து கொண்டிருந்த தவறு என்னவென்பதை திடீரென்றுணர்ந்தாள். உலகை நல்லதும் மகழ்ச்சிகரமானதுமாக ஆக்குவது எப்படி என்பது அவளுக்குத்தெரிந்துவிட்டது. ஆ, இந்த முறை அது தவறாமல் பலிக்கும். யாரையும் சிலுவையிடத்தேவையிருக்காது.*

*ஆனால், அவள் அதை யாரிடமாவது சொல்லலாமென்று தன் அலைபேசியை எடுத்து விரல்களை அதில் ஒற்றிக்கொண்டிருந்தபோதே ஒரு கொடிய திடீர்ப்பேரழிவு நேர்ந்ததால், அந்தத்தீர்வு என்றுமே கிடைக்காத வகையில் தொலைந்துபோய்விட்டது.*

*இஃது அவள்கதையன்று.*

*ஆனால் அந்தக்கொடிய திடீர்ப்பேரழிவைப்பற்றியும் அதனாலேற்பட்ட பின்விளைவுகளுள் சிலவற்றைப்பற்றியுமான கதை.*

*இஃதொரு நூலைப்பற்றிய கதையுமாகும். அந்நூலின் பெயர் பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி என்பது. அஃதொரு புவிநூலன்று; புவியில் என்றுமே பதிக்கப்படாததும், அந்தக்கொடிய திடீர்ப்பேரழிவுவரை புவிமனிதர் யாரும் கேள்விப்படாததுமாகும்.*

*ஆயினும் அஃதொரு தனிச்சிறந்த நூல்.*

*உண்மையில், சிறுகரடியிலுள்ள பதிப்பகங்கள் அனைத்திலிருந்தும் வெளிவந்த எல்லா நூல்களினும் மிகவும் தனிச்சிறந்தது இந்த நூலே. சிறுகரடிப்பதிப்பகங்களைப்பற்றியும் புவிமனிதர் கேள்விப்பட்டதில்லை.*

*தனிச்சிறந்த நூலாக மட்டுமல்லாது ஒரு வெற்றிகரமான நூலாகவும் அது விளங்குகிறது. வானக வீட்டுப்பராமரிப்பு என்ற நூலைவிட அதிகப்புகழ் வாய்ந்தது; ஈர்ப்பற்ற நிலைகளில் செய்யக்கூடிய மேலும் 50 செயல்கள் என்ற நூலைவிட அதிக அளவில் விற்பனையானது; ஊலான் கலூபிடின் தத்துவ அடிப்படையிலான மும்மை கடவுள் செய்த தவறு, மேலும் கடவுளின் பெருந்தவறுகள், யார் இந்த கடவுள் என்பவர்? ஆகியவற்றைவிட அதிகப்பரபரப்பை உண்டாக்கியது.*

*நம் விண்மீன்திரளின் மேற்கு விளிம்புகளிலுள்ள பல அமைதியான கலாச்சாரங்களில், எல்லா அறிவும் விவேகமும் அடங்கிய ஒரு கருவூலமாக, முன்பு பால்வீதியக்கலைக்களஞ்சியம் என்ற நூல்*

*கருதப்பட்டதற்குப்பதிலாக, தற்போது பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இதில் சில தலைப்புக்கள் விட்டுப்போயிருந்தாலும், பலவிடங்களில் சந்தேகத்துக்கிடமான தகவல்கள் இருந்தாலும், சிலவிடங்களில் தவறான தகவல்களே இருந்தாலும், இரண்டு காரணங்களால் இந்த நூல் முந்தையதைவிட அதிக அளவில் மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது.*

*முதலில், இது கொஞ்சம் விலைகுறைந்தது. இரண்டாவதாக, பயப்படாதீர்கள் என்ற வரி இதனட்டையில் பெரிய அழகான எழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளது.*

*ஆனால் அந்தக்கொடிய திடீர்ப்பேரழிவு நிகழ்ந்த வியாழக்கிழமை, அதன் விந்தையான பின்விளைவுகள், அந்த பின்விளைவுகள் இந்தத்தனிச்சிறந்த நூலுடன் எவ்வாறு பின்னிப்பிணைகின்றன ஆகியவற்றைப்பற்றிய கதை மிக எளிதாகவே தொடங்குகிறது.*

*அது ஒரு வீட்டில் தொடங்குகிறது.*

# *அத்தியாயம் 1*

*அந்த வீடு கிராமத்தின் ஓரத்தில் ஒரு சிறு மேட்டின் விளிம்பில் தனியாக இருந்தது. அங்கிருந்து கீழே விரிந்துகிடந்த கீழக்கரை வயற்காட்டின் ஒரு பெரும்பகுதி நன்கு தெரியும் வகையில் இருந்தது. சொல்லக்கூடிய சிறப்பொன்றும் அந்த வீட்டுக்கு இல்லை. முப்பது வயதான அந்த வீடு சதுரமானது; செங்கற்களால் கட்டப்பட்டது; அதன் முன்பக்கமிருந்த சாளரங்களின் அளவும் விகிதமும் கண்களுக்கு மகிழ்வூட்டுவதாக இல்லை.*

*இந்த வீட்டை சிறப்பானதாகக்கருதிய ஒரே மனிதன் ஆரதன் ஒருவனே. அதுவும், அவன் அந்த வீட்டில் குடியிருப்பவன் என்பதால்தான். அவன் சுமார் மூன்று ஆண்டுகளாக இங்கு வசிக்கிறான். பெரிய நகரத்தில் இருப்பது அவனை பதற்றமாகவும் சிடுசிடுப்பாகவும் ஆக்கியதால் இங்கு வந்திருந்தான். அவனுக்கும் முப்பது வயதுதான். கருத்த முடியுடனும் அமைதியடையாத மனத்துடனும் இருந்தான். அவனை மிகவும் சங்கடத்தில் ஆழ்த்தியது என்னவென்றால், அவன் ஏன் ஏதோவொரு சங்கடத்திலிருப்பதுபோல் காணப்படுகிறான் என்று எல்லாரும் எப்போதும் அவனை கேட்டதுதான். அவன் ஒரு வானொலிநிலையத்தில் வேலை செய்தான். அந்த வேலை அவன் நண்பர்கள் நினைப்பதைவிட ஆர்வமூட்டும் வேலை என்று அவர்களிடம் சொல்லிவந்தான். அது உண்மைதான். அவன் நண்பர்களில் பெரும்பான்மையோர் விளம்பரநிறுவனங்களில் வேலைபார்த்தனர்.*

*ஆரதனின் வீட்டை இடித்துவிட்டு அந்த இடத்தின்வழியே ஒரு நெடுஞ்சாலை அமைப்பது என்று ஊராட்சி முடிவுசெய்திருப்பது அவன் மண்டையில் இன்னும் சரியாக உரைக்கவில்லை.*

*புதன்கிழமை இரவு நன்றாக மழைபெய்திருந்தது. பாதைகள் ஈரமாகவும் சகதியாகவும் ஆகியிருந்தன. ஆனால் வியாழக்கிழமை காலை ஆரதனின் வீட்டின்மீது இறுதி முறையாக கதிரவன் தெளிவாக ஒளிர்ந்தான்.*

*வியாழக்கிழமை காலை எட்டு மணியளவில் உடல்நலம் மிகவும் சரியில்லாத நிலையில் ஆரதன் கண்களைக்கசக்கிக்கொண்டு விழித்து, படுக்கையிலிருந்து எழுந்து தட்டுத்தடுமாறிச்சென்று சாளரத்தை திறந்து, நிலச்சமமாக்கியை கண்டு, தன் செறுப்புக்களை தேடியெடுத்துக்கொண்டு, பல்துலக்க குளியலறை சென்றான்.*

*பற்றூரிகையில் பற்பசை. இப்படி! தேய்!*

*முகத்தை மழிப்பதற்காக கண்ணாடியை பார்த்தான். அது கூரையை நோக்கியிருந்தது. திருப்பினான். ஒரு கணம் இரண்டாவது நிலச்சமமாக்கி குளியலறைச்சாளரம் வழியே எதிரொளித்தது. சரியாகத்திருப்பியபின் ஆரதனின் தாடியைக்காட்டியது. மழித்தான்; கழுவினான்; துடைத்தான். பிறகு வாய்க்கு சுவையாகவும் சூடாகவும் ஏதாவது அளிக்க சமையலறைக்கு கால்களை செலுத்தினான்.*

*பாத்திரம், நீர், அடுப்பு, பால், காப்பித்தூள். கொட்டாவி.*

*நிலச்சமமாக்கி என்ற சொல் அவன் மனத்தில் பிடிப்பதற்கு ஏதும் அகப்படாமல் வீணாக அலைந்து கொண்டிருந்தது.*

*சமையலறைச்சாளரத்தின் வெளியே இருந்த நிலச்சமமாக்கி கொஞ்சம் பெரியது.*

*அவன் அதை பார்த்து விழித்தான்.*

*'மஞ்சள் நிறம்' என்று மனத்தில் எண்ணிக்கொண்டே உடையணிவதற்காக படுக்கயறைக்கு திரும்பினான்.*

*வழியில் ஒரு குவளை தண்ணீர் குடிப்பதற்காக நின்றான். இன்னொரு குவளை குடித்தான். மது அருந்துவதால் ஏற்படும் பின்விளைவு தன்னில் இருப்பதாக சந்தேகிக்கத்தொடங்கினான். ஏன்? முந்திய நாள் குடித்தானா? அப்படித்தான் இருக்கவேண்டும். 'மஞ்சள் நிறம்' என்ற எண்ணத்துடன் படுக்கையறைக்கு தொடர்ந்தான்.*

*நின்றான். சிந்தித்தான். மதுக்கடை! ஆ, மதுக்கடை! ஏதோவொன்றைப்பற்றி கோபத்துடன் இருந்தது தெளிவில்லாமல் நினைவு வந்தது; முக்கியமானதாகத்தோன்றிய ஏதோவொன்றைப்பற்றி. மற்றவர்களிடமும் அதைப்பற்றி மிகவும் விரிவாக சொல்லிக்கொண்டிருந்ததாக நினைவு வந்தது. அவன் நினைவில் தெளிவாக இருந்ததெல்லாம் அவர்கள் முகத்தில் தெரிந்த வியப்பும் அறியாமையுந்தான். புதிதாகக்கட்டப்போகும் நெடுஞ்சாலை பற்றிய ஏதோவொன்று அவனுக்கு அப்போதுதான் தெரியவந்திருந்தது. பல மாதங்களாக அது திட்ட வடிவில் இருக்கத்தான் செய்தது. ஆயினும் அதுபற்றி யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. வெட்கக்கேடு! ஒரு மடக்கு தண்ணீரை விழுங்கினான். எல்லாம் சரியாய்ப்போய்விடும் என்று முடிவுசெய்தான். புதிய சாலையை அந்த இடத்தில் யாரும் விரும்பவில்லை. ஊராட்சியினரால் ஒன்றும் செய்யவியலாது. எல்லாம் சரியாய்ப்போய்விடும்.*

*ஆனாலும், கடவுளே, இது என்ன இவ்வளவு பெரிய தலைவேதனை! குடித்ததால் வந்த வினை! கண்ணாடியில் தன்னை பார்த்தான். நாக்கை நீட்டினான். 'மஞ்சள் நிறம்'. மஞ்சள் என்ற சொல் அவன் மனத்தில் பிடிப்பதற்கு ஏதும் அகப்படாமல் வீணாக அலைந்து கொண்டிருந்தது.*

*பதினைந்து வினாடிகளுக்குப்பின், அவன் வீட்டுக்கு வெளியே தோட்டப்பாதையை நோக்கி முன்னேறிக்கொண்டிருந்த ஒரு பெரிய மஞ்சள்நிற நிலச்சமமாக்கியின் முன்னால் படுத்துக்கிடந்தான்.*

*திரு. பரசுராம் ஒரு மனிதர்தான். அதாவது, கரிமவேதியியல் அடிப்படையில் அமைந்த, குரங்கிலிருந்து பரிணமித்த ஒருவர்தான். மேலும் குறிப்பாகச்சொல்லவேண்டுமானால், அவர் நாற்பது வயதானவர், தடித்தவர், தொப்பைசரிந்தவர்; ஊராட்சியில் பணிபுரிபவர். விந்தை என்னவென்றால், இது அவருக்கு தெரிந்திராவிட்டாலும், அவர் ராஜராஜசோழனின் நேரடி ஆண்வழி வாரிசும் கூட. ஆனால், நடுவில் வந்த தலைமுறைகளும் பல இனக்கலப்புக்களும் அவர் மரபணுக்களை கிளறியதால் எளிதில் அறியக்கூடிய அரசப்பண்புகள் அவரிடம் அதிகம் இல்லை. எஞ்சியிருப்பவை தொப்பையின் அதிக பருமனும், தங்க நகைகளில் அதிக விருப்பமுமே.*

*நிச்சயமாக அவர் ஒரு சிறந்த போர்வீரர் அல்லர். உண்மையில் அவர் ஒரு பதட்டமான எளிதில் கவலையடையும் மனிதர். அன்று அவர் அதிகமான பதட்டமும் கவலையும் உடையவராய் காணப்பட்டார், ஏனென்றால் அவர் வேலையை முடிப்பதில் ஒரு தடங்கல் ஏற்பட்டிருந்தது. அவருடைய அன்றைய வேலையெல்லாம் ஆரதனின் வீட்டை தரைமட்டமாக்குவதே.*

*'தம்பி, எழுந்திரு,' என்றார். 'இதனால் ஒரு பயனுமில்லை. நிலச்சமமாக்கியின் முன்னால் முடிவில்லாமல் படுத்திருக்க இயலாது.' தன் கண்கள் கோபத்தில் மிளிரும்படி செய்ய முயன்று தோற்றார்.*

*ஆரதன் சகதியில் படுத்திருந்தவாறே கிரீச்சிட்டான்.*

*'அதையும் பார்த்து விடலாம். முதலில் யார் துருப்பிடிப்பது என்று பார்ப்போம்.'*

*'இதை நீ ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்,' என்றார் திரு. பரசுராம் தன் தங்க மோதிரத்தை விரலில் அசைத்துக்கொண்டே. 'இந்த சாலையை கட்டத்தான் வேண்டும்; கட்டத்தான் போகிறோம்.'*

*'எனக்கு இப்போதுதான் தெரியவருகிறது,' என்றான் ஆரதன். 'ஏன் கட்டவேண்டும்?'*

*திரு. பரசுராம் அவனை நோக்கி தன் விரலை ஆட்டப்பார்த்தார். பிறகு நிறுத்திக்கொண்டார்.*

*'ஏன் கட்டவேண்டுமா? என்ன சொல்கிறாய் நீ? இது ஒரு நெடுஞ்சாலை. நெடுஞ்சாலைகளை கட்டத்தான் வேண்டும்.'*

*A என்ற இடத்திலிருந்து B என்ற இடத்துக்கு சிலர் விரைவாகச்செல்லவும் அதே நேரத்தில் B என்ற இடத்திலிருந்து A என்ற இடத்துக்கு வேறு சிலர் விரைவாகச்செல்லவும் நெடுஞ்சாலைகள் பயன்படுகின்றன. A என்ற இடத்துக்கும் B என்ற இடத்துக்கும் இடைப்பட்ட C என்ற இடத்தில் வசிக்கும் மக்கள் விளங்காமல் தவிப்பது என்னவென்றால், A என்ற இடத்திலிருந்து அத்தனை மனிதர்கள் ஆர்வத்துடன் விரைந்து செல்லும்படியான சிறப்பு B என்ற இடத்தில் என்ன இருக்கிறது என்பதும், B என்ற இடத்திலிருந்து அத்தனை மனிதர்கள் ஆர்வத்துடன் விரைந்து செல்லும்படியான சிறப்பு A என்ற இடத்தில் என்ன இருக்கிறது என்பதும்தான். எங்கிருந்தால் நல்லது என்பதை இந்த மக்களெல்லாரும் ஒன்றுசேர்ந்து முடிவாக நிச்சயித்து அவ்விடத்திலேயே இருந்து தொலையவேண்டும் என்பது அவர்கள் விருப்பம்.*

*திரு. பரசுராம் தற்போது D என்ற இடத்தில் இருக்க விரும்பினார், அதாவது நெடுஞ்சாலையுடன் தொடர்புடைய A, B, C போன்ற இடங்களிலிருந்து வெகு தொலைவில். அங்கு காணி நிலத்தில்[1] ஒரு குடிசை மாளிகையும், கேணியருகில் தென்னை மரங்களும், குயிலோசையுடன் நன்றாயிளந்தென்றல் வரவும், தன் பத்தினிப்பெண்ணுடன் கூட்டுக்களியாடி கவிதைபாடி இன்புற்றிருக்கவும் விரும்பினார். மாறாக, இங்கு நிலச்சமமாக்கி ஓட்டுனர்களின் ஏளனச்சிரிப்பிடையில் வெந்து கொண்டிருந்தார்.*

*ஒரு பக்கமாக சரிந்து நிற்பதை மாற்றி தன் எடையை அடுத்த காலுக்கு மாற்றினார். ஆனால் அதுவும் வசதியாக இல்லை. யாரோ எங்கோ தவறு செய்திருந்தது தெளிவாகப்புரிந்தது. அது தாமாயிருக்கக்கூடாது என்று கடவுளிடம் வேண்டிக்கொண்டார்.*

*'உன் எதிர்ப்பைத்தெரிவிக்க சரியான நேரமும் வாய்ப்பும் இருந்தன, தெரியுமா?' என்றார்.*

*'சரியான நேரமா? எது சரியான நேரம்? நேற்று ஒரு தொழிலாளி என் வீட்டுக்கு வந்தபோதுதான் எனக்கு இது முதலில் தெரியும். வீட்டை சுத்தம்செய்ய வந்த ஆளா என்று நான் கேட்டதற்கு, இல்லை வீட்டை இடிக்கவந்த ஆள் என்றான். அதையும் உடனே சொல்லிவிடவில்லை. துடைப்பதுபோல் பாசாங்குசெய்துவிட்டு நூறு ரூபாய் வாங்கிக்கொண்டபின் சொன்னான்.'*

*'ஆனால், ஆரதா, கடந்த ஒன்பதுமாதங்களாக இந்த திட்டம் நகராட்சி அறிவிப்புப்பலகையில் இருந்ததே!'*

*'ஓ, அப்படியா? நேற்று மாலை இதைக்கேட்டதும் முதல் வேலையாக நான் அங்குதான் சென்று பார்த்தேன். எங்களுக்குத்தெரிவிப்பதற்காக நீங்கள் மிகுந்த அக்கரையா எடுத்துக்கொண்டீர்கள்? யாரிடமாவது சொன்னால் தெரிந்துவிடுமே என்று பயந்தீர்களா?'*

*'ஆனால், அறிவிப்புப்பலகையில் ...'*

*'அறிவிப்புப்பலகை! கழிவறை அருகிலிருந்த ஓர் இருட்டறையில் அந்தப்பலகையை ஒருவழியாக கண்டுபிடித்தேன் ...'*

*'அதுதான் அறிவுப்புத்துறை.'*

*'ஒரு கைவிளக்கின் உதவியால்.'*

*'ஓ! ஒருவேளை விளக்கு பழுதடைந்திருக்கும். சரி, அறிவிப்பை பார்த்துவிட்டாயல்லவா?'*

*'ஆம், பார்த்தேன். பூட்டிய அலமாரி ஒன்றின் அடிப்பாகத்தில் புலிகள் ஜாக்கிரதை என்று பொரித்த கதவின் பின்னால் தெளிவாக பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தது.'*

*மேலே ஒரு மேகம் ஊர்ந்து சென்றது. அதன் நிழல், தலையை ஒரு கையால் தாங்கி சகதியில் படுத்திருந்த ஆரதனின் உடலில் படிந்தது. அவன் வீட்டின்மீதும் படிந்தது. திரு. பரசுராம் கண்களை ஒடுக்கி வீட்டைப்பார்த்தார்.*

*'இது அப்படியொன்றும் பிரமாதமான வீடு இல்லையே!'*

*'என் அறியாமைக்கு மன்னிக்கவும். ஆனால் எனக்கு இந்த வீடு பிடித்திருக்கிறது.'*

---

*1 மொழிபெயர்ப்பாளர் குறிப்பு: காணி நிலம் வேண்டும் ... - பாரதியார்.*

*‘நெடுஞ்சாலையும் உனக்குப் பிடிக்கும்.’*

*‘யோ, நிறுத்துமையா! வாயைமூடிக்கொண்டு போம். உமது நெடுஞ்சாலையையும் எடுத்துக்கொண்டு போம்.’*

*திரு. பரசுராம் இரண்டு முறை வாயைத்திறந்து மூடினார் ஏதோ சொல்ல முயல்பவர் போல. ஆரதனின் வீடு தீப்பற்றி எறிவதாகவும் அவன் முதுகில் நான்கைந்து ஈட்டிகளுடன் அந்த வீட்டிலிருந்து கதறிக்கொண்டு ஓடுவதாகவும் ஓர் அருமையான அழகிய கற்பனை அவர் மனத்தில் உண்டாயிற்று. இதுபோன்ற கற்பனைகள் பரசுராமின் மனத்தில் அடிக்கடி தோன்றுவதுண்டு. அதனால் அவர் மிகவும் கலக்கமடைவதுண்டு. கொஞ்சம் திக்கித்தடுமாறி பிறகு சமாளித்து பேசத்தொடங்கினார்.*

*‘தம்பி, ஆரதா,’ என்றார் நிதானத்துடன்.*

*‘என்ன, ஐயா! சொல்லுங்கள்’ என்றான் அவனும் கேலி நிதானத்துடன்.*

*‘சில உண்மைகளை உனக்கு சொல்ல விரும்புகிறேன். நான் இந்த நிலச்சமமாக்கி உன்மீது ஓடும்படி உத்தரவளித்தால் அதற்கு எவ்வளவு சேதம் உண்டாகும், தெரியுமா?’*

*‘எவ்வளவு?’*

*‘ஒன்றுமில்லை,’ என்று சொல்லி, ஆயிரம் குதிரை வீரர்கள் அவரை சூழ்ந்திருப்பதுபோன்ற கற்பனை அவர் மனத்தில் ஏன் நிறைந்திருக்கிறது என்று எண்ணிக்கொண்டே, சற்று அச்சத்துடன் அந்த இடத்தைவிட்டு அகன்றார்.*

*ஒன்றுமில்லை என்பதுதான் இன்னொரு கேள்விக்கும் விடை. ஆரதனின் நெருங்கிய நண்பர்களில் ஒருவன் குரங்கிலிருந்து வந்தவன் அல்லன் என்பதும், அவன் கலப்பாடி என்ற ஊரிலிருந்து வந்தவன் என்று வழக்கமாகச்சொல்வது உண்மையன்று என்பதும், அவன் உண்மையில் ஆதிரை விண்மீன் அருகிலுள்ள ஒரு சிறு கோளிலிருந்து வந்தவன் என்பதும் எவ்வளவு தூரம் குரங்கிலிருந்து வந்த ஆரதனுக்குத் தெரியும் என்பதுதான் அந்தக்கேள்வி.*

*ஆரதன் இவற்றையெல்லாம் இம்மியளவும் சந்தேகிக்கவில்லை.*

*இந்த நண்பன் சுமார் பதினைந்து புவியாண்டுகளுக்கு முன் புவியில் வந்திறங்கி, புவிமனிதச்சமுதாயத்துடன் கலந்துவாழ்வதற்கான மிகவும் கடினமுயற்சிகளை மேற்கொண்டான். அதில் கொஞ்சம் வெற்றியும் அடைந்திருந்தான் என்றே சொல்லவேண்டும். எடுத்துக்காட்டாக, ஒரு வேலை தேடிக்கொண்டிருக்கும் திரைப்பட நடிகனாக அந்த பதினைந்தாண்டுகளாகவும் நடித்துக்கொண்டிருந்தான். அது நம்பும்படியாகவே இருந்தது.*

*ஆயினும், புவிக்கு வரும்முன்பு செய்த ஆய்வுகளில் ஒரு பகுதியில் சற்று கவனக்குறைவாக இருந்ததால், ஒரேயொரு பெரிய தவறை இழைத்துவிட்டான். அவன் சேகரித்த தகவல்களிலிருந்து ‘டாட்டா’ என்ற பெயர் சந்தேகத்தை உண்டாக்காத ஒரு பொதுவான பெயர் என்று முடிவு செய்துவிட்டான்.*

*அவன் அதிக உயரமில்லை. அவன் உடலங்கங்கள் கவனத்தை கவரும்வகையில் இருந்தாலும் அவன் அழகானவன் என்று சொல்லவியலாது. கம்பிபோன்றிருந்த தன் இஞ்சிய முடியை நெற்றியிலிருந்து பின்தள்ளி வாரியிருந்தான். மூக்கிலிருந்து தோல் இழுத்ததுபோல் இருந்தது. அவனைப்பற்றிய ஏதோவொன்று சற்றே வேறுபட்டதுபோல் தோன்றியது. ஆனால் அது என்ன என்று சுட்டிச்சொல்வது கடினமாயிருந்தது. ஒருவேளை அவன் கண்கள் வழக்கமான அளவு இமைக்காததோ! அவனுடன் அதிகநேரம் பேசிக் கொண்டிருப்பவர் தம்மையறியாமலே வழக்கத்துக்கு அதிகமாக இமைக்கத்தொடங்குவார், அவனுக்காகவும் சேர்த்து இமைப்பதுபோல். ஒருவேளை அவன் சிரிக்கும்போது வாய் வழக்கத்துக்கு அதிகமாக விரிவதோ! அவன் சிரிக்கும் விதம் அவன் நம் மென்னியை பிடிக்கப்போகிறானோ என்றிருக்கும்.*

*புவியில் அவனுக்கிருந்த நண்பர்கள் யாவரும் அவனை ஒருவிதப்பைத்தியமாக எண்ணினார்கள், ஆனால் அப்பாவிப்பைத்தியமாக. பெருங்குடிகாரனாகவும் கொஞ்சம் மாறுபட்ட பழக்கவழக்கங்கள் உடையவனாகவும் அவர்களுக்கு தோன்றினான். எடுத்துக்காட்டாக, பல்கலைக்கழகத்தில் நடக்கும் கேளிக்கைகளில் அழைப்பில்லாமல் புகுந்து நன்றாகக்குடித்துவிட்டு, வானியற்பியலாளர் யாராவது அகப்பட்டால் அவரை கேலிசெய்து வம்புக்கிழுப்பதும் அதனால் வெளித்தள்ளப்படுவதும் அவனுக்கு வழக்கமாயிருந்தது.*

*சிலநேரங்களில் பித்துப்பிடித்தவன்போல் வானத்தையே பார்த்துக்கொண்டிருப்பான். என்ன பார்க்கிறான் என்று யாராவது கேட்டால் திடீரென்று விழித்துக்கொள்வதுபோல் சிரித்து எழுவான்.*

*'ஒன்றுமில்லை, பறக்குந்தட்டு வருகிறதா என்று பார்த்தேன்' என்று சொல்லி ஒரு மர்மச்சிரிப்பு சிரிப்பான். அதைக்கண்டு எல்லாரும் சிரித்து எந்தவிதமான பறக்கும் தட்டை எதிர்பார்த்தான் என்று கேட்பார்கள்.*

*'பச்சை நிறமானது' என்று பதிலளித்து உரக்கச்சிரிப்பான். அடுத்தகணம் அருகிலுள்ள மதுக்கடைக்குள் புகுந்து அனைவருக்கும் பெரிய மொந்தைகள் வாங்கிக் கொடுப்பான்.*

*இதுபோன்ற இரவுகள் நல்லவிதமாக முடிவதில்லை. டாட்டா மதுபானங்களை அதிகம் அருந்தி, இதற்காகவே வரும் பெண்கள் ஒருத்தியுடன் ஒரு மூலையிலமர்ந்து சல்லாபித்து, உண்மையைச்சொல்லப்போனால் பறக்கும் தட்டின் நிறம் முக்கியமேயில்லை என்பதைத் தன் குழறல் பேச்சால் அவளுக்கு விளக்க முயல்வான்.*

*அதன்பின் பின்னிரவில் தள்ளாடும் நடையுடன் சாலைகளில் சென்று கொண்டிருக்கும்போது இரவுக்காவலர்கள் தென்பட்டால் அவர்களிடம் ஆதிரைக்கு வழிதெரியுமா என்று கேட்பான். காவலர்கள் பெரும்பாலும் 'கவனமாக வீட்டுக்குப்போய் சேரப்பா' என்றே பதிலளிப்பதுண்டு.*

*'அதற்காகத்தானே கேட்டேன்!' என்று டாட்டா பதிலளிப்பதுண்டு.*

*உண்மையில் அவன் வானத்தை பார்த்துக்கொண்டிருந்தபோது ஏதோவொரு பறக்குந்தட்டு வராதா என்றுதான் எதிர்பார்த்தான். பச்சைநிறத்தை குறிப்பிட்டதன் காரணம் என்னவென்றால் அது ஆதிரை வணிக ஒன்றியத்தின் அடையாளநிறம்.*

*ஏதோவொரு பறக்குந்தட்டு சீக்கிரம் வராதா என்றுதான் டாட்டா ஏங்கினான், ஏனென்றால் பதினைந்து ஆண்டுகளாக ஓரிடத்தில் சிக்கியிருப்பது மிக அதிகம்; அதுவும், புவிபோன்ற ஓர் ஒன்றுமில்லாத ஆர்வமற்ற கோளில்.*

*ஏதோவொரு பறக்குந்தட்டு சீக்கிரம் வராதா என்றுதான் டாட்டா ஏங்கினான், ஏனென்றால் பறக்கும் தட்டுகளை நிற்கச்சொல்லி அதில் சவாரிவாங்கி பயணம்செய்வது எப்படி என்பது அவனுக்குத் தெரியும். ஒரு நாளுக்கு முப்பது திருவோணப்பணத்துக்கும் குறைவான செலவில் அண்டத்தின் வியப்புக்களை சுற்றிப்பார்ப்பது எப்படி என்பது அவனுக்குத் தெரியும்.*

*உண்மையில், பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி என்ற தனிச்சிறந்த நூலுக்கு டாட்டா ஒரு நாடோடி ஆய்வாளன்.*

*மனிதர்கள் தகவமைவு மிக்கவர்கள். மதிய உணவு நேரத்துக்குள் ஆரதன்வீட்டைச்சுற்றியுள்ள வாழ்க்கை ஒரு திட்டமான போக்கை அடையத்தொடங்கியிருந்தது. ஆரதன் சகதியில் படுத்துக்கொண்டிருந்தவாறே ஒரு வழக்கறிஞரை பார்க்கவேண்டுமென்றோ, தன் அம்மாவை பார்க்கவேண்டுமென்றோ, அல்லது படிக்க ஒரு புத்தகம் வேண்டுமென்றோ கேட்பது வழக்கமான நிகழ்ச்சிபோல தோன்றத்தொடங்கியது. திரு. பரசுராம் அடிக்கடி வந்து, பொது நன்மைக்காக என்றோ, வளராக்கத்தின் முன்னேற்றப்பாதை என்றோ என் வீட்டையும் இடித்துவிட்டார்கள் நான் நன்றாகத்தானே இருக்கிறேன் என்றோ, கெஞ்சலும் பயமுறுத்துதலும் அடங்கிய ஒரு புதிய சொற்பொழிவை நிகழ்த்தி ஆரதனின் மனத்தை மாற்ற முயற்சித்துவிட்டுப்போவதும் சாதாரணக்காட்சியாகிவிட்டது. நிலச்சமமாக்கி*

*ஓட்டுநர்கள் காப்பிகுடித்துக்கொண்டே இந்த நிலைமையை தங்கள் நிதிநிலைக்குச்சாதகமாக எவ்வாறு பயன்படுத்தலாம் என்று சதித்திட்டமிடுவதும் வழக்கமாகிவிட்டது.*

*புவி தன் பாதையில் தனக்கேயுரிய நிதானத்துடன் கதிரவனை சுற்றிவந்துகொண்டிருந்தது.*

*கதிரவ ஒளி ஆரதனைச்சுற்றியுள்ள சகதியை உலரச்செய்யத்தொடங்கியிருந்தது.*

*ஆரதன் மீது மீண்டும் ஒரு நிழல் படர்ந்தது.*

*'ஏ, ஆரதா' என்றது நிழல்.*

*ஆரதன் கண்களை ஒடுக்கி கதிரவ ஒளியை எதிர்த்து பார்த்தபோது தனக்கு நேர் மேலாக டாட்டா நிற்பதைக்கண்டு வியப்புற்றான்.*

*'டாட்டா, நீயா? எப்படியடா இருக்கிறாய்?'*

*'நன்றாகத்தான் இருக்கிறேன். நீ ஏதும் வேலையாய் இருக்கிறாயா?'*

*'வேலையா? என் வீடு இடிபடாமல் தடுப்பதற்காக இந்த நிலச்சமமாக்கியின்முன் படுத்திருக்கவேண்டியுள்ளது. மற்றப்படி சும்மாதான் இருக்கிறேன். ஏன் கேட்கிறாய்?'*

*எதிர்மறைக்கேலிப்பேச்சு ஆதிரையில் இல்லை. அதிகக்கவனம் செலுத்தாமலிருக்கும்போது டாட்டாவுக்கு அது புரியாமல் போவதுண்டு. 'சரி, அப்படியானால் நாம் எங்காவது போய் பேசலாமா?' என்றான்.*

*'எதைப்பற்றி?'*

*சில கணங்களுக்கு டாட்டா ஆரதனைக்கவனியாமல் எங்கோ ஒரு குறிப்பிட்ட இடத்தில் நோக்குவதுபோல் வானத்தை நோக்கி அச்சத்துடன் பார்த்துக்கொண்டிருந்தான், ஓடும் உந்துவண்டியின் முன் வந்துவிட்ட முயலைப்போல. பிறகு திடீரென்று ஆரதனின் அருகில் அமர்ந்தான்.*

*'நான் உன்னிடம் பேசவேண்டும்,' என்றான் அவசரமாக.*

*'சரி, பேசு.'*

*'மதுக்கடையில். அருகிலுள்ள சொக்கனார் மதுக்கடைக்கு செல்லலாம் வா.'*

*மீண்டும் வானத்தை பார்த்தான், ஏதோ எதிர்பார்ப்புடனும் அச்சத்துடனும்.*

*'உனக்கு ஒன்றுமே புரியவில்லை. அதோ நிற்கும் மனிதர் என் வீட்டை இடிக்கப்போகிறார்.'*

*'அதை உன் உதவி இல்லாமலே செய்து முடிப்பாரே? நீ இருக்கவேண்டுமா?'*

*'எனக்கு என் வீட்டை இடிக்கவேண்டாம்.'*

*'ஓ!'*

*'இங்கே பார் டாட்டா! உனக்கு என்ன வேண்டும் இப்போது?'*

*'ஒன்றுமில்லை. எனக்கு ஒன்றும் வேண்டாம். ஆனால் நான் சொல்வதை கேள். நான் கேள்விப்பட்ட ஒரு முக்கியமான செய்தியை உன்னிடம் சொல்லவேண்டும். இப்போதே சொல்லவேண்டும். சொக்கனார் மதுக்கடையில்வைத்து சொல்லவேண்டும்.'*

*'அங்கே ஏன்?'*

*'மதுவின் உதவியில்லாமல் நான் சொல்லப்போவதை உன்னால் தாங்க இயலாது.'*

*டாட்டா ஆரதனை விழித்துப்பார்த்தான். ஆரதன் தன் மனவலிமை குறைவதை உணர்ந்து வியப்புற்றான். பீற்றா ஓரியன் விண்மீன் அமைப்பிலுள்ள கிறுக்கியைட்டுச்சுரங்கப்பட்டையின்*

*சேவைக்கான உயர்வெளிநிலையத்தில் டாட்டா கற்ற குடிவிளையாட்டின் விளைவுகளை ஆரதன் அறிந்திருக்கவில்லை.*

*அந்த விளையாட்டு புவியில் சிலர் விளையாடும் மங்காத்தா போன்றது. அது கீழ்க்கண்டவாறு விளையாடப்படும்:*

*இரண்டு போட்டியாளர்கள் எதிரெதிரே அமர்ந்துகொள்வார்கள். ஒவ்வொருவர் முன்பும் ஒரு குவளை இருக்கும்.*

*நடுவில் ஒரு புட்டி தம்மாரி இருக்கும் (தொன்மையான ஓரியன் சுரங்கப்பாடலில் வருவது: 'யம்மாடி, யம்மாடி, போதுமிந்தத் தம்மாரி! தள்ளாடித் தடுமாறி நான்விழுவ தென்னாடி? திண்டாடும் என்தலைக்கு கொண்டாட்டம் போதுமடி. நாளைக்கும் கொஞ்சம் வேண்டுமடி, வைப்பாட்டி!')*

*இரண்டு போட்டியாளர்களும் தங்கள் மனவலிமையால் புட்டியை அடுத்தப்பக்கம் சரித்து எதிராளியின் குவளையில் ஊற்ற முயற்சிப்பார்கள். அவ்வாறு ஊற்றப்பட்ட தம்மாரியை எதிராளி குடிக்கவேண்டும்.*

*புட்டி மீண்டும்மீண்டும் நிரப்பப்பட்டு விளையாட்டு தொடரும்.*

*முதலில் தோற்பவர் தொடர்ந்து தோற்றுக்கொண்டே இருப்பதற்கு அதிக வாய்ப்பு இருக்கிறது, ஏனென்றால் தம்மாரியின் ஒரு விளைவு மனத்தின் சாலுணர்மையை குறைப்பதாகும்.*

*முன்பே முடிவுசெய்து வைத்திருந்த அளவான தம்மாரி காலியானதும் இறுதியில் தோற்றவர் பந்தயப்படி நடந்துகொள்ளவேண்டும். பெரும்பாலும் அவர் வெட்கப்படும்படியான ஆபாசச்செயல் ஏதாவது செய்யவேண்டியதிருக்கும்.*

*டாட்டா தோற்பதற்காகவே இதை விளையாடுவதுண்டு.*

*டாட்டா ஆரதனை பார்த்துக்கொண்டேயிருந்தான். ஆரதனின் மனத்தில் சொக்கனார் மதுக்கடைக்குச்செல்ல அவனே மிகவும் விரும்புவதுபோன்ற ஓர் எண்ணம் உண்டாயிற்று.*

*'ஆனால் என் வீடு என்ன ஆகும்?' என்று கெஞ்சிக்கேட்டான்.*

*டாட்டா பரசுராமைப்பார்த்தான். ஒரு குறும்பு எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது.*

*'அவர் உன் வீட்டை இடிக்கப் போகிறாரா?'*

*'ஆம். ஏதோ நெடுஞ்சாலை ...'*

*'ஆனால் நீ நிலச்சமமாக்கியின் முன்பு படுத்திருப்பதால் இடிக்க இயலவில்லை. அப்படித்தானே?'*

*'ஆம். அதாவது ...'*

*'அதற்கு நாம் ஓர் ஏற்பாடு செய்துகொள்ளலாம்' என்று சொல்லிப் பரசுராமைப் பார்த்து 'ஐயா' என்று கூவினான்.*

*திரு. பரசுராம் ஆரதனின் அப்போதைய நிலைமை தங்கள் மனநலத்தை பாதிக்கலாம் என்று நிலச்சமமாக்கி ஓட்டுநர்கள் சொல்லி அதற்கான பண ஈடு கேட்டதற்கு எதிராக வாதிட்டுக்கொண்டிருந்ததை விடுத்து திரும்பிப்பார்த்தார். ஆரதனின் அருகில் யாரோ நிற்பதை கண்டு வியப்பும் சற்று முன்னெச்சரிக்கையும் அடைந்தார்.*

*'என்ன ...' என்றவர், டாட்டாவின் முகத்தோற்றத்திலிருந்து அவன் வயதை கணிக்கவியலாமல், 'என்ன தம்பி' என்பதா, 'என்ன ஐயா' என்பதா என்று முடிவு செய்யாமல் 'என்ன' என்பதுடன் நிறுத்திக்கொண்டார். 'ஆரதனுக்கு அறிவு வந்துவிட்டதா?' என்றும் கேட்டார்.*

*'இப்போதைக்கு இல்லை என்றே வைத்துக்கொள்வோம்' என்றான் டாட்டா.*

*‘சரி ...’*

*‘அவன் இன்று முழுவதும் இவ்வாறே கிடக்கப்போகிறான் என்றும் வைத்துக்கொள்வோமா?’*

*‘அதனால்?’*

*‘அதனால், உம் தொழிலாளிகளும் ஒன்றும் செய்யாமல் சும்மா நின்று கொண்டிருக்கப்போகிறார்களா?’*

*‘இருக்கலாம். வேறென்ன செய்வது?’*

*‘அப்படித்தான் நடக்கப்போகிறதென்றால், இவன் இங்கு படுத்திருக்க வேண்டியது அவசியமில்லை, அல்லவா?’*

*‘என்ன?’*

*‘இவன் உமக்கு தேவையில்லை’ என்று டாட்டா நிதானமாகச் சொன்னான்.*

*திரு. பரசுராம் சற்று சிந்தித்துப்பார்த்தார்.*

*‘அதுவும் சரிதான் ... அவன் இருந்து ...’ என்று சொல்லத்தொடங்கினாலும் பரசுராமுக்கு எங்கோ ஏதோ உதைப்பதுபோன்ற ஒரு கவலை ஏற்பட்டது.*

*‘ஆகவே அவன் இங்குக் கிடப்பது போலவே நீங்கள் கருதினால், நானும் அவனும் சொக்கனார் மதுக்கடையில் அரைமணி நேரம் இருக்கலாம், அல்லவா?’*

*இது மிகவும் சரியானதாகவே பரசுராமுக்கு தோன்றியது.*

*‘அது சரியாகத்தான் தோன்றுகிறது’ என்று உற்சாகமூட்டும் வகையில் சொன்னார், யாரை உற்சாகமூட்டுகிறார் என்று விளங்காமலே.*

*‘அதன்பிறகு நீங்களும் சென்று ஒரு மடக்கு அருந்தி வரவேண்டுமானால் நாங்கள் உங்கள் இடத்தை பார்த்துக்கொள்கிறோம்.’*

*‘நன்றி. மிக்க நன்றி’ என்ற திரு. பரசுராம், இதற்கெல்லாம் வேறு எப்படி பதில்சொல்வதென்று விளங்காதவராய், ‘நீங்கள் மிகவும் நல்லவர்கள்’ என்று முடித்தார். தன் மோதிரத்தை திருப்பிக்கொண்டே, முதலில் முகத்தை சுளித்தார்; பிறகு புன்முறுவலித்தார்; பிறகு இரண்டையும் ஒரே நேரத்தில் செய்ய முயன்று தோற்றார். வாதத்தில் தாம் வெற்றியடைந்ததாக எண்ணிக்கொண்டார்.*

*‘ஆகவே இங்கு வந்து இப்படிப் படுங்கள்!’ என்றான் டாட்டா.*

*‘என்ன?’ என்றார் திரு. பரசுராம்.*

*‘ஓ, மன்னிக்கவும். நான் முழுவதுமாக விளக்கிச்சொல்லவில்லை. நிலச்சமமாக்கியின் முன் யாராவது படுத்திருக்க வேண்டும், அல்லவா? அப்படியானால்தானே ஆரதன் வீட்டின்மீது அவை ஓடவிடாமல் தடுக்க இயலும்?’*

*‘என்ன?’ என்றார் திரு. பரசுராம் மீண்டும்.*

*‘மிக எளிது. என் நண்பன் ஆரதன் இங்கிருந்து எழுந்திருக்கவேண்டுமானால் அதற்கு ஒரு நிபந்தனை சொல்கிறான். தனக்குப்பதிலாக நீங்கள் இங்கு படுக்கவேண்டும் என்பதுதான் அது.’*

*‘ஏய், என்னடா சொல்கிறாய்?’ என்று எதிர்ப்புத் தெரிவிக்கத்தொடங்கிய ஆரதனை காலால் தட்டி சும்மா இருக்கச்செய்தான் டாட்டா.*

*‘நான் அங்கே வந்து படுக்க வேண்டுமா?’ என்று தன்னைத்தானே சரிபார்த்துக் கொள்வது போன்ற குரலில் திரு. பரசுராம் கேட்டார்.*

*‘ஆம்.’*

*‘நிலச்சமமாக்கியின் முன்!’*

*‘ஆம்.’*

*‘சகதியில்!’*

*‘சகதியாக உங்களுக்கு தோன்றுவதில்.’*

*பரசுராமுக்குத் தானே தோல்வியுற்றவராக தோன்றத்தொடங்கியதும்தான் பெரிய நிம்மதியாக இருந்தது. அதுதானே வழக்கமாக நடப்பது! தன்மீதிருந்த ஒரு பெரிய சுமை இறங்கியதுபோல் ஒரு பெருமூச்சு விட்டார்.*

*‘அதற்குப் பதிலாக நீயும் ஆரதனும் மதுக்கடைக்கு செல்வீர்கள்!’*

*‘அப்படியேதான்.’*

*‘நிச்சயமாகவா?’*

*‘நிச்சயமாக,’ என்று சொல்லி ஆரதனை நோக்கி, ‘எழுந்திரு. இவர் படுக்கட்டும்,’ என்றான்.*

*ஆரதனும் ஏதோ கனவில் இருப்பது போல் எழுந்தான்.*

*டாட்டா பரசுராமை அழைத்தான். அவர் தடுமாற்றத்துடன் சகதியில் அமர்ந்து கையை கீழே ஊன்றி சரிந்தார். சகதி அவர் தொப்பையை வளைத்துச்சூழ்ந்தது. அவர் தன் வாழ்க்கை முழுவதுமே ஒரு கனவு போல் உணர்ந்தார். யாருடைய கனவோ, அவர்களுக்கு அது பிடித்திருக்கிறதோ என்றெல்லாம் வியந்தார்.*

*டாட்டா அவரை கடுமையாகப் பார்த்தான்.*

*‘நாங்கள் இல்லாதபோது ஆரதனின் வீட்டை இடிக்க மாட்டீர்களே!’ என்றான்.*

*‘அவ்வாறான எண்ணம் என் மனத்தின் எந்த மூலையிலும் எழுவதற்கான சாத்தியம் இம்மியளவும் இல்லை’ என்று மன்றாடினார்.*

*நிலச்சமமாக்கி ஓட்டுநர்களின் நிற்பாளர் அணுகுவதைக்கண்டு தலையை தொங்கவிட்டு கண்களை மூடிக்கொண்டார். அவரது அப்போதைய நிலைமை ஓட்டுநர்களின் மனநலத்துக்கு கேடுவிளைவிக்காது என்பதற்கான விவாதங்களை மனத்துள் திரட்டத்தொடங்கினார். ஆனாலும் அவருக்கு நிச்சயமாகத்தெரியவில்லை. அவர் மனம் இரைச்சலாலும் குதிரைகளாலும் புகையாலும் நிரம்பியிருந்தது. அவர் ஊக்கமிழந்து சோர்வடைந்து இருக்கும்போதெல்லாம் வரும் இந்தக்கற்பனையை அவரால் விளக்க இயலவில்லை. ஒருவேளை நாமறியாத உயர்வெளியில் வீரனான ராஜராஜசோழன் கோபத்தால் குமுறலாம். ஆனால் திரு. பரசுராம் சற்று மெதுவாக நடுங்கி மட்டும் அடங்கினார். மூடிய இமைகளுக்குள் சில துளிகள் பெருகுவதை உணர்ந்தார். அரசின் ஆணவம், சகதியில் படுத்த கோபமான மனிதன், பெயர் தெரியாத யாரோ ஒருவனிடமிருந்து இனம்புரியாத ஏளனம், அவர் தலைக்குள் குதிரைப்படைவீரர்களின் ஏளனச்சிரிப்பு! என்னதான் நடக்கிறதோ இன்று!*

*என்னதான் நடக்கிறதோ இன்று! ஆரதனின் வீடு இன்று இடிபடுவதற்கும் இடிபடாமல் இருப்பதற்கும் ஒரு வேறுபாடும் இல்லை என்பது டாட்டாவுக்கு தெரியும்.*

*ஆரதன் கவலையுடனே இருந்தான்.*

*‘அவரை நம்பலாமா?’ என்று கேட்டான்.*

*‘நானாயிருந்தால், அவரை இந்த உலகம் முடியும்வரை நம்புவேன்’ என்றான் டாட்டா.*

*‘அப்படியா? அது எத்தனைமணிநேரம்?’ என்றான் ஏளனமாக.*

*‘சுமார் பன்னிரண்டு நிமிடங்கள்!’ என்ற டாட்டா மதுக்கடையை நோக்கி விரைந்தான்.*

# *அத்தியாயம் 2*

*ஆல்ககாலைப்பற்றி பால்வீதியக்கலைக்களஞ்சியம் சொல்வது என்னவென்றால், அது ஒரு நிறமற்ற துரிதாவிநீர்மம் என்பதும், சர்க்கரைகள் நொதிப்பதால் உண்டாகிறது என்பதுமே. கரிம அடிப்படையில் அமைந்த சில உயிரினங்களின்மீது அதற்குள்ள போதையூட்டப்பண்பையும் குறிப்பிடுகிறது.*

பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி*யும் ஆல்ககாலைப்பற்றி சொல்கிறது. இருப்பவற்றுள் நல்ல ஆல்ககால்பானம் அகிலண்டத்தொண்டையுறுமி என்கிறது.*

*அகிலண்டத்தொண்டையுறுமியின் விளைவு எலுமிச்சஞ்சாறுபிழிந்த ஒரு தங்கச்செங்கல்லால் மூளையை நசுக்குவது போலிருக்கும் என்கிறது.*

*நல்ல அகிலண்டத்தொண்டையுறுமி எந்தெந்த கோள்களில் கிடைக்கும், என்னவிலை, அதன் விளைவுகளிலிருந்து மீள்வதற்கு எந்தெந்த அறக்கட்டளையொருங்கமைப்புகளின் உதவிகளை நாடலாம் என்ற விவரங்களையும் பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி தருகிறது.*

*நீங்களே அதை எவ்வாறு கலந்துகொள்ளலாம் என்பதையும் இந்த வழிகாட்டி சொல்கிறது.*

*அதன்படி, ஒரு புட்டி தம்மாரிச்சாற்றை எடுத்துக்கொள்ளவும்.*

*ஐந்தாம் சந்திரகினியத்தின் கடல்நீரை சமவளவில் ஊற்றவும்.*

*இந்த கலவையில் ஆர்க்கிரியப்பெருங்கின் கட்டிகள் (சரியான உறைநிலையில் பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும்; இல்லாவிட்டால் அதிலுள்ள பென்சீன் ஆவியாகியிருக்கும்) மூன்றை உருகவிடவும்.*

*இதில் நான்கு இலிட்டர் விழுமவிழுதுவளிமத்தை குமிழவிடவும். விழுமவிழுதின் இன்பத்துக்காக உயிரைவிட்ட சாதனையாளர்களை இங்கு நினைவுகூர்க.*

*ஒரு வெள்ளிக்கரண்டியின் பின்புறம் ஒரு துளி குவாலக்கமிகைத்துளசிச்சாற்றை மிதக்கவிட்டுக்கலக்கவும். இது ஒருவித இனிப்பும் புதிரான மணமும் அளிக்கிறது.*

*ஓரந்தோலியவரிச்சிங்கத்தின் பல்லை போட்டு, அது கரைந்து அந்தோலியக்கதிரவனின் வெப்பம் பானத்தின் உட்புறத்தில் பரவிமுடியும்வரை காத்திருக்கவும்.*

*சுவைக்குத்தகுந்தவாறு கரிணத்தை தெளிக்கவும்.*

*மிகக்கவனத்துடன் குடிக்கவும்.*

பால்வீதியக் கலைக்களஞ்சியத்தை விட பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி அதிகம் விற்பனையாகிறது.

‘கசப்பு அறுநூறு மில்லி’ என்று சொக்கனார் மதுக்கடை சிப்பந்தியிடம் டாட்டா சொன்னான். ‘சீக்கிரம்! உலகம் முடியப் போகிறது’ என்றும் அவசரப்படுத்தினான்.

இம்மாதிரியான அவசரமெல்லாம் சொக்கனார் மதுக்கடை சிப்பந்தியிடம் செல்லாது. மதிப்புக்குரிய வயதுடைய அவர் தன் கண்ணாடியை மூக்கில் தூக்கிச்சரிசெய்து டாட்டாவை ஏறிட்டுப்பார்த்தார். அவரை புறக்கணித்து டாட்டா சாளரத்தின் வழியே பார்த்தான். சிப்பந்தி ஆரதனைப்பார்த்தார். அவன் ஒன்றும் சொல்லாமல் பணிவுடன் அவரை பார்த்தான்.

ஆகவே சிப்பந்தி, ‘அப்படியா? ஆம், மழை வரும்போல்தான் இருக்கிறது’ என்று சொல்லிக்கொண்டே குவளைகளை எடுத்தார்.

*மீண்டும் பேச்சுக்கு இழுக்கப்பார்த்தார்.*

*'அப்படியானால் இன்று மாலை விளையாட்டுப்போட்டியை பார்க்கப்போகிறீர்களா?'*

*டாட்டா அவரை ஒருகணம் பார்த்து மீண்டும் சாளரப்பக்கம் திரும்பிக் கொண்டான்.*

*'அதற்கு அவசியமே இல்லை' என்றான்.*

*'என்ன? புலிக்காளைகள் தோற்றுவிடுவார்கள் என்று ஏற்கெனவே முடிவுசெய்துவிட்டீர்களா?'*

*'இல்லை. அப்படியொன்றும் இல்லை. உலகம்தான் முடியப்போகிறது.'*

*'ஆம். அதை ஏற்கெனவே சொல்லியிருக்கிறீர்கள்' என்று சொல்லி தன் மூக்குக்கண்ணாடிக்கு மேலாக ஆரதனைப்பார்த்தார். 'அப்படி முடிந்துவிட்டால் புலிக்காளைகளுக்கு நல்லதுதான்.'*

*டாட்டா உண்மையான வியப்புடன் அவரை நிமிர்ந்துபார்த்தான்.*

*'இல்லை. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை.'*

*சிப்பந்தி பெரிதாக மூச்சுவிட்டுக்கொண்டு, 'இதோ, அறுநூறு மில்லி,' என்று கொண்டுவந்து வைத்தார்.*

*ஆரதன் அவரைப்பார்த்து புன்னகைத்தான், டாட்டாவை பொருட்படுத்தாதீர்கள் என்ற வகையில்.*

*மதுக்கடையைச்சுற்றி ஒரு பார்வை பார்த்துக்கொண்டான். வேறு யாருக்கும் கேட்டிருந்தால் அவர்களும் டாட்டாவை பொருட்படுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளும் வகையில்.*

*வேறு யாருக்கும் அது கேட்டிருக்கவில்லை. ஆகையால் இவன் ஏன் அவர்களைப்பார்த்து புன்னகைக்கிறான் என்று யாருக்கும் விளங்கவில்லை.*

*டாட்டாவின் அருகில் அமர்ந்திருந்த ஒரு மனிதன் அவர்கள் இருவரையும் பார்த்தான். அவர்கள் முன்னிருந்த அறுநூறு மில்லியையும் பார்த்தான். விரைவாக ஒரு மனக்கணக்கு போட்டுப்பார்த்தான். விடை அவனுக்கு பிடித்தமானதாக இருந்தது. ஆகையால் ஓர் எதிர்பார்ப்புடன் அவர்களைப்பார்த்து இளித்தான்.*

*'உன் வேலையைப்பார்த்துக்கொண்டு போ. இதை நாங்கள் கவனித்துக் கொள்வோம்' என்று சொல்லி டாட்டா ஒரு பார்வை பார்த்தான். அவ்வாறான பார்வையைக்கண்டபின் ஒரு வங்காளப்புலியும் தன் வேலையைப்பார்த்துக்கொண்டு போயிருக்கும்.*

*ஓர் ஆயிரம் ரூபாய் நோட்டை வீசி 'சில்லரையை வைத்துக்கொள்' என்றான் டாட்டா.*

*'ஆயிரத்திலா? நன்றி!' என்றார் சிப்பந்தி.*

*'அதை செலவுசெய்ய இன்னும் பத்து நிமிடங்கள் இருக்கின்றன,' என்றான் டாட்டா.*

*ஆயிரம் கிடைத்த மகிழ்ச்சியில் சிப்பந்தி அகன்றார்.*

*'டாட்டா, என்னடா இதெல்லாம்?' என்றான் ஆரதன்.*

*'குடி! நிறையக் குடி! இன்னும் நானூறு மில்லி இருக்கிறது.'*

*'நானூறு மில்லி? அதுவும் இந்த நேரத்திலா?'*

*டாட்டாவின் அருகிலுள்ள மனிதன் மீண்டும் இளித்து மகிழ்ச்சியுடன் தலையசைத்தான். டாட்டா அவனைப் புறக்கணித்து, 'நேரம் என்பது ஒரு மாயத்தோற்றம்,' என்றான்.*

*'ஆகா! நல்ல வேதாந்தம்! நீ இதை ஆனந்த விகடனுக்கு அனுப்ப வேண்டும். உன்னைப்போன்றவர்களுக்காகவே அவர்கள் ஒரு பக்கம் ஒதுக்கியிருக்கிறார்கள்.'*

*'குடி, குடி!'*

*‘இன்று ஏன் இவ்வளவு வாங்கினாய்?’*

*‘தசைகளை நெகிழ்விக்க. உனக்கு தேவைப்படும்.’*

*‘தசைகளை நெகிழ்விக்கவா?’*

*‘ஆம். தசைகளை நெகிழ்விக்க!’*

*ஆரதன் தன் குவளையை உற்று நோக்கினான்.*

*‘நான் இன்று ஏதாவது தவறு செய்தேனா? அல்லது உலகம் எப்போதும் இப்படித்தான் என்பதை நான்தான் இதுவரை கவனிக்கத்தவறிவிட்டேனா?’*

*‘சரி, சரி. உனக்கு விளக்க முயல்கிறேன். நாம் இருவரும் எவ்வளவு காலம் நண்பர்களாய் இருந்திருக்கிறோம்?’*

*‘எவ்வளவு காலம்?’ ஆரதன் சற்றுச் சிந்தித்து பிறகு சொன்னான், ‘ஐந்து வருடம் இருக்கலாம். இல்லை, ஆறு. ஆனால் அப்போதெல்லாம் நீ இவ்வளவு கோட்டிக்காரனாக தோன்றவில்லை.’*

*‘சரி, சரி. நான் கலப்பாடிக்காரன் என்று முன்பு சொன்னது தவறு என்றும், உண்மையில் நான் ஆதிரை அருகிலுள்ள ஒரு சிறு கோளிலிருந்து வந்தவன் என்றும் சொன்னால் நீ அதை எப்படி எடுத்துக்கொள்வாய்?’*

*மீண்டும் உளறுகிறான் என்றெண்ணி, ஆரதன் உதட்டைப்பிதுக்கி தலையை ஆட்டினான்.*

*‘தெரியவில்லை. நீ என்ன அப்படியெல்லாம் சொல்கிற ஆளா?’ என்று சொன்னான் ஒரு மடக்கு உறிஞ்சிக்கொண்டே.*

*டாட்டா இந்த முயற்சியை கைவிட்டான். இதையெல்லாம் விளக்கிப்பயனில்லை, உலகம் முடியப்போகும் இந்த வேளையில்.*

*‘குடி, குடி’ என்று மட்டும் மீண்டும் சொன்னான்.*

*‘உலகம் முடியப் போகிறது.’ என்று அனைவரும் அறிந்த சாதாரண உண்மையைச்சொல்வதுபோல் சொன்னான்.*

*ஆரதன் சுற்றியிருந்தவர்களை மீண்டும் ஒரு முறை பார்த்து புன்முறுவலித்தான். மற்றவர்கள் அவனைப்பார்த்து முகஞ்சுளித்தார்கள். ஒரு மனிதன் அவர்களைப்பார்த்துச் சிரிக்காமல் தன் வேலையைப் பார்க்கும்படி கையை அசைத்தான்.*

*‘ஓ, இன்று வியாழக்கிழமை! வியாழக்கிழமைகளை மட்டும் என்னால் புரிந்துகொள்ளவே இயல்வதில்லை’ என்று ஆரதன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.*

# *அத்தியாயம் 3*

*அந்த குறிப்பிட்ட வியாழக்கிழமையன்று, புவிக்கோளின் மேற்பரப்புக்கு பல கிலோமீட்டர் உயரத்திலுள்ள அயனிக்கோளத்தில் ஏதோவொன்று அமைதியாக நகர்ந்து கொண்டிருந்தது. ஓர் ஏதோவொன்றன்று; பல ஏதோவொன்றுகள்; மஞ்சள்நிறமும் கட்டிடங்கள்போன்ற மாபெரும் அளவும் செவ்வகத்தடிப்பாளவடிவமும் கொண்ட பல ஏதோவொன்றுகள் பறவைகள்போன்ற அமைதியுடன் நகர்ந்துகொண்டிருந்தன. கதிரவன் என்ற விண்மீனின் மின்காந்தக்கதிர்களை பருகிக்கொண்டு, அவை குழுவாகப்பிரிந்தும் இணைந்தும் தங்கள் வேலையை திட்டமிட்டுக்கொண்டு நிதானமாக அலைந்தன.*

*அவை வந்திருப்பதை கீழே கோளில் இருந்தவர்கள் யாரும் அறிந்திருக்கவில்லை; சந்தேகிக்கவும் இல்லை. அதைத்தான் அவையும் விரும்பின. அந்த பெரிய மஞ்சள்நிற ஏதோவொன்றுகளை திருவரிக்கோட்டையில் உள்ள யாரும் காணவில்லை. அவை மறைந்தவாறே கனவரல் முனைக்கு நேராகவும் வந்தன. கூன்கில்லியிலும் அவை எந்தச்சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. ஊமராவிலும், சாத்திரல் வங்கியிலுமிருந்நவர்கள் கண்களில் அவை அகப்படவில்லை. பாவம், இதுபோன்ற ஒன்றைத்தான் அவர்கள் பல ஆண்டுகளாக தேடிப்பார்த்து காத்திருந்தனர்.*

*அவை பதிவான ஒரேயொரு இடம், யாருமறியாமல் தானே மினுங்கிக்கொண்டிருந்த 'துணையீதவுணர்வதானி' என்ற ஒரு சிறு கருப்புக்கருவிதான். அது டாட்டா தன் கழுத்தைச்சுற்றி வழக்கமாக அணியும் ஒரு தோலாலான தோட்பையின் இருளில் அமுங்கிக் கிடந்தது. அவன் பையின் உள்ளடக்கங்கள் மிகவும் விந்தையானவை. அவற்றை புவியிலுள்ள ஓர் இயற்பியலாளர் கண்டால் வியப்பால் அவர் விழி பிதுங்கி தலையிலிருந்து தெரித்துவிடும். அதனால்தான் டாட்டா தான் நடிப்பதற்காக ஒத்திகை பார்த்துவரும் நாடகவசனங்கள் என்ற பெயரால் பல கசங்கிய காகிதங்களை மேலே வைத்து மறைத்திருந்தான். துணையீதவுணர்வதானியும் நாடகவசனங்களும் தவிர, மின்கட்டைவிரல் எனப்படுவதும் ஒரு முனையில் இரண்டு தட்டைப்பொத்தான்களும் சுழற்றிகளும் கொண்டதுமாகிய ஒரு வழவழப்பான மங்கலான கருப்புநிற குட்டைக்கம்பியும், ஒரு பெரிய மின்கணிப்பானைப்போல் காட்சியளித்த வேறொரு கருவியும் வைத்திருந்தான். இந்தக்கருவியில் சுமார் நூறு தட்டையான நுண்பொத்தான்களும் சுமார் பத்து செமீ அகலமான சதுரமான திரையும் இருந்தன. இந்தத்திரையில் இருமடியாயிரம் 'பக்கங்களில்' ஒன்றை ஒரு கண நேரத்தில் அழைத்துக்கொள்ளலாம். இது மயக்கமூட்டும் வகையில் சிக்கலானதாக தோன்றியது; இதுவே, அது இறுக்கமாகப்பொருந்துவதற்கான நெகிழ்ம உறையின் மீது 'பயப் படாதீர்கள்' என்ற சொற்கள் பெரிய அழகான எழுத்துக்களால் எழுதப்பட்டிருந்ததன் காரணங்களில் ஒன்று. இரண்டாவது காரணம் என்னவென்றால், இந்தக் கருவிதான் சிறுகரடியிலுள்ள மாபெரும் பதிப்பகங்களிலிருந்து வெளிவந்தவற்றில் மிகவும் தனிச்சிறந்ததாகிய பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி என்ற நூலாகும். இந்நூல் ஒரு நுண்துணைமேசான்மின்னகைவடிவில் பதிக்கப்பட்டிருப்பதன் காரணம், காகிதப்புத்தகவடிவில் அச்சிட்டால் ஒரு விண்மீனிடைப்பயணி அதை வைத்து எடுத்துச்செல்வதற்கு பல பெரிய கட்டடங்கள் தேவைப்படும்.*

இவையெல்லாவற்றுக்கும் அடியில் டாட்டாவின் பையில் சில கைரங்களும், ஒரு குறிப்புப்புத்தகமும், குமரன் துணிக்கடையில் வாங்கிய ஒரு வேட்டித் துண்டும் இருந்தன.

*வேட்டித்துண்டைப்பற்றி பால்வீதியின் பயணிக்களுக்கான ஒரு வழிகாட்டி கீழ்க்கண்ட விவரங்களை தருகிறது.*

*விண்மீனிடைப்பயணிகளுக்கு மிக அதிக அளவில் பயன்தரக்கூடியது ஒன்று உண்டென்றால் அது வேட்டித்துண்டுதான். வேட்டித்துண்டுக்கு பல நடைமுறைபயன்கள் இருக்கின்றன. பீட்டா சகலனின் குளிர் நிலாக்களில் நடக்கும்போது குளிராமல் மூடிக்கொள்ளலாம். ஐந்தாம் சந்திரகினியத்தின் பளிங்குமணற்கடற்கரையில் வேட்டித்துண்டை விரித்து படுத்துக்கொண்டு அதன் ஆவியை*

*முகர்ந்துகிடக்கலாம். பாலைவன உலகமாகிய கற்கபூனில் தெளிவாக ஒளிரும் விண்மீன்களடியில் படுப்பதற்கு வேட்டித்துண்டை கூடாரமாகப்பயன்படுத்தலாம். கைவையாற்றின் மிதமான நீரோட்டத்தில் படகு ஓட்ட மரப்பாயாகப்பயன்படுத்தலாம். கைச்சண்டையில் வேட்டித்துண்டை நனைத்துப்பயன்படுத்தலாம். புன்னாற்றமுடைய புகைகளைத்தடுக்க மூக்கைமூடி கட்டிக்கொள்ளலாம். திராலின் அண்டப்பசியதிர்விலங்கின் (கொஞ்சமும் அறிவில்லாதது; நாம் அதைப்பார்க்காவிட்டால் அது நம்மைப்பார்க்கவியலாது என்ற எடுகோளுடையது; ஆனால், கண்டதையெல்லாம் தின்றுவிடும் பண்புடையது) பார்வையை தவிர்ப்பதற்கு கண்களை மறைத்துக்கொள்ளலாம். நெருக்கடிநேரங்களில் உதவி கோருவதற்கு வேட்டித்துண்டை வேகமாக ஆட்டலாம். இவ்வளவுக்குப்பின்னும் அதிகம் அழுக்காகாமல் இருந்தால், குளித்தபின் துடைத்துக்கொள்ளவும் பயன்படுத்தலாம்.*

*மேலும் முக்கியமாக, வேட்டித்துண்டு அளவிலா மனவியல் வலுவுடையது. ஒரு விரங்கனிடம் (அனுபவமிக்க விண்மீனிடைப்பயணி) வேட்டித்துண்டு இருப்பதை ஒரு மரங்கன் (அனுபவமில்லாத விண்மீனிடைப்பயணி) கண்டால், எக்காரணத்தாலோ விரங்கனுடன் மரங்கன் மிகவும் மரியாதையுடன் நடந்துகொள்கிறான். விரங்கனிடம் வேட்டித்துண்டு இருந்தால், அவனிடம் பற்றூரிகை, பற்பசை, சோப்பு, சீப்பு, பிளேடு, ஊசி, நூல் கண்டு, விண்வெளிக்கவசம் இவ்வாறானவையும் இருக்கவேண்டும் என்று மரங்கன் தானாகவே எண்ணிக்கொள்கிறான். ஆகையால், இவற்றில் ஏதாவதொன்று விரங்கனிடமிருந்து 'தொலைந்து' போயிருந்தால், அதை மரங்கன் மிக்க மகிழ்ச்சியுடன் தந்து உதவுகிறான். நேரத்துக்கு உணவில்லாமலும் கிடைத்த இடங்களில் உறங்கியும் மேலும் பல இடையூறுகளுடனும் விண்மீனிடைவெளியின் அகல ஆழங்களில் பயணம் செய்யும் வழக்கமுடையவன் தன் வேட்டித்துண்டை தொலைக்காமல் இன்னும் வைத்திருந்தால் அவன் மிகவும் தேர்ச்சியுடையவனாக இருக்கவேண்டும் என்று மரங்கன் கருதுவது இயல்பே.*

டாட்டாவின் தோட்பையில் வேட்டித்துண்டைத்தழுவிக்கிடந்த துணையீதவுணர்வதானி மேலும் அவசரமாக மினுங்கத்தொடங்கியது. கோளின் மேற்பரப்பின் பல கிலோமீட்டர் உயரே மஞ்சள் நிற ஏதோவொன்றுகளின் அணிவகுப்பு விரியத்தொடங்கியது. திருவரிக்கோட்டையில் ஒருவர் அதுதான் காப்பி குடித்து ஓய்வெடுக்க சரியானநேரம் என்று முடிவு செய்தார்.

'உன்னிடம் வேட்டித்துண்டு இருக்கிறதல்லவா?' என்று டாட்டா ஆரதனிடம் கேட்டான்.

ஆரதன் மீண்டும் உதட்டைப்பிதுக்கி தலையையாட்டி சுற்றிலுமுள்ளவர்களை பார்த்தான்.

'இல்லையே! ஏன்?' என்றான். டாட்டா சொல்வதற்கெல்லாம் வியப்படைவதில் பயனில்லை என்ற முடிவுக்கு வந்திருந்தான்.

டாட்டா வெறுப்புடன் சூக்கொட்டினான்.

'குடி, குடி,' என்று அவசரப்படுத்தினான்.

அந்த நேரத்தில் மதுக்கடையிலுள்ள ஒலிபெருக்கியையும் டாட்டா தன் அருகிலிருந்த மனிதனுக்கு இறுதியில் வாங்கிக்கொடுத்துவிட்ட இருநூறு மில்லியால் அவனிடமிருந்து ஏற்பட்ட விக்கலொலியையும் மீறிக்கொண்டு தடதடவென்ற நொறுங்கொலி வெளியேயிருந்து கேட்டது.

ஆரதன் தான் குடித்துக் கொண்டிருந்த பானத்தில் விக்கி திடீரென்று எழுந்தான்.

'என்ன அது?' என்று வீரிட்டான்.

'கவலைப் படாதே. அவர்கள் இன்னும் தொடங்கவில்லை,' என்றான் டாட்டா.

'அப்பாடா, நல்ல வேளை!' என்று சொன்ன ஆரதன் சற்றுத்தணிந்தான்.

'இது உன் வீடு இடிபடும் ஒலிதான்' என்றான் டாட்டா, தன் பானத்தை முடித்துக்கொண்டே.

*'என்னது?' என்று ஆரதன் இரைந்தான். டாட்டா ஏற்படுத்தியிருந்த மாயை திடீரென்று அகன்றது. மருட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்து சாளரத்தினருகில் சென்றான்.*

*'ஐயோ! இடிக்கத்தான் செய்கிறார்கள். இந்தநேரம்பார்த்து என்னை ஏன் மதுக்கடைக்குக்கூட்டிவந்தாய், டாட்டா?'*

*'இப்போது அதனால் ஒன்றும் ஆகிவிடாது. அவர்கள் மகிழ்ச்சியாக இருந்துவிட்டுப்போகட்டுமே' என்றான் டாட்டா.*

*'மகிழ்ச்சியா?' என்ற ஆரதன் சாளரம்வழியே மீண்டும் வெளியே பார்த்தான், டாட்டா சொல்வதும் தான் நினைப்பதும் ஒன்றைப் ற்றித்தானா என்ற ஐயத்தை தீர்த்துக்கொள்ளும் வகையில்.*

*'மகிழ்ச்சி, என்ன மகிழ்ச்சி? நிறுத்துங்களடா, முரடர்களா!' என்று கூவிக்கொண்டு கிட்டத்தட்ட வெறுமையான குவளையை கோபத்துடன் வீசிக்கொண்டு மதுக்கடையிலிருந்து வெளியேறி வீதியில் ஓடினான். அந்நேரத்தில் மதுக்கடையில் இருந்தவர்கள் ஆரதனுடன் நட்பு வைத்துக்கொள்வதை விரும்பியிருக்க மாட்டார்கள்.*

*டாட்டா அவனை பின்தொடர்ந்து போகவேண்டும். கடைக்காரரிடம் அவசரமாக நான்கு பொட்டலங்கள் நிலக்கடலை கேட்டான்.*

*'இந்தாருங்கள், ஐயா. நாற்பது ரூபாய்,' என்று சொல்லி கடைக்காரர் எடுத்துப்போட்டார்.*

*டாட்டா இன்னோர் ஆயிரம் ரூபாயை வீசியெறிந்துவிட்டு சில்லரையை வைத்துக்கொள்ளச்சொன்னான். கடைக்காரர் ஆயிரம் ரூபாயைப்பார்த்தார். பிறகு டாட்டாவைப்பார்த்தார். திடீரென்று அவர் உடல் நடுங்கியது. அவருக்கு அந்தக்கணத்தில் உண்டான உணர்ச்சியை அவரால் புரிந்துகொள்ள இயலவில்லை, ஏனென்றால் அது புவியிலிருப்பவர்கள் யாருமே அதற்குமுன் உணராதது. நெருக்கடிநிலையின் உச்சக்கட்டமான நேரத்தில் ஒவ்வொரு உயிரினமும் ஒரு சிறு மென்மையான நிமிண்டலை வெளியிடுகிறது. இந்த நிமிண்டல் அந்த உயிரினம் தன் பிறப்பிடத்திலிருந்து எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்பதன் ஒரு மீச்சரியான அளவிடுதலைக்காட்டுகிறது. புவியில் தான் பிறந்த இடத்திலிருந்து சுமார் இருபத்தாறாயிரம் கிலோமீட்டர்கள் தொலைவுக்கு மேல் ஒருபோதும் இருக்க இயலாதாகையால், இந்த விளைவு உணரக்கூடிய அளவுக்கு பெரியதாக இருப்பதில்லை. டாட்டா இந்த நேரத்தில் அதிக நெருக்கடி நிலையில் உணர்ந்தான். அவன் அறுநூறு ஒளியாண்டுகளுக்கப்பால் உள்ள ஆதிரையருகில் பிறந்தவன்.*

*புரியாததும் அதிர்ச்சியளிப்பதுமாகிய தொலைவுவிளைவையுணர்ந்த மதுக்கடைச்சிப்பந்தி ஒருகணம் தலைசுற்றவதுபோல் உணர்ந்தார். அது என்னவென்று புரியாவிட்டாலும், டாட்டாவை ஒரு அச்சங்கலந்த மரியாதையுடன் நோக்கினார்.*

*'உண்மையாகவா, ஐயா?' என்று மதுக்கடையையே அமைதியில் ஆழ்த்தும் குரலில் கேட்டார், 'உண்மையாகவே உலகம் முடியப் போகிறதா?'*

*'ஆம்,' என்றான் டாட்டா.*

*'இன்று மாலையேவா?'*

*டாட்டா அதற்குள் நெருக்கடியுணர்விலிருந்து மீண்டு, தன் சிரிப்புணர்வு மனநிலைக்கு திரும்பியிருந்தான்.*

*'ஆம். என் கணக்குப்படி இன்னும் இரண்டு நிமிடங்களுக்குள்,' என்று மகிழ்ச்சியாகச்சொன்னான்.*

*மதுக்கடைச்சிப்பந்தியால் தன் காதுகளை நம்பவியலவில்லை.*

*'அப்படியானால் நாம் என்ன செய்யவேண்டும்?' என்றார்.*

*'ஒன்றும் செய்யவேண்டியதில்லை' என்றான், நிலக்கடலைப்பொட்டலங்களை தன் பையில் திணித்துக்கொண்டே.*

*எல்லாரும் எவ்வளவு மடையர்களாக இருக்கிறார்கள் என்று நினைத்து மதுக்கடையிலிருந்த யாரோ ஒருவர் உரக்கச் சிரித்தார்.*

*டாட்டாவினருகில் அமர்ந்திருந்த மனிதன் அப்போது கொஞ்சம் சரிந்துகிடந்தான். அவன் கண்கள் டாட்டாவை நோக்கி அசைய முயன்றன.*

*'உலகம் முடியப்போகும்போது, கீழே படுத்துக்கொண்டு தலையை மூடிக்கொள்ள வேண்டாமா?'*

*'நீ விரும்பினால் அப்படியே செய்,' என்றான் டாட்டா.*

*'பட்டாளத்தில் அப்படித்தான் சொல்லிக்கொடுத்தார்கள்,' என்ற மனிதன் மிகுந்த சிரமத்துடன் கண்களையும் கையையும் தன் குவளையை நோக்கிய நீண்ட பயணத்தில் செலுத்தினான்.*

*'அப்படிச்செய்வது பயனளிக்குமா?' என்று மதுக்கடைச்சிப்பந்தி கேட்டார்.*

*'பயனளிக்காது,' என்று சொல்லி நட்புடன் சிரித்த டாட்டா, 'மன்னிக்கவும். எனக்கு வேலையிருக்கிறது,' என்று சொல்லி அகன்றான்.*

*மதுக்கடையில் சில கணம் அமைதி நிலவியது. பிறகு அதே மனிதன் மீண்டும் பெரிதாக நகைத்தான். அவன் தள்ளிக்கொண்டு வந்திருந்த பெண் கடந்த சில மணி நேரங்களில் அவனை வெகுவாக வெறுக்கத்தொடங்கியிருந்தாள். இன்னும் ஒன்றரை நிமிடத்தில் அந்த மனிதன் நீரியம், மூச்சியம், கரிம ஒற்றைமூச்சியைடு கலந்த ஆவியாக பொசுக்கென்று போய்விடுவான் என்றறிந்தது ஒரு பெரிய மனநிறைவை அளித்தது. ஆனால், அதை பார்க்கக்கொடுத்துவைக்காமல் அவளும் அதே நேரத்தில் ஆவியாகிக்கொண்டிருப்பாள்.*

*மதுக்கடைச்சிப்பந்தி தொண்டையை கனைத்துக்கொண்டு, 'யாருக்காவது ஏதும் வேண்டுமா? கடை மூடப் போகிறது' என்றார்.*

*மாபெரும் மஞ்சள் நிற எந்திரங்கள் கீழே அமிழத்தொடங்கி வேகத்தை அதிகரித்தன.*

*அவை வந்திருப்பது டாட்டாவுக்கு தெரியும். அவன் எதிர்பார்த்தது இந்தவிதத்தில் நடப்பது அவனுக்கு பிடிக்கவில்லை.*

*ஆரதன் ஓடிவந்து கிட்டத்தட்ட தன் வீட்டையடைந்துவிட்டான். அப்போது திடீரென்று அவ்வளவு குளிர் வந்துவிட்டதை அவன் உணரவில்லை. திடீரென்று காற்றும் மழையும் வந்துவிட்டதை கவனிக்கவில்லை. அவன் வீடாயிருந்த மண்மேட்டின் மீது ஊர்ந்து தவழும் நிலச்சமமாக்கிகளைத்தவிர அவன் வேறெதையும் கவனிக்கவில்லை.*

*'ஏ, காட்டுமிராண்டிகளா! ஊராட்சி மீது வழக்குத்தொடர்வேன். உங்களை வெட்டிக்கூறுபோட்டு சவுக்கடிகொடுத்து கொதிக்கவைத்து ...' என்று தன் எண்ணங்களை வடிக்க சொற்கள் கிடைக்காமல் திண்டாடினான்.*

*டாட்டா அவனைத்தொடர்ந்து மிக வேகமாக ஓடிவந்தான்; மிக மிக வேகமாக.*

*'பிறகு மீண்டும் வெட்டிக்கூறுபோடுவேன்!' என்று கத்திய ஆரதன், 'வெட்டிய சிறு சிறு துண்டுகளை தரையில்போட்டு அதன்மீது ஏறிக்குதிப்பேன்' என்றான்.*

*நிலச்சமமாக்கிகளிலிருந்து ஓடும் மனிதர்களை ஆரதன் கவனிக்கவில்லை. திரு. பரசுராம் கடுமையாக வானத்தை நோக்கிக்கொண்டிருந்ததை ஆரதன் கவனிக்கவில்லை. திரு. பரசுராம் கண்டது என்னவென்றால், மாபெரும் மஞ்சள் நிற எந்திரங்கள் மேகத்திலிருந்து விரைந்து வந்துகொண்டிருந்ததைத்தான். நம்பவியலாத மாபெரும் மஞ்சள்நிற ஏதோவொன்றுகள்.*

*'அப்படி குதித்துக்கொண்டேயிருப்பேன். என் கால்கள் கொப்பளிக்கும்வரை, அல்லது அதைவிடக்கொடியதான ஏதாவது என் மனத்தில் தோன்றும்வரை. அப்புறம் ...' என்று இரைந்துகொண்டே ஆரதன் ஓடிவந்தான்.*

*ஆரதன் திடீரென்று கால்தடுக்கி விழுந்து தரையில்புரண்டு மல்லாந்துகிடந்தான். உடனே அவன் விரல் மேல்நோக்கி நீண்டது.*

*'ஏய், என்ன அது?' என்று கிரீச்சிட்டான்.*

*அது எதுவாயிருந்தாலும், வானத்தில் அரக்கத்தனமான மஞ்சள்நிறத்துடனும் மனத்தைக்கலங்கவைக்கும் ஒலியுடனும் காற்றைக்கிழித்துக்கொண்டு ஓடிவந்து சற்றுத் தள்ளிப்போய் காற்றிலே நின்றது. அது வந்து சென்றதால் பிளவுபட்ட காற்று மீண்டும் சேர்ந்தபோது காதுகளை மண்டைக்குள் இரண்டு மீட்டர் அமுக்கிவிடுவது போன்ற ஓரிடியொலி ஏற்பட்டது.*

*அதைத்தொடர்ந்து இன்னொன்று வந்து நின்றது, மேலும் அதிக ஓசையுடன்.*

*அப்போது கோளின் மேற்பரப்பிலுள்ள மனிதர்கள் என்ன செய்தார்கள் என்று சொல்வது கடினம், ஏனென்றால் அவர்கள் என்ன செய்தார்கள் என்பது அவர்களுக்கே தெரியவில்லை. அந்தச்செயல்களில் எதுவும் தெளிவாக இல்லை. சிலர் வீட்டுக்குள் ஓடினார்கள். வேறு சிலர் வீட்டுக்கு வெளியே ஓடினார்கள். சிலர் அந்த ஓசையில் அமுங்கி அமைதியாகிவிட்ட குரலில் அந்த ஓசையைப்பார்த்து கத்தினார்கள். உலகெங்கும் அந்த ஓசை விழுந்து மலைகளிலும் பள்ளத்தாக்குக்களிலும் பாலைவனங்களிலும் பெருங்கடல்களிலும் உருண்டோடியபோது, சாலைகளில் உந்துவண்டிகள் ஒன்றுடனொன்று மோதுவதும் தெருக்களில் மக்கள் ஒருவர்மீதொருவர் விழுவதுமாகிய காட்சி, அந்த ஓசையே எல்லாவற்றையும் தரைமட்டமாக்குவது போலிருந்தது.*

*ஒருவன் மட்டும் கண்களில் மிகுந்த கவலையுடனும் காதுகளில் தேய்ப்பித்தக்கைகளுடனும் அமைதியாக நின்று வானத்தைப்பார்த்து நின்றிருந்தான். நிகழ்வது என்னவென்று அவனுக்கு தெளிவாகத்தெரிந்தது. அவனுடைய துணையீதவுணர்வதானி நள்ளிரவில் மினுங்கி தூணருகில் தூங்கிக்கொண்டிருந்த அவனை மிரட்சியுடன் எழுப்பியபோதிருந்தே அது அவனுக்கு தெரிந்திருந்தது. இதற்காகத்தான் அவன் பல ஆண்டுகளாக காத்துக்கொண்டிருந்தான். ஆனால் தன் இருட்டறையில் தனியாக அமர்ந்து அந்த சைகைப்பாங்குகளை குறிநீக்கிப்பார்த்தபோது அந்தச்செய்தி அவன் இதயத்தைப்பிழிந்து அவன் உடலை வியர்க்கச்செய்தது. புவிக்கு வந்து மனிதர்களுடன் உறவாடக்கூடிய எத்தனையோ இனங்கள் விண்மீன்திரளில் இருக்க, வோகன்கள்தானா வரவேண்டும் என்று வருந்தினான்.*

*இருப்பினும் அவன் செய்யவேண்டியது என்னவென்று அறிவான். வோகன் வெளிக்கலம் அவனுக்கு மிக உயரத்தில் பாய்ந்து கொண்டிருந்தபோதே, பசகேனும் பலவண்ண ஆட்டுக்குட்டியும், கடவுள் அருள் ஆகிய இரண்டையும் தூக்கியெறிந்தான். அவன் போகுமிடத்துக்கு அவை தேவைப்படா. ஆயத்தமாக இருந்தான்.*

*அவன் வேட்டித்துண்டு இருக்கிறதா என்று பார்த்துக்கொண்டான்.*

*புவியில் திடீரென்று ஓர் அமைதி ஏற்பட்டது. அது ஓசையைவிட பயங்கரமானதாக தோன்றியது. ஒன்றும் நிகழவில்லை.*

*அந்த மாபெரும் வெளிக்கலங்கள் அசையாமல் வானத்திலேயே தொங்கிக்கொண்டிருந்தன, உலகின் ஒவ்வொரு நாட்டின் மீதும். இயற்கையை அவமதிப்பதுபோல் அவை பெரிதாக வானத்தை நிறைத்துக்கொண்டிருந்தன. மனிதர்கள் தாங்கள் காண்பதை புரிந்துகொள்ள முயன்றபோது பலர் மனங்கள் அதிர்ச்சியால் பித்துப்பிடித்துவிட்டன. செங்கற்கள் காற்றில் எப்படி நிலையாக இருக்கவியலாதோ அதேபோல் அந்த வெளிக்கலங்கள் நிலையாக நின்றன.*

*இன்னும் ஒன்றும் நிகழவில்லை.*

பிறகு ஒரு சிறு கிசுகிசுப்பு கேட்டது. திறந்த வெளியின் எல்லா இடங்களிலும் அந்த கிசுகிசுப்பு திடீரென்று கேட்டது. உலகிலுள்ள எல்லா உயர்பண் அமைப்புக்களும், எல்லா ஒலிபெருக்கிகளும், எல்லா வானொலிகளும், எல்லா தொலைக்காட்சிகளும், எல்லா பதிவுநாடாக்களும், எல்லா உறுமொலிப்பிகளும், எல்லா கீச்சொலிப்பிகளும், எல்லா நடுவொலிப்பிகளும் தானாக உயிர்பெற்றன.

ஒவ்வொரு தகரக்குப்பியும், ஒவ்வொரு குப்பைத்தொட்டியும், ஒவ்வொரு சாளரமும், ஒவ்வொரு உந்துவண்டியும், ஒவ்வொரு துருப்பிடித்த உலோகத்துண்டும் ஒரு கச்சிதமான ஒலியியல் கருவியாக மாறி ஒலித்தது.

உலகம் முடியும் முன்பு ஒரு மிகச்சிறந்த ஒலி மீளுருவாக்கத்தால் அது விருந்தளிக்கப்பட்டது. அதுவரை உருவாக்கப்பட்ட பொதுக்கூவல் அமைப்புக்களைவிட மாபெரும் தரமுடையது; ஆனால் அதில் ஒரு கச்சேரியில்லை; ஒரு இசையில்லை; ஓர் எளிய அறிவிப்புத்தான் இருந்தது.

*'புவியின் மக்களே, உங்கள் கவனத்துக்கு'* என்றது ஒரு குரல். அந்த ஒலி மிகவும் அருமையாக இருந்தது. அருமையான சூழொலியுடன் சற்றும் திரிதலில்லாமல் ஒரு தலைசிறந்த கேட்பொலிசுவைஞரும் வியக்குமளவு ஒலியியல் தூய்மையுடன் அந்த ஒலி கேட்டது.

*'விண்மீன்திரள் உயர்வெளி திட்டமிடும் மன்றத்தைச்சார்ந்த புரசவானிக வோகன் பேசுகிறேன். விண்மீன்திரளின் ஓரப்பகுதிகளை வளராக்குவதற்கான திட்டங்களின் ஒரு படியாக உங்கள் விண்மீனமைப்பின் வழியே ஓர் உயர்வெளித்துரிதச்சாலை கட்டுவது அவசியமாகிறது என்பது நீங்கள் அறிந்ததே. இடிப்பதற்காகக்குறிக்கப்பட்டவற்றுள் உங்கள் கோளும் ஒன்று என்பது வருந்தத்தக்கது. இரண்டு புவிநிமிடங்களில் எங்கள் வேலை முடிந்துவிடும். நன்றி.'*

பொதுக்கூவல் அமைப்பு நின்றுவிட்டது.

பார்த்துக்கொண்டிருந்த மக்களிடையே விளக்கவியலாத அச்சம் குடிகொண்டது. இரும்புத்தூள் உள்ள தாளின் அடிப்பாகத்தில் காந்தத்தை நகர்த்தும்போது இரும்புத்தூள் அசைவது போல் அந்த அச்சம் அவர்களிடையே மெதுவாக ஊர்ந்து சென்றது. ஓடி ஒளிந்துகொள்ளக்கூடிய பேரச்சம் எழுந்தது. ஆனால் ஓடுவதற்கு ஓரிடமும் இல்லை.

இதைக்கண்ட வோகர்கள் மீண்டும் தங்கள் பொதுக்கூவல் அமைப்பின் உதவியை நாடினர்.

*'இதனால் வியப்படைவதுபோல் நடந்துகொள்வதில் பயனில்லை. திட்ட வரிவரைவுகளும் இடிமான உத்தரவுகளும் திட்டமிடும் துறையின் உங்கள் கிளையாகிய ஆல்பா சென்றாரசுக்கிளையில் ஐம்பது புவியாண்டுகளாக பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. முறையாகப்புகாரளிப்பதற்கு உங்களுக்கு போதிய வாய்ப்பு இருந்தது. இப்போது காலம் பிந்திவிட்டபிறகு அமளிப்படுவதால் பயனில்லை.'*

பொதுக்கூவல் அமைப்பு மீண்டும் அமைதியானது. அதன் எதிரொலி புவிமீது உருண்டோடியது. அந்த மாபெரும் வெளிக்கலங்கள் மிக எளிதில் வானத்தில் மெதுவாக திரும்பின. ஒவ்வொன்றின் அடிப்பாகத்திலும் கருப்பு வெற்றிடமாகத்தோன்றிய ஒரு புகுவழி திறந்தது.

இதற்குள் எங்கோ யாரோ ஒரு வானலையனுப்பியைப்பயன்படுத்தி, ஒரு அலைநீளத்தைக்கண்டுபிடித்து, கோளின் சார்பாக ஒரு வேண்டுகோளை வோகன் கப்பலுக்கு அகற்பரப்பியிருக்க வேண்டும். அனுப்பப்பட்ட செய்தி யாருக்கும் கேட்கவில்லை. அதன் பதில்தான் கேட்டது. பொதுக்கூவல் அமைப்பில் கேட்ட குரல் சற்று எரிச்சலுடன் பேசியது.

*'என்ன, ஆல்பா சென்றாரசுக்கு நீங்கள் போகவேயில்லையா? நான்கு ஒளியாண்டுகள் அருகில்தானே இருக்கிறது? நீங்கள் உங்கள் வட்டார நடப்புக்களில் ஆர்வம் காட்டி பொறுப்பேற்று நடக்காவிட்டால் நான் என்ன செய்வது?'*

*'இடிமானக் கற்றைகளுக்கு ஆற்றலூட்டவும்.'*

புகுவழிகளில் வெளிச்சம் பாய்ந்தது.

*பொதுக்கூவல் குரல் ‘இல்லை! நம் விண்மீன்திரள் சமுதாய நலனில் உங்களுக்கு அக்கரை இல்லையென்றால் எனக்கும் உங்கள் மீது இரக்கமில்லை’ என்று சொல்லி சட்டென நின்றுவிட்டது.*

*ஒரு பயங்கர அசுர அமைதி நிலவியது.*

*ஒரு பயங்கர அசுர ஓசை கேட்டது.*

*ஒரு பயங்கர அசுர அமைதி நிலவியது.*

*வோகன் கட்டுமான அணிவரிசை வெளியின் மையிருளில் மிதந்து சென்றுவிட்டது.*

## *அத்தியாயம் 4*

*வெகு தொலைவுக்கப்பால், விண்மீன்திரளின் மறு சுருளிக்கையில், கதிரவனிலிருந்து ஐநூறாயிரம் ஒளியாண்டுகள் தொலைவில், பால்வீதியப்பேரரசு அரசாங்கத்தின் அதிபர் பீபிள்பிராசன் தமகிரனின் கடலில் தன் அயனியுந்தித்தெலடிப்படகு தமகிரவிண்மீனின் ஒளியில் மினுங்கவும் ஒளிரவும் உல்லாசமாக விரைந்து கொண்டிருந்தான்.*

*தமகிரன் உல்லாசமான இடம். தமகிரன் எளிதில் அணுகவியலாத தொலைவிலுள்ள இடம். தமகிரன் பெரும்பாலும் யாரும் கேள்விப்படாத இடம்.*

*தமகிரன் தங்க இதயத்தின் கமுக்கமான இருப்பிடம்.*

*படகு நீரை கிழித்துச்சென்றது. அது தன் சேருமிடத்தை அடைவதற்கு இன்னும் வெகுநேரம் ஆகும், ஏனென்றால் தமகிரன் சரியான ஒழுங்குமுறையில் அமைக்கப்படவில்லை. அதில் இருப்பதெல்லாம் பல பாலைவனத்தீவுகளும், அழகியதும் வெறுப்பூட்டும் வகையில் நீண்டதுமான பெருங்கடல்களும்தான்.*

*படகு விரைந்தது.*

*இந்த இடவியற்சங்கடத்தால் தமகிரன் ஒரு ஆளில்லாத கோளாகவே இருந்தது. அதனால்தான் பால்வீதியப்பேரரசு அரசாங்கம் தங்க இதயம் திட்டப்பணிக்காக தமகிரன் கோளை தேர்ந்தெடுத்திருந்தது. தங்க இதயம் கமுக்கமானதால் யாருமில்லாத இடமே சரியானது.*

*அந்தக்கோளிலே பயனுள்ள அளவில் இருந்த ஒரே தீவுத்தொகுதியின் முக்கியத்தீவுகளின் இடையிலிருந்த கடலில் படகு மிதந்தும் குதித்தும் கும்மாளமாகச்சென்றது. பீபிள்பிராசன் இலங்கை (இந்தப்பெயர் முற்றிலும் தற்செயலானது; பால்வீதியத்தில் இலங்கை என்ற சொல் சிறு தட்டையான பசுமையான ஓரிடம் என்று பொருள் படும்) தீவிலிருந்த ஒரு சிறு விண்வெளி நிலையத்திலிருந்து தங்க இதயமிருந்த தீவுக்கு சென்றுகொண்டிருந்தான். அந்தத்தீவின் பெயர் மலேசியா என்பது இன்னொரு தற்செயல்.*

*பல பொருளற்ற தற்செயல்கள் இருப்பது தங்க இதயத்துக்கான செயல்களின் ஒரு பக்கவிளைவு.*

*ஆனால், இந்த பணித்திட்டம் முடியும் நாளும், இந்த வெளியீட்டு விழா நாளும், விண்மீன்திரள் மெச்சும்படியாக இந்த தங்க இதயத்தை அறிவிக்கும் நாளுமாகிய இன்றுதான் பீபிள்பிராசன் முழுமையடையும் மாபெரும் நாள் என்பது தற்செயலன்று. முதலில் அவன் அதிபராக போட்டியிட முடிவு செய்தது இந்த நாளை எதிர்பார்த்துத்தான். அந்த முடிவு பால்வீதிப் பேரரசு முழுவதும் அதிர்ச்சி அலைகளை பரவச்செய்தது. என்ன, பீபிள்பிராசனா? அதிபரா? அந்தப்பீபிள்பிராசனா? அதிபராகவா? அண்டம் பைத்தியக்காரத்தனமானது என்பதற்கு இதுவே நிச்சயமான நிரூபணமாக பலர் இதைக்கண்டனர்.*

*பீபிள்பிராசன் தனக்குள் புன்னகைத்து, படகுக்கு மேலும் ஒரு உந்தம் கொடுத்தான்.*

*பீபிள்பிராசன் வீரதீரச்செயலாளன்; முன்னாள் தறுதலை; சிற்றின்பவிரும்பி; (திருடன்? இருக்கலாம்); தன்விளம்பரக்காரன்; மனிதவுறவுகளைப்பொறுத்தவரை, அவன் மண்டையில் ஏதாவது இருக்கிறதா என்று ஐயுறும் வகையில் தோல்வியடைபவன்.*

*அதிபர்?*

*அந்த அளவுக்கு யாருக்கும் பித்துப்பிடித்துவிடவில்லை.*

*விண்மீன்திரளிலே ஆறுபேருக்குத்தான் இந்த விண்மீன்திரள் ஆளப்படும் விதம் தெரியும். பீபிள்பிராசன் தான் அதிபருக்குப்போட்டியிடப்போவதாக அறிவித்ததும், அது கிட்டத்தட்ட முடிவான*

*செயலென்பதும், இவன்தான் அதிபராக இருப்பதற்கு தகுந்த ஆள்*[2] *என்பதும் அந்த ஆறுபேருக்கும் தெரிந்துவிட்டது.*

*அவர்களுக்கு முற்றிலும் விளங்காதது என்னவென்றால், பீபிள்பிராசன் ஏன் அதைச் செய்தான் என்பது.*

*கூர்மையாகத்திரும்பி ஒரு வீரிட்ட நீர்ச்சுவரை விண்மீனின்மீது அடித்துச்சென்றான்.*

*இன்றுதான் அந்த நாள். இன்றுதான் பீபிள்பிராசனின் நோக்கம் என்ன என்பதை அவர்கள் உணர்வார்கள். இன்றுதான் பீபிள்பிராசன் அதிபராயிருந்தது முழுமையான பொருளுடையதாகும் நாள். இன்று அவனுடைய இருநூறாவது பிறந்தநாளும் ஆகும்; ஆனால் அது மற்றொரு பொருளற்ற தற்செயல்.*

*அவன் படகு தமகிரனின் கடலில் தத்திச்சென்றுகொண்டிருக்க, அன்று நடக்கப்போகும் அருமையான வியப்பான நிகழ்ச்சிகளை எண்ணி தனக்குள் அமைதியாகச்சிரித்துக்கொண்டான். இருக்கையின் முதுகில் இரண்டு கைகளையும் விரித்து சோம்பேறித்தனமாகப்போட்டுக்கொண்டு தன் மூன்றாங்கையால் படகை எளிதாக ஓட்டினான். அந்த மூன்றாங்கை தன் குத்துச்சண்டைத்திறமையை மேம்படுத்துவற்காக வலதுகையின் அடியில் அண்மையில் அவன் பொருத்தியது.*

*'ஏய், சரியான ஆளடா, நீ' என்று தன்னைத்தானே பாராட்டிக்கொண்டான். ஆனால் அவன் நரம்புகள் வேறொரு பயந்தபாடலை மீட்டின.*

*மலேசியாத்தீவு சுமார் முப்பது கிலோமீட்டர் நீளத்திலும் நடுவில் எட்டு கிலோமீட்டர் அகலத்திலும் மணற்பரப்பு நிறைந்த பிறைவடிவத்தில் கிடந்தது. அது ஒரு தீவாக இருப்பதைவிட ஒரு மாபெரும் வளைகுடாவை வரையறுக்கும் வளைவுபோல தோன்றியது. அந்தப்பிறையின் உட்பக்கக்கடற்கரை பெரும்பாலும் செங்குத்தான மலைக்குன்றுகளாலானதாக இருந்தது அந்தத்தோற்றத்தை மேலும் வலியுறுத்தியது. மலையுச்சியிலிருந்து எட்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ள அடுத்த கடற்கரையை நோக்கி நிலம் மெதுவாகச்சரிந்தது.*

*மலையின் உச்சியில் ஒரு வரவேற்புக்குழு நின்றிருந்தது.*

*அந்தக்குழு பெரும்பாலும் தங்க இதயத்தை கட்டமைத்திருந்த பொறியாளர்களாலும் ஆய்வாளர்களாலும் ஆனது. அவ(ற்றில்/ர்களில்) பெரும்பான்மை(யானவை/யோர்) மனிதவனையங்கள்; ஆனால் ஆங்காங்கே சில ஊர்வனனைய அணுவினாளர்களும், இரண்டு அல்லது மூன்று பச்சையுதிலைபோன்ற மீயதிப்பேரணங்களும், ஒன்றிரண்டு எட்டுக்காலனைய இயட்டமைவியலாளரும், ஒரு கூலூவூவும் இருந்தன(ர்). (கூலூவூ என்ப(து/வர்) நீலநிறத்தின் உயர் அறிவுக்கூர்மையான ஒரு சாயல்).*

---

2*அதிபர்: பால்வீதிப்பேரரசின் அரசாங்க அதிபர் என்பது முழு அடைமொழி.*

*பேரரசு என்ற சொல் இப்போது ஒரு காலப்பிழையாயினும் அது தங்கிவிட்டது. மரபுவழிவந்த பேரரசர் கிட்டத்தட்ட இறந்துவிட்டார். பல நூற்றாண்டுகளாகவே கிட்டத்தட்ட இறந்தவராக இருக்கிறார். அவருடைய இறந்துபோகும் கடைசி ஆழ்மயக்கத்தின்போது ஒரு நிலைமப்புலத்தில் வைத்து பூட்டப்பட்டார். இது அவரை ஒரு முடிவுறா மாற்றமில்லா நிலையில் வைத்திருக்கிறது. அவருடைய வாரிசுகள் அனைவரும் இறந்துபோய் வெகுகாலமாகிறது. ஆகவே, எவ்வித அரசியற்புரட்சியும் இல்லாமலே ஆட்சித்திறன் பயனுறுவகையில் எளிதாக ஓரிரண்டு படிகள் கீழிறங்கிவந்து, முன்பு பேரரசருக்கு ஆலோசகர்களாய் விளங்கியோர் அடங்கியதும், தற்போது தேர்தலுற்றதுமான ஒரு குழுவிடம் அக்குழுவினரால் தேர்தலுற்ற அதிபரின் தலைமையில் இருப்பதாக கருதப்படுகிறது. ஆனால் உண்மையில் அது இதுபோன்ற ஓரிடத்தில் இல்லை.*

*முக்கியமாக, அதிபர் என்பவர் வெறும் பெயரளவில்தான். அவருக்கு உண்மையான அதிகாரம் ஏதும் இல்லை. அவர் அரசாங்கத்தால் விருப்பத்தேர்வு செய்யப்படுகிறார். ஆனால் அவரிடம் இருக்கவேண்டிய பண்புகள் ஒரு தலைவனுக்குத்தேவையான பண்புகளல்ல. மக்களுக்கு சீற்றமூட்டக்கூடியவராக அவர் இருத்தல் அவசியம். இந்தக்காரணத்தால் அதிபர் சிலருக்கு மோகமூட்டுபவராகவும் வேறுசிலருக்கு எரிச்சலூட்டுபவராகவும் விளங்கி எப்போதும் விவாதத்துக்கு உரியவராகவே இருக்கிறார். அவரது வேலை ஆட்சித்திறனை செலுத்துவதன்று; அதிலிருந்து கவனத்தை வேறிடத்துக்கு ஈர்ப்பதாகும். இந்த முடிவளவைகளால் பீபிள்பிராசன் பால்வீதியில் இருந்த எல்லா அதிபர்களிலும் மிக்க வெற்றிகரமானவன். அவன் ஏற்கெனவே தான் அதிபராயிருந்த பத்து ஆண்டுகளில் இரண்டை ஊழல் செய்ததற்காக சிறையில்கழித்திருக்கிறான். அதிபரும் அரசாங்கமும் ஆட்சித்திறனுடையவையல்ல என்பதை மிகமிகச்சிலரே உணர்கின்றனர். அந்த மிகச்சிலருள் ஆறுபேருக்கு மட்டுமே இறுதியான அரசியல்திறன் எங்கிருந்து செலுத்தப்படுகிறது என்பது தெரியும். மற்றவர்களுள் பெரும்பாலானோர் இறுதியான முடிவெடுத்தல் வழிமுறை ஒரு கணினியால் கையாளப்படுகிறது என்று கமுக்கமாக நம்புகிறார்கள். அவர்கள் நினைப்பதும் தவறு.*

*கூலூவூவைத்தவிர மற்ற(வை/வர்கள்) தங்கள் அடையாளமான பலவண்ண சோதனைச்சாலை அங்கிகளில் மிளிர்ந்தன(ர்). கூலூவூ இந்தத்தனிநிகழ்வுக்காக ஒரு தனிநிற்கும் பட்டகத்தில் தற்காலிகமாக ஒளிவிலகற்பட்டிருந்தார்.*[3]

*அங்கு ஓர் ஆர்ப்பாட்டமான மனநிலை எல்லாரிடமும் ஊடுருவி நின்றது. அவர்கள் அனைவரும் ஒன்றாகச்சேர்ந்து இயற்பியல் விதிகளின் எல்லைகளுக்கும் அதற்கப்பாலும் சென்றிருந்தனர்; பருப்பொருளின் அடிப்படை அமைப்பையே மீள்கட்டமைத்திருந்தனர்; சாத்தியவிதிகளையும் அசாத்தியவிதிகளையும் வளைத்தும் முறுக்கியும் திரிபுறச்செய்தும் உடைத்துமிருந்தனர். ஆயினும் ஓர் ஆரஞ்சு நிறத்துணியை கழுத்தைச்சுற்றி அணிந்திருந்த ஒரு மனிதனை சந்திப்பதில்தான் அவர்களுக்கு அதிக உற்சாகம் இருந்ததாகத்தோன்றியது. (ஆரஞ்சுநிற துணியை பால்வீதியதிபர் அணிவது மரபு). பால்வீதியின் அதிபருக்கு இருக்கும் திறன் எவ்வளவு (ஒன்றுமில்லை) என்ற உண்மை அவர்களுக்கு தெரிந்திருந்தாலும் ஒரு மாறுபாடும் இருந்திருக்காது. அதிபரின் வேலை ஆட்சித்திறனை செலுத்துவதன்று, அதிலிருந்து கவனத்தை வேறிடத்துக்கு ஈர்ப்பதே என்பது விண்மீன்திரளிலே ஆறுபேருக்குத்தான் தெரியும்.*

*பீபிள்பிராசன் தன் வேலையில் மிகவும் திறமைசாலியாக விளங்கினான்.*

*அதிபரின் படகு வளைகுடாவில் சீறி நுழைந்தபோது அது விண்மீன் ஒளியில் மிளிர்வதையும் அதிபரின் மாலுமித்திறனையும் கண்ட கூட்டத்தில் ஒரு வியப்பொலி எழுந்தது. பல சறுக்கல் திருப்பங்களுடன் கடலில் வழுக்கிக்கொண்டு வந்தபோது படகு மினுங்கி ஒளிர்ந்தது.*

*உண்மையில் அது நீரைத்தொடவேண்டிய அவசியமில்லை, ஏனென்றால் அது அயனியாக்கப்பட்ட அணுக்களாலான ஒரு சொகுசுமெத்தையால் தாங்கப்பட்டது. ஆனால் ஒரு விளைவுக்காகவே நீரில் இறக்கக்கூடிய மெல்லிய தகடுகள் அதில் பொருத்தப்பட்டிருந்தன. அவை நீரை காற்றில் ஒரு சீற்றத்துடன் சிதறடித்தன; கடலில் அவை உண்டாக்கிய வளைந்த ஆழமான பள்ளங்கள் நுரை நீரால் படகின் பின்பக்கம் மீண்டும் நிரம்பின.*

*பீபிள்பிராசன் விளைவை மிகவும் விரும்பினான்; அதுவே அவன் திறமை.*

*சக்கரத்தை வளைத்துத்திருப்பி கடலை மீண்டும் கீறிக்கொண்டு மலையடிவாரத்தில் ததும்பிதத்தளித்த நீரில் படகை அலைபாயவிட்டான்.*

*வினாடிகளில் மரப்பாலத்தில் ஓடி மூன்று மும்மடியாயிரம் மக்களைப்பார்த்துக்கையசைத்து சிரித்தான். மூன்று மும்மடியாயிரம் மக்களும் உண்மையில் அங்கில்லை. ஆனால் அவர்கள் அவன் ஒவ்வொரு அசைவையும் அவனருகில் காற்றில் பணிவுடன் தொங்கி அலைந்து கொண்டிருந்த சிறு முப்-பப்படக்கருவி எந்திரனின் கண்களால் பார்த்தனர். அதிபரின் குறும்புச்செயல்கள் வியத்தகு பிரபலமான முப்-பப்படங்களை உண்டாக்கின. அதற்காகத்தான் அவனும் அவற்றைச்செய்தான்.*

*அவன் மீண்டும் அகலமாகச்சிரித்தான். மூன்று மும்மடியாயிரம் மக்கள் தாங்கள் எதிர்பார்ப்பதற்கும் மேலான மிகப்பெரிய குறும்பு இன்று நடக்கப்போவதை அறிந்திருக்கவில்லை.*

*அவனுடைய இரண்டு தலைகளில் அதிகப்பிரபலமானதை நெருக்கக்காட்சி எடுப்பதற்காக எந்திரப்படக்கருவி அணுகியபோது மீண்டும் கையசைத்தான். அவனுடைய அதிகப்படியான தலையையும் மூன்றாவது கையையும் தவிர, தோற்றத்தில் சுமாராக மனிதவனையமாகவே இருந்தான். அவனுடைய கலைந்த செம்பட்டை முடி பல திசைகளில் நீண்டு நின்றது. அவனுடைய நீலக்கண்கள் இனங்காணவியலாத ஏதோவொன்றால் மிளிர்ந்தன. அவனுடைய நாடி எப்போதும் மழிக்கப்படாமலேயிருந்தது.*

*ஒரு பத்து மீட்டர் உயரமான ஒளிபுகு உருண்டை அவன் படகுக்கருகில் உருண்டும் தத்தளித்தும் ஒளிர்வான விண்மீன் ஒளியில் மினுமினுத்து மிதந்து கொண்டிருந்தது. அதனுள் சிவப்புத்தோலாலான ஒரு அரைவட்டவடிவ நீளிருக்கை பொலிவுடன் மிதந்துகொண்டிருந்தது. கோளம் எவ்வளவு உருண்டு தத்தளித்ததோ அந்த அளவுக்கு நீளிருக்கை கல்லால் செய்யப்பட்டதுபோல் இம்மியும் அசையாமல் இருந்தது. மற்றவற்றைப்போலவே இதுவும் ஒரு விளைவுக்காகத்தான் ஏற்படுத்தப்பட்டது.*

3 *மொ. கு: இனி நீங்களே திணை வேறுபாடின்றி வாசித்துக்கொள்ளவும். நான் மாற்றுத்திணைகளை அடைப்புக்குறிக்குள் எழுதமாட்டேன்; ஏனென்றால் என் ரம்மும் கோக்கும் தீர்ந்துபோகிறது.*

*பீபிள்பிராசன் கோளத்தின் சுவர்வழியாக நுழைந்து நீளிருக்கையில் அமர்ந்தான். நீளிருக்கையின் முதுகில் இரண்டு கைகளையும் விரித்து சோம்பேறித்தனமாக போட்டுக்கொண்டு தன் மூன்றாவது கையால் தன் முழங்காலில் தூசுதட்டுவதுபோல் தடவிக்கொண்டான். அவனுடைய தலைகள் சிரித்துக்கொண்டே அங்குமிங்கும் பார்த்தன. கால்களை மேலே தூக்கிப்போட்டுக்கொண்டான். எந்த நேரத்திலும் மகிழ்ச்சியால் கத்திவிடுவானோ என்று அவனே எண்ணினான்.*

*குமிழின் அடியில் கடல் சீறிக்கொந்தளித்து ஊற்றெடுத்துக்கொப்பளித்தது. குமிழ் காற்றில் மேலெழுந்து நீர்த்தாரையில் உருண்டு தத்தளித்தது. மலை முகட்டில் ஒளிக்கற்றைகளை வீசிக்கொண்டே குமிழம் மேலே மேலே சென்றது. ஊற்றின் நீர்த்தாரை அதன் அடியில் மோதி பல நூற்றுக்கணக்கான மீட்டர் கீழே உள்ள கடலில் வழிந்து விழுந்தது.*

*பீபிள்பிராசன் தன் தோற்றத்தை கற்பனையில் கண்டு புன்னகைத்தான்.*

*முற்றிலும் சிரிப்புக்கிடமான ஒரு போக்குவரத்து முறை. ஆனால் மிகவும் அழகானது.*

*மலையின் உச்சியருகில் குமிழம் ஒருகணம் தயங்கி அருகிலிருந்த பாட்டையில் ஓடி ஒரு குழிந்த மேடையில் வந்து பொருந்தி நின்றது.*

*தன் ஆரஞ்சுத்துணி வெளிச்சத்தில் மிளிர பீபிள்பிராசன் குமிழத்திலிருந்து வெளியேறியபோது பெருமளவு கைதட்டல் ஏற்பட்டது.*

*விண்மீன்திரளின் அதிபர் வந்துவிட்டார்.*

*கைதட்டல் அமரும்வரை காத்திருந்து, கையை உயர்த்தி வீசினான்.*

*'ஏய்' என்றான்.*

*ஓர் அரசாங்கச்சிலந்தி அவன் மீது ஊர்ந்துசென்று அவனுக்காகத்தயாரிக்கப்பட்ட பேச்சின் ஒரு நகலை அவன் கையில் அழுத்தமுயற்சித்தது. மூலத்தின் மூன்றாம் முதல் ஏழாம் வரையுள்ள பக்கங்கள் வளைகுடாவிலிருந்து ஐந்து கிலோமீட்டர் தொலைவில் தமகிரன் கடலில் மிதந்துகொண்டிருந்தன. முதலிரண்டு பக்கங்கள் ஒரு தமகிர ஓலைமுதுகுக்கழுகால் மீட்கப்பட்டு, அது கண்டுபிடித்த ஒரு புதுவிதமான கூட்டில் ஏற்கெனவே உள்ளடக்கப்பட்டு விட்டன. புதிதாக வடிவமைக்கப்பட்ட இந்தக்கூடு இனி அது பொறிக்கப்போகும் குஞ்சுகளால் கிழிக்கவியலாத வகையில் பெரும்பாலும் தாள்கூளத்தால் கட்டப்பட்டது. அந்தத்தமகிர ஓலைமுதுகுக்கழுகு தன் இனத்தின் பிழையாமை சாத்தியத்தைப்பற்றி கேள்விப்பட்டிருந்தது. அதையும் ஒருகை பார்த்துவிடலாம் என்று முடிவுசெய்திருந்தது.*

*தயாரிக்கப்பட்ட பேச்சு பீபிள்பிராசனுக்கு தேவையில்லாததால் சிலந்தி கொடுக்கமுயன்ற நகல்களுடன் அதையும் தன்மீதிருந்து தட்டிவிட்டான்.*

*'ஏய்' என்றான் மீண்டும்.*

*எல்லாரும் அவனைப்பார்த்து அகலச்சிரித்தார்கள் ஒருவரைத்தவிர. அந்தக்கூட்டத்திலும் திலக்கோமையை அவன் அடையாளம் கண்டுகொண்டான். வேடிக்கைக்காக ஒரு கோளுக்கு மாறுவேடத்தில் சென்றிருந்தபோது அவன் கண்டெடுத்த பெண் திலக்கோமை. அவள் மெலிந்த உடல், சிவந்த நிறம், மனிதவனையம், நீண்ட அலைக்கூந்தல், முழுமையான வாய், விந்தையான சிறு மூக்கு, நம்பவியலாத நீலக்கண்கள் ஆகிய பண்புகளை கொண்டிருந்தாள். குறிப்பிட்ட வகையில் தலையில் கட்டப்பட்ட சிவப்புக்கைக்குட்டையாலும் நீளமாகத்தொங்கும் பட்டொத்த நீலநிற ஆடையாலும் அவள் ஓர் அரேபியப்பெண்ணைப்போல் சிறிது தோன்றினாள். அங்குள்ளவர்கள் அரேபியர்களைப்பற்றி கேள்விப்பட்டதில்லை என்பது உண்மைதான். சமீபத்தில்தான் அரேபியர்கள் இல்லாமல் போனார்கள். அவர்கள் இருந்தபோதும் தமகிரனிலிருந்து ஐநூறாயிரம் ஒளியாண்டுகள் தொலைவில் இருந்தனர். திலக்கோமையைப்பற்றி எவ்வித முக்கியத்துவமும் இல்லை. அப்படித்தான் பீபிள்பிராசன் சொல்லிவந்தான். அவள் அவன் போகும் பல இடங்களுக்கும் சும்மா அவனுடன் சென்றுவந்தாள். அவனைக்குறைகூறி இடித்துரைத்து வந்தாள்.*

*'ஏய், கண்மணி!' என்று அவளைப்பார்த்து சொன்னான்.*

*அவள் ஒரு சிறு புன்னகையை விரைவாக வீசிவிட்டு வேறுபக்கம் திரும்பிக்கொண்டாள். பிறகு அவனை மீண்டும் நன்றாகப்பார்த்து ஒரு நட்புப்புன்னகையை வீசினாள். ஆனால் அப்போது அவன் வேறெதையோ பார்த்துக் கொண்டிருந்தான்.*

*'ஏய்' என்று அருகில் நின்றிருந்த ஒரு நிருபர்கூட்டத்தைப்பார்த்து சொன்னான். அவர்கள் அவன் ஏய் சொல்வதை விட்டுத் தங்களுக்குத்தேவையான மேற்கோள்வரிகளை விரைவில் தரமாட்டானா என்று பார்த்துக்கொண்டிருந்தனர். அவன் முக்கியமாக அவர்களைப்பார்த்துச்சிரித்தது ஏனென்றால், அவர்களுக்கு ஒரு மாபெரும் மேற்கோளை சிலகணங்களில் தரப்போவது அவனுக்கு மட்டுமே தெரியும்.*

*ஆனால் அடுத்தபடியாக அவன் சொன்னது அவர்களுக்கு அவ்வளவாகப்பயனளிப்பதாக இல்லை. கூட்டத்திலிருந்த அதிகாரிகளில் ஒருவர், அதிபர் அவருக்காகத்தயாரிக்கப்பட்டு சுவையூட்டப்பட்ட பேச்சை வாசிக்கும் மனநிலையில் இல்லை என்பதை எரிச்சலுடன் உணர்ந்து, தன் சட்டைப்பையில் வைத்திருந்த தொலைக்கட்டுப்படுத்தியை எடுத்து ஒரு பொத்தானை அழுத்தினார். அவர்களுக்கு முன்னால் வானத்தின் பெரும்பகுதியை மறைத்து துருத்திக்கொண்டிருந்த ஒரு மாபெரும் வெள்ளைக்குவிகூரை நடுவில் கீறலிட்டுப்பிளந்து பிரிந்து மெதுவாக மடிந்து தரையில் படிந்தது. அது இவ்வாறுதான் நடக்கும் என்று அனைவருக்கும் தெரிந்திருந்தது, ஏனென்றால் அவர்கள்தான் அதை அவ்வாறு கட்டியிருந்தார்கள். ஆயினும் அப்போது அனைவரும் வியப்பால் வாய்பிளந்தனர்.*

*திறந்த கூடாரத்தினுள் நூற்றைம்பது மீட்டர் நீளமானதும் ஒரு கச்சிதமான காலணியின் வடிவம் கொண்டதும் தூய வெண்மையானதும் மனங்கவர் அழகுடையதுமாகிய ஒரு மிகப்பெரிய விண்வெளிக்கலம் இருந்தது. இதயம் போன்ற அதன் உள்ளகத்தில் எங்கும் எவரும் எண்ணிப்பார்த்திராததும், மூளையைக்கசக்கக்கூடியதும், இந்த வெளிக்கலத்தை விண்மீன்திரளின் வரலாற்றிலேயே ஒருத்துவமானதாக ஆக்குவதும், தங்க இதயம் என்ற அந்தக்கப்பலின் பெயரை அளிப்பதும் ஆகிய ஒரு கருவியை உள்ளடக்கிய ஒரு தங்கப்பெட்டி இருந்தது.*

*'ஆ' என்றான் பீபிள்பிராசன், தங்க இதயத்தைப்பார்த்து. அவன் சொல்வதற்கு வேறொன்றும் இல்லை.*

*அது நிருபர்களுக்கு எரிச்சலூட்டும் என்று அவன் அறிந்திருந்ததால் மீண்டும் அதையே சொன்னான், 'ஆ'.*

*கூட்டத்தினர் ஓர் எதிர்பார்ப்புடன் தங்கள் முகங்களை அவனைநோக்கித்திருப்பினார்கள். அவன் திலக்கோமையைப்பார்த்துக்கண்ணடித்தான். அவள் புருவங்களை உயர்த்தி கண்கள்விரிய அவனைப்பார்த்தாள். அவன் என்ன சொல்லப்போகிறான் என்று அவளுக்குத்தெரியும். அவன் பெரும் பகட்டுக்காரன் என்று எண்ணினாள்.*

*'இது மிகவும் வியப்பானது. என்ன வியப்பு! இது வியப்பான வகையில் வியப்பாக இருக்கிறதே! எனக்கே இதைத் திருடுவதற்கு ஆசை வருகிறது.'*

*அதிபரிடமிருந்து ஓர் அருமையான மேற்கோள், அவருக்கே பொருத்தமான வகையில்! கூட்டத்தினர் பாராட்டுத்தெரிவித்து சிரித்தனர். நிருபர்கள் தங்கள் துணையீதச்செய்தியதானிகளில் பொத்தான்களை அமுக்கினார்கள். அதிபர் அகலச்சிரித்தார்.*

*அவன் சிரித்தபோது அவன் இதயம் தாங்கவியலாமல் அரற்றியது. தன் சட்டைப்பையில் அமைதியாக அடைக்கலமாகிக்கிடந்த முடக்குவதானிக்குண்டை விரல்களால் வருடிக்கொண்டான்.*

*இறுதியில் அதற்கு மேலும் பொறுக்க இயலாதவனாய் தன் தலைகளைத்தூக்கி வானத்தைப்பார்த்து உத்தமஸட்ஜமத்தில் ஓர் ஊளையிட்டு குண்டைத்தரையில் வீசிவிட்டு திடீரென்று உறைந்துவிட்ட சிரிப்புக்களின் நடுவே ஓடத்தொடங்கினான்.*

# *அத்தியாயம் 5*

*புரசவானிக வோகன் மற்ற வோகன்களின் பார்வையிலும் சகிக்கக்கூடிய தோற்றம் உடையவன் அல்லன். அவனுடைய கூடாரம் போன்ற மூக்கு பன்றிநெற்றிக்கு மேலாக உயர்ந்திருந்தது. அவனுடைய கரும்பச்சை தேய்ப்பித்தோல், வோகன் குடியியல் பணிகள் அரசியலில் வெற்றிகரமாக ஈடுபடுமளவு தடித்தும், பல ஆயிரக்கணக்கான மீட்டர் ஆழத்தில் கடலில் மூழ்கி ஒரு புன்விளைவுமில்லாமல் பிழைத்திருப்பதற்கு எற்றபடி நீர்கசியாததாகவும் இருந்தது.*

*அவன் நீந்துதலை பொழுதுபோக்காகக்கொண்டிருக்கவில்லை என்பது உண்மைதான். வேலைப்பழுவால் அதற்கெல்லாம் அவனுக்கு நேரமில்லை. அவன் அவ்வாறு இருப்பதன் காரணம், பல மும்மடியாயிரம் ஆண்டுகளுக்கு முன் அவன் மூதாதையர்கள் வோகோளின் முதற்காலக்கடல்களிலிருந்து ஊர்ந்து வெளியேறி அக்கோளின் கன்னிக்கடற்கரைகளில் மூச்சிறைத்துத்திணறிக்கிடந்தபோது, அந்தக்கதிர்வோக விண்மீனின் இளங்கதிர்களின் வெம்மை அவர்கள் மீது முதன்முதலாக விழுந்த அன்று காலை, பரிணாம விசைகள் அங்கே அப்போதே அவர்களைக்கைவிட்டு, அவர்களைப்பார்க்கச்சகிக்காமல் முகத்தைத்திருப்பிக்கொண்டு தாம் செய்த பிழைகளாக இவர்களைக்கருதி புறக்கணித்துப்போய்விட்டன. ஆகவே, வோகர்கள் பிழைக்காமல் போகாவிடினும், அதன்பிறகு பரிணமிக்கவே இல்லை.*

*அவர்கள் இன்னும் பிழைத்திருக்கிறார்கள் என்ற உண்மை இந்த நத்தைமூளை உயிரினங்களின் பிடிவாத குணத்துக்கு ஒருவிதச்சான்றிதழாக அமைகிறது. பரிணாமம்? யாருக்கு வேண்டும் அது? என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டார்கள். இயற்கை அவர்களுக்கு அளிக்க மறுத்தவை இல்லாமலே காலங்கழிக்கப்பழகிக்கொண்டனர். இறுதியில் சில பெருமளவு உடலியற்குறைபாடுகளை அறுவை சிகிச்சைகளால் சரிசெய்யவும் கற்றுக்கொண்டனர்.*

*இதற்கிடையில், வோகோளின் பரிணாம விசைகள் தங்கள் பிழையை நிவர்த்திப்பதுபோல் மேலும் அதிக முயற்சியுடன் வேலைசெய்து கொண்டிருந்தன. அவை பண்கறக்களுடன் மின்னொளிரும் நண்டுகளையும், மனங்கவர்வண்ணங்களில் மெலிந்து வான்தொடு உயரமாக வளரக்கூடிய மரங்களையும், பட்டுப்போன்ற தோலும் பனித்த கண்களும் கொண்ட கச்சிதமான மான்போன்ற விலங்குகளையும் உருவாக்கின. வோகன்கள் அந்த நண்டுகளைப்பிடித்து, இரும்பு பூட்டிய மரச்சுத்தியலால் அடித்து நசுக்கி உண்டனர். உயர்ந்த மரங்களை வெட்டி அவற்றின் கட்டைகளை எரித்து நண்டுகளை வாட்டுவதற்கு பயன்படுத்தினர். மான்களைப்பிடித்து அவற்றை தாங்கள் அமரும் இருக்கைகளாகப்பயன்படுத்தினர். அந்த மான்களின் முதுகுகள் எளிதில் உடைந்துவிடுவதால் அவை இருக்கைகளாக அதிகப் பயனளிக்கவில்லை. இருப்பினும் வோகன்கள் அவற்றின்மீது அமர்ந்தனர்.*

*இவ்வாறான சங்கடமான நிலையில் வோகோள் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளைக்கழித்தபின் வோகன்கள் திடீரென்று விண்மீனிடைப்பயணத்தை கண்டுபிடித்தனர். அதன்பின் சில குறுகிய வோக ஆண்டுகளிலே, வோகன்குடியியற்பணிகளரசியலின் பலவிண்மீன்மையமாகவும், விண்மீன்திரள்குடியியற்பணிகள்துறையின் முதுகெலும்பாகவும் விளங்கிய மெகபிராந்தியக்கூடலில் எல்லா வோகன்களும் குடியேறிவிட்டனர். அவர்கள் கல்விபெற முயன்றனர்; நாகரிகமடைய முயன்றனர்; சமூக நளினமடைய முயன்றனர். ஆயினும் பலவிதங்களில் அன்றைய வோகன் அவனுடைய முதற்கால மூதாதையரிலிருந்து சிறிதும் மாறுபடவில்லை. ஒவ்வோராண்டும் தங்கள் தோன்றிடக்கோளிலிருந்து பண்கறக்களுடன் மின்னொளிரும் இருபத்தேழாயிரம் நண்டுகளை இறக்குமதி செய்து, அவற்றை இரும்பு பூட்டிய மரச்சுத்தியலால் அடித்துத்தூளாக்கி தங்கள் ஓய்வுகால இரவுகளை குடிபோதை மகிழ்ச்சியுடன் கழித்தனர்.*

*புரசவானிக வோகனும் மற்றெல்லா வோகன்களைப்போன்றவன்தான்; அதாவது முற்றிலும் வெறுப்பூட்டக்கூடியவன். மேலும், திருட்டுப்பயணிகளைக்கண்டால் அவனுக்குப்பிடிக்காது.*

*புரசவானிக வோகனின் தலைமைக்கப்பலின் வயிற்றினுள் எங்கோ புதைந்துள்ள ஒரு சிறு இருட்டறையில் ஒரு தீக்குச்சி சற்றுப்பயத்துடன் எரியத்தொடங்கியது. அந்தத்தீக்குச்சியின் சொந்தக்காரன்*

ஒரு வோகன் அல்லன்; ஆனால் அவர்களைப்பற்றியும் அச்சப்படுவதற்கான காரணங்களையும் நன்கறிந்தவன். அவன் பெயர் டாட்டா[4].

அவன் அறையில் சுற்றுமுற்றும் பார்த்தான். ஆனால் அவனால் அதிகம் காணவியலவில்லை. அந்த சிற்றொளியால் ஏற்பட்ட அரக்க நிழல்கள் அதன் அசைவால் குதிப்பதுபோல் தோன்றின. மற்றப்படி அமைதியாக இருந்தது. அவன் தென்திராசியருக்கு அமைதியான ஒரு நன்றிப்பெருமூச்சு விட்டான். தென்திராசியர் என்பார் ஒரு கட்டுக்கடங்காத ஊண்சுவைஞர்[5] பழங்குடியினர்; துடுக்கானவர்கள், ஆயினும் இனிமையானவர்கள். சமீபத்தில் வோகன்கள் இவர்களை தங்கள் நெடுந்தொலைவு வெளிக்கலங்களில் சமையல்செய்வதற்காக, தங்கள் வேலையை மட்டும் பார்த்துக்கொண்டு வேறெதிலும் மூக்கை நுழைக்காமல் இருக்கவேண்டும் என்ற கடுமையான நிபந்தனையுடன், அமர்த்தியிருக்கின்றனர்.

அந்த நிபந்தனை தென்திராசியருக்கு ஏற்கக்கூடியதாகவே இருந்தது. அவர்கள் விண்வெளியில் நன்கு வரவேற்கப்பட்ட வோகன்பணத்தை மிகவும் விரும்பினர், ஆனால் வோகன்களை வெறுத்தனர். ஒரு வோகனைக்காண்பதைவிட அவர்கள் அதிகம் விரும்பியது ஓர் எரிச்சலடைந்த வோகனைக்காண்பது.

இந்த ஒரு மிகச்சிறு தகவலால்தான் டாட்டா இன்னும் நீரியம், மூச்சியம், கரிம ஒற்றைமூச்சியைடு கலந்த ஆவியாகாமல் இருந்தான்.

ஒரு சிறு முனகல் கேட்டது. அருகில் ஒரு கனத்த உருவம் தரையில் மெதுவாக நெளிவது தீக்குச்சியின் ஒளியால் தெரிந்தது. தீக்குச்சியை விரைவில் ஆட்டி அணைத்தான். தன் சட்டைப்பையில் கைவிட்டு தான் தேடியதை கண்டெடுத்தான். தரையோடு தரையாக ஒடுங்கினான். அந்த உருவம் மீண்டும் அசைந்தது.

டாட்டா சொன்னான்: ‘நான் கொஞ்சம் நிலக்கடலை வாங்கினேன்.’

ஆரதன் அசைந்து மீண்டும் முனகி தெளிவில்லாமல் ஏதோ பேசினான்.

‘இந்தா, கொஞ்சம் சாப்பிடு’ என்ற டாட்டா பொட்டலத்தை ஆட்டி அவசரப்படுத்தினான். ‘பருப்பொருள்மாற்றலனுப்பக்கற்றையின்மூலம் வருவது இதுதான் முதன்முறையானால் உப்பும் புரதமும் இழந்திருப்பாய். நீ குடித்த மதுபானம் கொஞ்சம் உன் உடலமைப்புக்களை மெதுவணைத்திருக்க வேண்டும்.’

‘ம்...வீ...யா...ஆ’ என்ற ஆரதன். கண்களைத் திறந்தான். ‘இருட்டாயிருக்கிறது’ என்றான்.

‘ஆம். இருட்டாயிருக்கிறது’ என்றான் டாட்டா.

‘ஒளியேயில்லை. இருட்டாயிருக்கிறது’ என்றான் ஆரதன்.

---

4 டாட்டாவின் மூலப்பெயர் ஒரு திட்டமற்ற ஆதிரை மொழியில் மட்டுமே உச்சரிக்கக் கூடியது. அந்த மொழியும், ஏழாம் ஆதிரைக்கோளின் பழங்குடிகளான அழியாக்காப்பட்டியல் சமுதாயத்தினரை துடைத்துவிட்ட 03758-ஆம் பால்வீதிய ஆண்டின் மாபெரும் கிரங்கிநொறுங்கப்பேரழிவுக்குப்பின் வழக்கொழிந்துவிட்டது. மாபெரும்கிரங்கிநொறுங்கப்பேரழிவில் ஒரு தற்செயலால் பிழைத்த ஒரே மனிதர் டாட்டாவின் தந்தைதான். அந்த தற்செயலை சரியான வகையில் விளக்க அவரால் ஒருபோதும் இயலவில்லை. அந்த முழு நிகழ்வும் ஓர் ஆழ்ந்த புதிரில் மூழ்கடிக்கப்பட்டிருந்தது: கிரங்கி என்பது என்ன என்பதும் அது நொறுங்குவதற்கு ஏன் ஏழாம் ஆதிரைக்கோளை தனியாகத்தேர்ந்தெடுத்தது என்பதும் யாருக்கும் விளங்கவில்லை. டாட்டாவின் தந்தை தன்னைச்சுற்றி படிந்த தவிர்க்கவியலாத சந்தேகமேகங்களை பெருந்தன்மையுடன் வீசிவிலக்கிவிட்டு, ஐந்தாம் ஆதிரைக்கோளில் வசிக்கவந்து, அங்கு டாட்டாவின் தந்தையாகவும் சித்தப்பாவாகவும் ஆனார். தன் மறைந்துபோன இனத்தின் நினைவாக அந்தத்தொன்மையான அழியாக்காப்பட்டியல் மொழியில் அவனுக்குப் பெயரிட்டார்.

டாட்டா தன் மூலப்பெயரைச்சொல்ல ஒருபோதும் கற்கவில்லை; ஆதலால் அவன் தந்தை இறுதியில் அவமானத்தால் இறந்தார். அவமானம் என்பது விண்மீன்திரளின் சில பகுதிகளில் இன்னும் ஓர் உயிர்நீக்க நோயாகவே இருந்துவருகிறது. பள்ளியில் மற்றக்குழந்தைகள் அவனுக்கு இச்சு என்று பெயரிட்டனர். ஐந்தாம் ஆதிரைக்கோளின் மொழியில் அதன் பொருள் ‘கிரங்கி என்பது என்ன என்பதையும் அது நொறுங்குவதற்கு ஏன் ஏழாம் ஆதிரைக்கோளைத்தேர்ந்தெடுத்தது என்பதையும் சரியான வகையில் விளக்கவியலாத பையன்’.

5 மொ. கு: எதிர்காலத்தில் வெகுவாகப் பழக்கத்தில் வரப்போகும் ‘ஊண்சுவைஞர்’ என்ற செந்தமிழ்ச்சொல் இன்றைய தமிழில் இல்லாததால், இந்தக் கருத்தை விளக்க ஒரு கொச்சை மொழியைப்பயன்படுத்த வேண்டிய அவசியத்துக்குள்ளாகிறேன்: தின்னிப்பண்டாரங்கள். இவர்கள் நன்றாக சமைப்பார்கள்; அதைவிட நன்றாக உண்பார்கள்.

*மனிதர்களைப்பற்றி டாட்டா புரிந்துகொள்வதில் மிகவும் கடினமாயிருந்தவற்றுள் ஒன்று, தெளிவாகத்தெரிவதை அவர்கள் சொல்வதும், அதையே மீண்டும் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருப்பதும். எடுத்துக்காட்டாக, மழை வரப்போகிறது, நீ நல்ல உயரம், விழுந்துவிட்டாயே கால் வலிக்கிறதா? என்பன போன்றவை. இந்த விந்தையான நடத்தையை விளக்க டாட்டா முதலில் ஒரு கோட்பாட்டை உருவாக்கினான். மனிதர்கள் தங்கள் உதடுகளுக்கு பயிற்சியளித்துக்கொண்டிராவிட்டால் அவர்கள் வாய் வேலைசெய்யாமல் போய்விடும் என்றெண்ணினான். சில மாத ஆய்வுக்குப்பின் அந்த கோட்பாட்டை கைவிட்டு ஒரு புதிய கோட்பாட்டை மேற்கொண்டான். அவர்கள் தங்கள் உதடுகளுக்கு பயிற்சியளித்துக்கொண்டிராவிட்டால் அவர்கள் மூளை வேலைசெய்யத்தொடங்கிவிடும் என்று எண்ணினான். சில நாட்களுக்குப்பின், அந்தக் கோட்பாடு மனிதர்களை ஏளனம் செய்வதாகும் என்று கண்டு அதையும் கைவிட்டு, மனிதர்களை அவர்கள் இருக்கும் விதத்திலே தனக்குப்பிடித்திருந்தது என்ற முடிவுக்கு வந்தான். ஆனால் அவர்களுக்குத்தெரியாத பலவற்றையும்பற்றி அவன் மிகவும் கவலையுடனே இருந்தான்.*

*'ஆம். ஒளியில்லை' என்று ஆரதனுடன் உடன்பட்டான். ஆரதனுக்கு சில நிலக்கடலைகளை ஊட்டினான். 'இப்போது உனக்கு எப்படியிருக்கிறது?' என்றான்.*

*'ஒரு போர்க்குழு போல உணர்கிறேன். என்னில் சில பகுதிகள் மயக்கமுற்றவாறிருக்கின்றன.'*

*டாட்டா இருளில் அவனை உற்றப்பார்க்க முயன்றான்.*

*'நாம் இப்போது எங்கே இருக்கிறோம் என்று கேட்டால், பதிலைக்கேட்டு வருந்தப்போகிறேனா?' என்று ஆரதன் வலுவிழந்து கேட்டான்.*

*டாட்டா எழுந்து நின்றான். 'இப்போது நாம் பாதுகாப்பாய் இருக்கிறோம்' என்றான்.*

*'ஓ, அப்பாடா!' என்றான் ஆரதன்.*

*'நாம் வோகன் கட்டுமான அணிவரிசையின் ஒரு வெளிக்கலத்தில் சமையல் பகுதியின் ஒரு சிறு அறையில் இருக்கிறோம்' என்றான் டாட்டா.*

*'ஓ, அப்படியானால் பாதுகாப்பு என்ற சொல்லை எனக்குத்தெரியாத ஏதோவொரு விசித்திரமான பொருளில் நீ பயன்படுத்தியிருக்கிறாய் என்பது தெளிவாகிறது.'*

*டாட்டா விளக்கின் மாற்றியைத்தேட உதவுவதற்காக இன்னொரு தீக்குச்சியை பற்றவைத்தான். அரக்க நிழல்கள் மீண்டும் அசைந்து குதித்தன. ஆரதன் தடுமாறி எழுந்து எச்சரிக்கையுடன் கைகளை தன்னையேவளைத்து கட்டிக்கொண்டான். பயங்கர வேற்றுலக வடிவங்கள் அவனைச்சுற்றிலும் நடமாடுவதாகத்தோன்றியது. காற்றில் அடர்ந்திருந்த பாசிபிடித்த வாசனைகள் அவன் நுரையீரல்களுள் புகுந்து தங்களை அடையாளங்காட்டாமல் அலைந்துதிரிந்தன. ஒரு மெல்லிய எரிச்சலூட்டும் ஊங்கார ஓசை அவன் மனத்தை ஒருமிக்கவிடாமல் செய்தது.*

*'இங்கே எப்படி வந்தோம்?' என்று கேட்டான், சற்று நடுங்கிக்கொண்டே.*

*'ஒரு சவாரி வாங்கிக்கொண்டோம்' என்றான் டாட்டா.*

*'என்ன? கட்டை விரல்களை உயர்த்திக்கொண்டு நாம் நின்றபோது ஏதோ பச்சைநிறமும் பூச்சிக்கண்களுமுடைய பூதம் தலையைநீட்டி அடே, ஏறிக்கொள்ளுங்களடா, முக்காணி வட்டச்சந்தி வரை கொண்டு விடுகிறேன் என்று சொல்லி ஏற்றிக்கொண்டான் என்றா சொல்கிறாய்?'*

*'கட்டைவிரல் என்பது ஒரு துணையீதநிமிண்டல் மின்கருவி. வட்டச்சந்தி ஆறு ஒளியாண்டுகளில் உள்ள பார்னடின் விண்மீன். மற்றப்படி நீ சொன்னதெல்லாம் கிட்டத்தட்ட சரிதான்.'*

*'பூச்சிக் கண்களுடைய பூதம்?'*

*'பச்சை நிறமானவன்.'*

*'சரி. நான் எப்போது வீட்டுக்குப்போகலாம்?'*

*‘போக இயலாது’ என்ற டாட்டா விளக்கு மாற்றியை கண்டுபிடித்துவிட்டான்.*

*‘கண்களை மறைத்துக்கொள்’ என்று சொல்லி விளக்கைப்போட்டான்.*

*டாட்டாவே வியப்புற்றான்.*

*‘கடவுளே! இது உண்மையில் ஒரு பறக்கும் தட்டின் உட்பகுதியா?’ என்றான் ஆரதன்.*

*புரசவானிக வோகன் விரும்பத்தகாத தன் பச்சை உடலை தூக்கிக்கொண்டு கட்டுப்பாட்டுக்கலப்பாலத்தில் நுழைந்தான். இனத்தொகையுள்ள கோள்களை இடித்தபின்பெல்லாம் அவன் எரிச்சலாக உணர்வதுண்டு. இதெல்லாம் தவறு என்று யாராவது வந்து சொல்லமாட்டார்களா என்று விரும்பினான். அப்படிச்சொல்பவர்களிடம் எரிந்து விழுந்தாலாவது கொஞ்சம் மகிழ்ச்சியாயிருக்கும். அவன் இருக்கையில் தன் கனத்த உடலை தொப்பென்று போட்டான். அப்படியாவது அந்த இருக்கை உடைந்து தான் கோபமடைய ஒருண்மையான காரணத்தை அளிக்காதா என்றெண்ணினான் போலும். ஆனால் அந்த இருக்கை ஒரு கிரீச்சுடன் தன் புகாரை முடித்துக்கொண்டது.*

*‘ஒழிந்து போ’ என்று அச்சமயம் கலப்பாலத்துக்கு வந்த வோகன் இளைஞனாகிய ஒரு பாதுகாப்பாளனை நோக்கிக்கத்தினான். அந்த இளைஞன் உடனே மறைந்தான். அவனுக்கு கொஞ்சம் கவலை நீங்கியது. அவர்களுக்குக்கிடைத்த அறிக்கையைக்கொண்டுவந்து தருவது இனி அவனுடைய வேலையாயிருக்காது என்றுணர்ந்து மகிழ்ந்தான். அந்த அறிக்கை என்னவென்றால், இனி உயர்வெளித்துரிதச்சாலைகள் அனைத்தையும் அவசியமற்றதாக்கும் ஒரு மகத்தான புதுவிதமான வெளிக்கலவுந்தி அரசின் தமகிரன் ஆய்வுத்தளத்தில் அக்கணத்தில் திறந்துகாட்டப்படுகிறது என்று சொன்ன அதிகாரபூர்வமான அறிவிப்புதான்.*

*மற்றொரு கதவு சறுக்கித்திறந்தது. ஆனால் அப்போது வோகன் கலத்தலைவன் கத்தவில்லை, ஏனென்றால் அது தென்திராசியர் அவன் உணவுகளைத்தயாரிக்கும் சமையலறையிலிருந்து வரும் வழி. சாப்பிட்டால் நன்றாகத்தான் இருக்கும்.*

*அந்த வாசல் வழியாக ஒரு பெரிய முடியடர்ந்த உயிரினம் ஓர் உணவுத்தட்டைத்தாங்கி கனத்தகாலடிகளுடன் வந்தது. பைத்தியம் போல் ஓர் அகலச் சிரிப்புடன் வந்தது.*

*புரசவானிக வோகன் மிகவும் மகிழ்ந்தான். ஒரு தென்திராசியன் அதிக மகிழ்ச்சியாய் இருக்கிறான் என்றால், தான் உண்மையாகவே கடுங்கோபமடையும்படியாக கப்பலில் எங்கோ ஓரிடத்தில் ஏதோவொரு செயல் நடக்கிறது என்று பொருள் என்பதை புரசவானிகன் அறிவான்.*

*டாட்டாவும் ஆரதனும் தங்களைச்சுற்றிலும் பார்த்தனர்.*

*‘நீ என்ன நினைக்கிறாய்?’ என்றான் டாட்டா.*

*‘கொஞ்சம் பாழடைந்த இடம் போலிருக்கிறதே!’*

*டாட்டா அந்த அறையில் ஆங்காங்கே கிடந்த அழுக்கான மெத்தைகளையும், கழுவப்படாத கோப்பைகளையும், நாற்றமடிக்கும் இனங்காணவியலா வேற்றுலக உள்ளாடை உருப்படிகளையும் பார்த்து முகத்தைச் சுளித்தான்.*

*‘இது வேலைசெய்வதற்கான வெளிக்கலம், அல்லவா?’ என்றான் டாட்டா. ‘இது தென்திராசியர் தங்கும் பகுதி.’*

*‘அவர்கள் வோகனோ எதுவோ என்று சொன்னாயே!’*

*‘ஆம். வோகர்தான் இந்தக்கலத்தை ஓட்டுகிறார்கள். தென்திராசியர் சமையற்காரர்கள். அவர்கள்தான் நம்மை ஏற்றிக்கொண்டனர்.’*

*‘எனக்கு ஒரே குழப்பமாயிருக்கிறது’ என்றான் ஆரதன்.*

*‘இதோ, இதைப்பார்’ என்றான் டாட்டா. ஒரு மெத்தையில் அமர்ந்து, தன் தோட்பையினுள் கைவிட்டு தடவிப்பார்த்தான். ஆரதன் கொஞ்சம் அச்சத்துடன் மெத்தையை குத்திப்பார்த்துவிட்டு அமர்ந்தான். உண்மையில் அவன் அஞ்சுவதற்கு ஒன்றுமில்லை; ஏனென்றால் சீற்றாகுவாரன்சல்லியின் தாழ்நிலங்களில் வளர்க்கப்பட்ட மெத்தைகள் யாவும் முற்றிலும் கொல்லப்பட்டு நன்றாக உலர்ந்தபின்பே சேவைக்கு அமர்த்தப்பட்டன. மீண்டும் உயிர்பெற்று வந்தவை அவற்றுள் மிகச்சிலவே.*

*டாட்டா ஆரதனிடம் நூலைக்கொடுத்தான்.*

*‘என்ன இது?’ என்று கேட்டான் ஆரதன்.*

*‘பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி. இது ஒருவகையான மின்னூல். எதைப்பற்றி என்னென்ன உனக்கு தெரியவேண்டுமோ அதையெல்லாம் சொல்லும். அதுதான் இதன் வேலை.’*

*ஆரதன் தயக்கத்துடன் அதை தன்கையில் வைத்து திருப்பிப்பார்த்தான்.*

*‘இதன் அட்டை எனக்கு பிடித்திருக்கிறது’ என்றான். ‘பயப்படாதீர்கள். இன்று காலையிலிருந்து நான் கேட்ட பயனுள்ள புரியக்கூடிய தகவல் இது ஒன்றுதான்.’*

*‘இது எப்படிச்செயலாற்றுகிறது என்பதைக்காட்டுகிறேன்’ என்ற டாட்டா, இரண்டு வாரங்களுக்கு முன் இறந்துபோன ஒரு கொக்கைப்பிடிப்பதுபோல் அதைப்பிடித்திருந்த ஆரதன் கையிலிருந்து பிடுங்கி உரையிலிருந்து வெளியெடுத்தான்.*

*‘இதோ இந்தப்பொத்தானை அழுத்தினால் திரை ஒளிர்ந்து பொருளடக்கப்பக்கத்தை காட்டும்.’*

*ஏழுக்குப்பத்து சென்றிமீட்டர் அளவான திரை ஒளிர்ந்து அதன் மேற்பரப்பில் எழுத்துக்கள் மினுங்கத்தொடங்கின.*

*‘உனக்கு வோகன்களைப்பற்றி தெரியவேண்டும், ஆகையால் அந்தப்பெயரை இப்படி உள்ளிடுகிறேன்.’ மேலும் சில பொத்தான்களை அவன் விரல்கள் தட்டின. ‘இதோ வந்துவிட்டது.’*

*வோகன் கட்டுமான அணிவரிசை என்ற சொற்கள் பச்சை நிறத்தில் திரையில் ஒளிர்ந்தன. திரையின் அடிப்பாகத்தில் இருந்த பெரிய சிவப்புப்பொத்தானை டாட்டா அழுத்தியதும் சொற்கள் திரையில் நெளிந்தோடத்தொடங்கின. அதே நேரத்தில் அந்தத்தகவலை ஓர் அமைதியான நிதானமான குரலில் அந்த நூல் பேசவும் தொடங்கியது. அந்த நூல் சொன்னது இதுதான்:*

*‘வோகன் கட்டுமான அணிவரிசைகள். ஒரு வோகனிடம் சவாரி வாங்க விரும்பினால் நீங்கள் செய்யவேண்டியது இதுதான்: அதை மறந்துவிடுங்கள். விண்மீன்திரளிலே மிகவும் விரும்பத்தகாத இனம் இவர்கள்தான். இவர்கள் கெட்டவர்கள் அல்லர், ஆனால் கோபக்காரர்கள், அதிகாரத்தனமானவர்கள், வழிச்செலுத்த விரும்புகிறவர்கள், கல்மனமுடையவர்கள். அவர்கள் தங்கள் பாட்டிகளை ஒரு திராலின் அண்டப்பசியதிர்விலங்கிடமிருந்து மீட்கவேண்டுமானாலும், மூன்றுநகல்களாக கையொப்பங்களுடன் அனுப்பப்பட்டு, திருப்பியனுப்பப்பட்டு, விசாரணைபெற்று, தொலைந்துபோய், கண்டுபிடிக்கப்பட்டு, பொதுவிசாரணைக்குட்பட்டு, மீண்டும் தொலைந்துபோய், இறுதியில் அடுப்பெரிப்பதற்காக வைத்திருக்கும் நெல்லுமியில் புதைந்த ஓர் உத்தரவு வருமுன், ஒரு விரலைக்கூட அசைக்க மாட்டார்கள்.*

*‘ஒரு வோகனிடமிருந்து தாகத்துக்கு தண்ணீர் பெற ஒரே வழி அவன் தொண்டைக்குள் கைவிட்டு எடுப்பதுதான். அவனுக்கு எரிச்சலூட்ட மிகச்சிறந்த வழி அவனுடைய பாட்டியை திராலின் அண்டப்பசியதிர்விலங்குக்கு ஊட்டுவது.*

*‘எக்காரணத்தைக்கொண்டும் ஒரு வோகன் உங்களுக்கு கவிதை வாசிக்க அனுமதிக்காதீர்.’*

*ஆரதன் அதைப் பார்த்து விழித்தான்.*

*‘என்ன விந்தையான ஒரு நூல். அப்படியானால் நாம் எப்படி சவாரிபெற்றோம்?’*

*‘அங்குதான் சிக்கல். இது கொஞ்சம் பழையதாகி விட்டது’ என்றான் டாட்டா நூலை அதன் உறையில் செருகிக்கொண்டே. ‘நான் இதன் புதிய திருத்திய பதிப்புக்கான கள ஆய்வுகளை செய்துவருகிறேன். நான் சேர்க்கவேண்டியவற்றுள் ஒன்று, வோகன்கள் இப்போது தென்திராசியரை சமையலாளராக அமர்த்தியிருப்பது நமக்கு ஒரு பயனுள்ள குறுக்குவழியை தருகிறது என்பதாகும்.’*

*ஆரதன் உடலில் எங்கோ வலியெடுப்பதுபோல் அவன் முகபாவம் இருந்தது. ‘அது சரி, தென்திராசியர் யார்?’*

*‘நல்ல மனிதர்கள்’ என்றான் டாட்டா. ‘மிகச்சிறந்த சமையலாளர்களும் மதுபானம்கலப்பதில் வல்லவர்களும் ஆவர். வேறெதையும் பற்றி அவர்களுக்கு இம்மியளயும் கவலையில்லை. அவர்கள் எப்போதும் திருட்டுப்பயணிகளுக்கு உதவுவார்கள். அவர்களுக்கு ஒரு துணையாக இருக்கும் என்பது ஒரு காரணம். ஆனால் முக்கியமான காரணம் வோகன்களுக்கு அது எரிச்சலூட்டும் என்பதுதான். ஒரு நாளுக்கு முப்பது திருவோணப்பணத்துக்கும் குறைவான செலவில் அண்டத்தின் வியப்புக்களை சுற்றிப்பார்க்க விரும்பும் ஓர் ஏழைப்பயணிக்கு இதுபோன்ற தகவல்கள்தான் தெரிந்திருக்கவேண்டும். அதுதான் என் வேலை. நல்ல வேலை.’*

*ஆரதன் எங்கோ தொலைந்துபோனதுபோல் காணப்பட்டான்.*

*‘அற்புதமான வேலை’ என்று சொல்லி மற்றொரு படுக்கைமெத்தையைப்பார்த்து முகத்தைச்சுளித்தான்.*

*‘ஆனால் நான் விரும்பியதைவிட அதிகக்காலம் புவியில் மாட்டிக்கொண்டுவிட்டேன். ஒரு வாரம் இருக்கலாமென்று வந்தேன். பதினைந்து ஆண்டுகளாக தங்கிவிட்டேன்’ என்றான் டாட்டா.*

*‘அப்படியானால், முதலில் இங்கு எப்படி வந்து சேர்ந்தாய்?’*

*‘எளிது. ஒரு விளையாடியுடன் சவாரிபெற்று வந்தேன்.’*

*‘விளையாடி?’*

*‘ஆம்.’*

*‘விளையாடி ...’*

*‘... என்பது என்ன என்றுதானே கேட்கிறாய்? விளையாடிகள் பெரும்பாலும் வேலையற்ற பணக்காரக்குழந்தைகள். இன்னும் விண்மீனிடைத்தொடர்பு கொள்ளாத கோள்களை தேடியலைந்து கண்டுபிடித்து அவர்களை விசுக்குவது இவர்களுக்கு பொழுதுபோக்கு.’*

*‘விசுக்குவதா?’ என்ற ஆரதன், தன் வாழ்வை கடினமாக்குவது டாட்டாவுக்கு வேடிக்கையாய் இருப்பதாக எண்ணினான்.*

*‘ஆம், விசுக்குவது. மக்கள் அதிகமில்லாத ஒரு தனிமையான இடமாகப்பார்த்து, எவன் சொல்வதை யாரும் நம்பமாட்டார்களோ அவ்வாறான ஒரு அப்பாவி மனிதனை கண்டுபிடித்து, அவனருகில் தரையிறங்கி, தலையில் அலைவுணரிகளை மாட்டிக்கொண்டு பீப்பொலியுடன் அவன்முன் மேலுங்கீழுமாக நடப்பது. சிறுபிள்ளைத்தனமான செயல்.’ டாட்டா கைகளிரண்டையும் தலைக்குப்பின்னால் வைத்துக்கொண்டு படுக்கைமெத்தையில் சாய்ந்துகொண்டான். அவனுடைய இயல்பான நடத்தை ஆரதனுக்குக்கோபமூட்டுவதாக இருந்தது.*

*‘டாட்டா!’ என்று அழுத்தமாக அழைத்து. ‘இந்தக் கேள்வி உனக்கு முக்கியமானதாகத்தோன்றுகிறதோ இல்லையோ. ஆனால் நான் ஏன் இங்கு வந்தேன்?’ என்று கேட்டான் ஆரதன்.*

*‘அதுதான் உனக்குத்தெரியுமே. புவியிலிருந்து உன்னைக்காப்பாற்றினேன்.’*

*‘ஏன்? புவிக்கு என்ன ஆனது?’*

*‘ஓ, அது இடிக்கப்பட்டுவிட்டது.’*

*‘இடிக்க .... ?’*

*‘... பட்டுவிட்டது. அது விண்வெளியில் ஆவியாகிவிட்டது.’*

*‘இதோ பார், அதைப்பற்றி எனக்கு கொஞ்சம் வருத்தமாயிருக்கிறது’ என்றான் ஆரதன்.*

*டாட்டா தனக்குள் சிந்திப்பது போல் ஒரு கணம் தோன்றினான்.*

*பிறகு ‘அது எனக்குப்புரிகிறது’ என்று சொன்னான்.*

*‘புரிகிறது?’ என்று ஆரதன் இரைந்தான். ‘புரிகிறதா?’*

*டாட்டா திடீரென்று எழுந்து நின்றான்.*

*‘நூலை மீண்டும் பார்’ என்று அவசரமாகக் கிசுகிசுத்தான்.*

*‘என்ன?’*

*‘பயப்படாதீர்கள்!’*

*‘நான் பயப்படவில்லை!’*

*‘நீ பயப்படுகிறாய்!’*

*‘சரி, நான் பயப்படுகிறேன். வேறென்ன செய்வது?’*

*‘சும்மா என்னுடன் வா. விண்மீன்திரள் ஒரு அருமையான இடம். இந்த மீன்களை உன்காதுகளில் வைத்துக்கொள்.’*

*‘மன்னிக்கவும். என்ன சொன்னாய்?’ என்று கேட்டது மரியாதையுடன் பேசியதாகவே ஆரதனுக்கு தோன்றியது.*

*டாட்டா ஒரு சிறு கண்ணாடிக்குழாயை நீட்டிக்கொண்டிருந்தான். அதில் இரண்டு மஞ்சள் நிற மீன்கள் நெளிந்து நீந்திக்கொண்டிருந்தது தெளிவாகத்தெரிந்தது. ஆரதன் அவனைப்பார்த்து விழித்தான். அவனுக்குப்பிடிபடக்கூடியவாறு எளியதாகவும் புரியக்கூடியதாகவும் ஏதாவது ஒன்று இருக்கக்கூடாதா என்று விரும்பினான். தென்திராசியரின் உள்ளாடை, குவாரன்சல்லி படுக்கைமெத்தைக்குவியல், மீன்குழாயைநீட்டி காதில்விட்டுக்கொள்ளச்சொல்லும் ஓராதிரைமனிதன் ஆகியவற்றுடன் ஒரேயொரு இட்டிலிப்பொட்டலமும் இருந்தாலாவது பாதுகாப்பாக உணர்ந்திருப்பான். ஆனால் அது அங்கில்லை; அவன் பாதுகாப்பாக உணரவில்லை.*

*திடீரென்று ஒரு வன்முறையான ஓசை எங்கிருந்து வந்ததென்று தெரியாமல் அவர்கள் மீது குதித்துவிழுந்தது. ஓர் ஓநாய்க் கூட்டத்துடன் சண்டையிடும் ஒரு மனிதனின் ஓலத்தைப்போலிருந்த அந்த ஓசையைக்கேட்டு அவன் அச்சத்தால் ஒடுங்கினான்.*

*‘சூ! அதைக்கேள். முக்கியமானதாக இருக்கலாம்.’ என்றான் டாட்டா.*

*‘மு... முக்கியமானதா?’*

*‘வோகன் கலத்தலைவன் அருணாவில் ஏதோ அறிவிக்கிறான்.’*

*‘வோகன்கள் பேசும் குரலா இது?’*

*‘கேள்!’*

*‘ஆனால் எனக்கு வோகம் தெரியாதே!’*

*‘தெரியவேண்டியதில்லை. மீனை காதில் போட்டுக்கொள்.’*

*டாட்டா மின்னல் வேகத்தில் தன் கைகளை ஆரதனின் காதுகளைச்சுற்றி பொத்தினான். மீன்கள் செவித்துளைகளின் ஆழத்துக்குள் நுழைந்து நெளிந்து செல்வதை ஆரதன் குமட்டலுடன் உணர்ந்தான். அச்சத்தால் காதுகளை தன்கைகளால் ஒரு சில கணங்கள் பிராண்டினான். ஆனால் சற்று நேரத்தில் அவன் கண்கள் வியப்பால் விரிந்தன. இரண்டு கருப்பு வெளிக்கோட்டு முகங்களை பார்த்துக்கொண்டிருக்கும்போது திடீரென்று அது ஒரு வெள்ளைக்குத்துவிளக்காக தோன்றுவது, அல்லது பல வண்ணப்புள்ளிகளடங்கிய தாளை பார்த்துக்கொண்டிருக்கும்போது, உங்கள் பார்வையளவியர் புதிய கண்ணாடி செய்துதர நிறையப்பணம் கேட்காமலிருக்குமாறு, திடீரென்று ஆறு என்ற எண்ணைப்பார்ப்பது, ஆகியவற்றின் கேள்விச்சமானியை உணர்ந்தான்.*

*அவன் இன்னும் ஓநாய்ச்சண்டைக்காரனின் ஓலத்தைத்தான் கேட்டுக்கொண்டிருந்தான் என்பது அவனுக்குத்தெரிந்ததுதான். ஆனால், அதுவே அப்போது அழகிய கச்சிதமான தமிழில் கேட்கத்தொடங்கியது.*

*அவன் கேட்டது இதுதான் ...*

## *அத்தியாயம் 6*

*‘ஔள ஔள கர் ஔள கர் ஔள ஔள ஔள கர் ஔள கர் ஔள ஔள கர் கர் ஔள கர் கர் கர் ஔள ஆ, ம ன் ஆனந்தமாய் இருக்க வேண்டும் என்கிறேன். தூதுரை மீளுரைக்கப் படுகிறது. உன் கலத்தலைவன் பேசுகிறேன். நீ இப்போது என்ன செய்துகொண்டிருந்தாலும் அதைப்போட்டுவிட்டு கவனமாகக்கேள். முதலாவதாக, இரண்டு திருட்டுப்பயணிகள் கலத்திலிருப்பதாக என்கருவிகளில் காண்கிறேன். ஏய், நீங்கள் யாராயிருந்தாலும் சரி, உங்களுக்கு இங்கு இம்மியும் வரவேற்பில்லை என்பதை திட்டவட்டமாகச்சொல்லவிரும்புகிறேன். நான் இன்று இருக்கும் நிலைக்கு வர கடுமையாக உழைத்திருக்கிறேன். நான் ஒரு வோகன் கட்டுமானக்கலத்தின் தலைவனாக ஆனது, அதை ஒரு தறுதலைக்கூட்டத்துக்கு வாடகை இல்லாத வாடகைவண்டியாக ஆக்குவதற்கன்று. ஒரு தேடற்குழுவை அனுப்பியிருக்கிறேன். அவர்கள் உங்களிருவரையும் கண்டுபிடித்தவுடனே கலத்திலிருந்து வெளியே தள்ளிவிடுவேன். உங்களுக்கு நல்வாய்ப்பு இருந்தால், அதற்குமுன் ஒருவேளை என் கவிதைகளை படித்துக்காட்டுவேன்.*

*‘இரண்டாவதாக, பார்னடின் விண்மீன் பயணத்துக்காக நாம் உயர்வெளியில் தாவவிருக்கிறோம். மறுபொருத்தத்துக்காக அங்கு எழுபத்திரண்டு மணி நேரம் நாம் கலத்துறையில் நிற்போம். அப்போது கலத்தை விட்டு யாரும் வெளியே போகக்கூடாது. மீண்டும் சொல்கிறேன். எல்லா கோள்விடுப்புக்களும் மீட்கொளப்படுகின்றன. எனக்கு ஒரு காதல் தோல்வி நேர்ந்திருக்கிறது. மற்றவர்கள் ஏன் ஆனந்தமாய் இருக்க வேண்டும் என்கிறேன். தூதுரை முடிந்தது.’*

*ஓசை நின்றுவிட்டது.*

*ஆரதன் தன் கைகளை தலையைச்சுற்றி வளைத்துக்கொண்டு ஒரு பந்துபோல் உருண்டு தரையில் சுருண்டுகிடப்பதை உணர்ந்து வெட்கப்பட்டான். வலுவில்லாமல் சிரித்தான்.*

*‘என்ன இனிமையான மனிதன்! எனக்கு ஒரு மகள் இருந்தால் ஒரு வோகனை திருமணம்செய்துகொள்ள தடை ...’*

*‘விதிக்க வேண்டிய அவசியமில்லை,’ என்று டாட்டா இடைமறித்தான். ‘சாலையில் இறந்துகிடக்கும் ஒரு விலங்கின் காதலீர்ப்புதான் ஒரு வோகனுக்குண்டு. வேண்டாம், அப்படியே இரு’. ஆரதன் தன்னை சுருள்நீக்கத்தொடங்கியதைக்கண்டு ‘உயர்வெளித்தாவலுக்கு ஆயத்தமாக இரு. அது குடிப்பதுபோன்ற ஒரு விரும்பத்தகாததாக இருக்கும்.’*

*‘குடிப்பதில் என்ன விரும்பத்தகாதது இருக்கிறது?’*

*‘அதை ஒரு குவளை நீரிடம் கேட்டுப்பார்.’*

*ஆரதன் சற்றுச்சிந்தித்தான்.*

*‘டாட்டா,’ என்றான்.*

*‘என்ன?’*

*‘இந்த மீன் என் காதில் என்ன செய்து கொண்டிருக்கிறது?’*

*‘அது உனக்காக மொழிபெயர்த்துக்கொண்டிருக்கிறது. அது ஒரு பிதற்றுமீன். வேண்டுமானால் நூலில் பார்.’*

*பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டியை வீசினான். பிறகு அவனும் தாவலுக்கு ஆயத்தமாக ஒரு வளர்கருப்பந்தாக சுருண்டுகொண்டான்.*

*அந்த நேரத்தில் ஆரதனின் மனம் அடிகழன்று ஊற்றியது.*

*அவன் கண்கள் உள்வெளியாகப்புரண்டன. அவன் கால்கள் அவன் தலை உச்சியிலிருந்து ஒழுகத்தொடங்கின.*

அந்த அறை அவனைச் சுற்றி தட்டையாக மடிந்தது, சுழன்றது, இல்லாமல் போய்விட்டது, அவனை மட்டும் தன் தொப்புளுக்குள் நழுவவிட்டு.

அவர்கள் உயர்வெளியில் பயணித்தனர்.

'பிதற்றுமீன் என்பது' என்று தொடங்கிய பால்வீதியின் பயணிக்களுக்கான ஒரு வழிகாட்டி அமைதியாகத்தொடர்ந்தது. 'சிறு, மஞ்சள்நிறமான, அட்டையைப்போன்ற, அண்டத்திலேயே விந்தையான பொருளாக இருக்கக்கூடிய ஒன்று. அது மூளையலைகளின் ஆற்றலை உண்கிறது, ஆனால் அதன் ஓம்புயிரியிடமிருந்து அல்லாமல், அதைச்சுற்றியுள்ள மற்றவற்றிலிருந்து. இந்த மூளையலைகளின் ஆற்றலிலிருந்து எல்லாத்தன்னுணர்வற்ற மன அலைவெண்களையும் உட்கவர்ந்து தன்னை ஊட்டப்படுத்திக்கொள்கிறது. பிறகு அதன் ஓம்புயிரியின் மனத்துள், தன்னுணர்வுச்சிந்தனை அலைவெண்களை அவற்றையளித்த மூளைகளின் பேச்சுமையயங்களிலிருந்து எடுக்கப்பட்ட நரம்புநிமிண்டல்களுடன் சேர்ப்பதால் உருவான ஒரு மிகையுணர்தல் தளவணியை உடற்கழிவாக்குகிறது. இதனாலெல்லாம் உண்டாகும் நடைமுறை விளைவு என்னவென்றால், ஒரு பிதற்றுமீனை உங்கள் காதில் செருகிக்கொண்டால் எந்தமொழியிலுள்ள எந்தப்பேச்சையும் நீங்கள் உடனே புரிந்துகொள்ளலாம். நீங்கள் உண்மையில் கேட்கும் பேச்சுப்பாங்குகள் உங்கள் பிதற்றுமீனால் உங்கள் மனத்துள் புகுத்தப்பட்ட மூளையலைத்தளவணியை குறிநீக்குகின்றன.

'இவ்வாறு மனத்தைக்கசக்குமளவுக்குப்பயனுள்ள ஒன்று முற்றிலும் வாய்ப்புநேர்வாலே பரிணமித்ததென்ற விந்தையான தற்செயல் சில சிந்தனையாளர்களால் கடவுள் இல்லை என்பதற்கான இறுதியான இறுக்கமான நிரூபணமாக கருதப்படுகிறது.

'அந்த விவாதம் இவ்வாறு செல்கிறது: 'நான் இருப்பதை நிரூபிக்க மறுக்கிறேன்' என்கிறார் கடவுள், 'ஏனென்றால் நிரூபணம் நம்பிக்கையை மறுக்கிறது, நம்பிக்கை இல்லாமல் நான் இல்லை.'

''ஆனால், பிதற்றுமீன் ஒரு வெளிப்படையான நிரூபணம் இல்லையா?' என்கிறான் மனிதன். 'அது முற்றிலும் வாய்ப்புநேர்வாலே பரிணமித்திருக்கவியலாது. அது நீங்கள் இருப்பதை நிரூபிக்கிறது. ஆகவே உங்கள் விவாதப்படியே, நீங்கள் இல்லை. இநிவே.'

''அடக் கடவுளே! இதை நான் எதிர்பார்க்கவில்லையே' என்று சொல்லி கடவுள் ஒரு கணிதப்புகையில் மறைந்துவிட்டார்.

''இது இவ்வளவு எளிதாக முடிந்துவிட்டதே' என்று மகிழ்ந்த மனிதன், தன் அடுத்த சாதனையாக கருப்பும் வெண்மையே என்று நிரூபிக்க முயன்று ஒரு வரிக்குதிரைக்கூட்டத்தால் மிதிபட்டு இறந்துபோனான்.

பெரும்பான்மையான முன்னணிச்சிந்தனையாளர்கள் இந்த நிரூபணம் ஒரு கூடை ஆட்டுப்புழுக்கையின் மதிப்புக்குச்சமம் என்று கருதினாலும், ஊலான் கலூபிடு 'கடவுளைத்தீர்த்துக்கட்ட இதுவே போதும்' என்ற தன் நூலின் மையக்கருத்தாக இதை வைத்து கொள்ளைப்பணம் சம்பாதித்துவிட்டார்.

'இதற்கிடையில், அப்பாவியான பிதற்றுமீன், இனங்களுக்கு இடையேயும் கலாச்சாரங்களுக்கு இடையேயும் உள்ள தகவல்தொடர்புதட்டிகளை பயனுறுவிதத்தில் நீக்கியதன்மூலம், வரலாற்றில் அதுவரை கண்டறிந்தவற்றைவிட மேலும் கொடூரமான போர்களுக்கு காரணமாகிவிட்டது.'

ஆரதன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். உயர்வெளியின் உதைப்பு அவனை கொல்லவில்லை என்பதை உணர்ந்து பெருவியப்புற்றான். புவி இருந்திருந்தால் அது இருக்கவேண்டிய இடத்திலிருந்து ஆறு ஒளியாண்டுகள் தொலைவில் அவன் இருந்தான்.

புவி.

அதன் நினைவு அவனுடைய குமட்டும் மனத்தில் மேலும் நோகடிக்கும் வகையில் நீந்தியது. புவி முழுவதுமே இல்லாமல் போய்விடக்கூடிய மாபெரும் கற்பனை அவன் மனத்தின் கொள்ளளவைவிட பெரியது. அவன் உணர்வுகளை நிமிண்டுவதற்காக முதலில் அவன் பெற்றோரும் தங்கையும்

போய்விட்டார்கள் என்று எண்ணிப்பார்த்தான். ஓர் உணர்ச்சியுமில்லை. அவனுக்குத்தெரிந்திருந்த அனைவரையும் எண்ணிப்பார்த்தான். ஓர் உணர்ச்சியுமில்லை. பிறகு திரைப்பட அரங்கில் அன்று அவனுக்கு முன்னால் வரிசையில் நின்று கொண்டிருந்த பெயர் தெரியாத யாரோ ஒருவனை எண்ணிப்பார்த்தான். திரைப்பட அரங்கு போய்விட்டது. கமலகாசன் நடித்த படங்கள் எல்லாம் அழிந்து போய்விட்டன. அவன் மனத்தில் ஒரு விசும்பல் ஏற்பட்டது. தஞ்சைப்பெரியகோவில் போய்விட்டது. அதிலிருந்த எல்லாச்சிற்பங்களும் போய்விட்டன. தஞ்சைப்பெரியகோவில் போய்விட்டது, ஆனால் அதைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை, ஏனென்றால் கவலைப்பட யாருமில்லை. இனி தஞ்சைப்பெரியகோவில் அவன் மனத்தில் மட்டுமே இருக்கும். இந்தியா அவன் மனத்தில் மட்டுமே இருக்கும். இந்த இரும்பாலான வெளிக்கலத்தின் நாற்றமடிக்கும் இருட்டறையில் சிக்கிக்கொண்டிருக்கும் இந்த மனத்தில் மட்டுமே இருக்கும். ஒரு குறுக்கிடவெருளி அவனைச்சூழ்ந்து கவிந்தது.

இந்தியா இனி இல்லை. அது புரிந்தது. அது எப்படியோ புரிந்துவிட்டது. அமெரிக்கா போய்விட்டது என்று எண்ணிப்பார்த்தான். அதை அவனால் நம்ப இயலவில்லை. மீண்டும் சிறியதிலிருந்து தொடங்க முடிவுசெய்தான். நியூயார்க்கு போய்விட்டது. ஓர் உணர்ச்சியுமில்லை. அது இருப்பதை அவன் எப்போதும் அவ்வளவாக நம்பியதில்லை. அமெரிக்க டாலரின் மதிப்பு இனி எப்போதும் மீளவியலாமல் ஆழ்ந்துவிட்டது. அதில் கொஞ்சம் நடுக்கம் ஏற்பட்டது. ஆப்பிள் நிறுவனத்தை எண்ணினான். இனி ஐபோன் என்ற ஒன்று இல்லவேயில்லை.

அவன் மயக்கமடைந்தான். அடுத்த வினாடியில் மயக்கத்திலிருந்து தெளிந்தபோது தன் அம்மாவைத்தேடி அழுதான்.

விருட்டென்று எழுந்துநின்றான்.

‘டாட்டா!’

ஒரு மூலையில் அமர்ந்து தனக்குத்தானே ஒரு பாடலை முணுமுணுத்துக்கொண்டிருந்த டாட்டா தலையைத்தூக்கிப்பார்த்தான்.

‘என்ன?’

‘நீ இந்த நூலுக்கான ஓர் ஆய்வாளனானால், நீ புவியிலிருந்தபோது புவியைப்பற்றிய தகவல்களை சேகரித்திருக்கவேண்டும்.’

‘ஆம், நான் முதலிலிருந்த பதிகையை கொஞ்சம் விரிவாக்கினேன்.’

‘அப்படியானால் இந்தப் பதிப்பில் அது என்ன சொல்கிறது என்று பார்க்கலாம். எனக்கு உடனே தெரியவேண்டும்.’

‘சரி, இந்தா,’ என்று நூலை நீட்டினாள்.

ஆரதன் அதைப்பிடுங்கியபோது தன் கைகள் நடுங்குவதை நிறுத்த முயன்றான். வேண்டிய பக்கத்தை வரவழைக்கத்தேவையான பொத்தான்களை அழுத்தினான். திரைமினுங்கி அதில் ஒரு சுழல் ஏற்பட்டு இறுதியில் எழுத்துக்களுடைய பக்கமாக மாறியது. ஆரதன் அதை உற்றுப்பார்த்தான்.

‘இதில் அதற்கான பதிகை இல்லை!’ என்று வெடித்தான்.

டாட்டா மெதுவாகத் திரும்பிப் பார்த்தான்.

‘இருக்கிறது,’ என்றான் டாட்டா. ‘இதோ பார், இங்கே. திரையின் அடிப்பாகத்தில், ஆறாம் காமக்கோளிலுள்ள கலம்பிகா என்ற மும்முலைதாசிக்கு அடியில்.’

ஆரதன் டாட்டாவின் விரல் காட்டிய இடத்தில் பார்த்தான். அப்போதும் அது அவனுக்கு உரைக்கவில்லை. பிறகு அவன் மனம் வெடித்துவிடும் போலிருந்தது.

‘என்ன? ஆபத்தில்லாததா? அவ்வளவுதானா? ஆபத்தில்லாதது! ஒற்றைச்சொல்!’

டாட்டா உதட்டைப்பிதுக்கினான். 'விண்மீன்திரளில் நூற்றுமும்மடியாயிரக்கணக்கான விண்மீன்கள் உள்ளன. நூலின் நுண்செயலாக்கிகளில் ஒரு குறிப்பிட்ட அளவு இடந்தான் இருக்கிறது. மேலும் புவியைப்பற்றி யாருக்கும் தெரியாது.'

'அடக்கடவுளே! ஆனால் நீ அதை கொஞ்சமாவது சரியாக்கியிருப்பாய் என்று நம்புகிறேன்.'

'நிச்சயமாக! நான் ஒரு புதிய பதிகையை பதிப்பாளருக்கு அனுப்பினேன். அவர் அதை சற்றுச்சுருக்கிவிட்டார். ஆயினும் அது ஒரு மேம்பாடுதான்.'

'இப்போது அது என்ன சொல்கிறது?'

'பெரும்பாலும் ஆபத்தில்லாதது!' என்று சற்று அவமானத்துடனே சொன்னான் டாட்டா.

'பெரும்பாலும் ஆபத்தில்லாததா?' என்று கத்தினான் ஆரதன்.

'அது என்ன ஓசை?' என்றான் டாட்டா.

'அது நான் கத்திய ஓசை' என்று மீண்டும் கத்தினான் ஆரதன்.

'நிறுத்து. நாம் ஓர் ஆபத்தில் மாட்டிக் \கொண்டிருக்கிறோம்.'

'நீயுமா ஆபத்தில் மாட்டிக் \கொண்டிருக்கிறாய்?'

கதவுக்கு வெளியே காலடியொலி கேட்டது. 'தென்திராசியரா?' என்று ஆரதன் கிசுகிசுத்தான்.

'இல்லை. இவை இரும்புபூட்டப்பட்ட காலணிகள்,' என்றான் டாட்டா.

கதவு பலமாக தட்டப்பட்டது.

'அப்படியானால் யார்?' என்றான் ஆரதன்.

'நமக்கு நல்வாய்ப்பு இருந்தால் இவர்கள் நம்மை வெளியில் தூக்கியெறிய வந்திருக்கும் வோகன்கள்'

'நமக்கு நல்வாய்ப்பு இல்லாவிட்டால்?'

'நமக்கு நல்வாய்ப்பு இல்லாவிட்டால், கலத்தலைவன் முதலில் தன் கவிதைகள் சிலவற்றை படித்துக்காட்டுவதாகப்பயமுறுத்தியது உண்மையில் நடக்கும்.'

# அத்தியாயம் 7

அண்டத்தின் தரங்குறைந்த கவிதைகளில் வோகன் கவிதை மூன்றாமிடத்தை வகிக்கிறது. இரண்டாமிடத்தை வகிப்பது கீராவின் அசகோத்துவினருடையது. பெருங்கவிஞர் தலுங்க வளிமப்போக்கர் 'ஒரு வசந்தநாள் மாலையில் நான் கண்டெடுத்த ஒரு களிமண் திரளுக்கு வந்தனம்' என்ற தன் கவிதையை வாசித்தளித்தபோது அவர் பார்வையாளர்களில் நான்குபேர் உள்ளார்ந்த குருதிக்கசிவினால் இறந்துவிட்டனர்; இடைவிண்மீன்வட்டார கலையேமாற்ற மன்றத்தின் அதிபர் தன் காலை கடித்துக்குதறிக்கொண்டிருந்ததன் மூலம் உயிர்தப்பினார். வளிமப்போக்கர் அந்த கவிதைக்குக்கிடைத்த வரவேற்பின்மையைக்கண்டு மனமுடைந்து, பன்னிரண்டு பாகங்களடங்கிய தன் கவிதைச்சிகரமான *என் குளியலறைச்செருமல்களில் மிகச்சிறந்தவை* என்ற நூலையாவது வாசித்துக்காட்டலாம் என்று தொடங்கியபோது அவருடைய சிறுகுடல் கழுத்தின் வழியே மேலெழுந்து மூளையை நெறித்ததன் மூலம் அவரையும் நாகரிக இனங்களையும் காப்பாற்றியதாக ஓர் அறிக்கை கூறுகிறது.

எல்லாவற்றிலும் தரங்குறைந்த கவிதைகள், தன் ஆசிரியரான தமிழ்நாட்டுமாப்பாவலர் முருகேசக்குமுறுவாருடன் சேர்ந்து, புவிக்கோள் இடிக்கப்பட்டபோது அழிந்துவிட்டன.

புரசவானிக வோகன் மிக மெதுவாக சிரித்தான். அது எந்த விளைவுக்காவும் அன்று; அதற்கான தசையசைவுகளின் வரிசையை நினைவுகூர முயன்றதால். தன் கைதிகளிடம் இரைந்ததால் அவனுக்கு கொஞ்சம் மகிழ்ச்சியுண்டாகியிருந்தது. அதனால் சற்று கொடுமை மனநிலையில் இருந்தான்.

கைதிகள் கவிதை மகிழ்வு இருக்கைகளில் அமர்ந்திருந்தனர்; அதாவது கட்டப்பட்டிருந்தனர். வோகன்கள் தங்கள் படைப்புக்களுக்குக்கிடைத்த வரவேற்புபற்றிய எவ்விதத்தவறானநம்பிக்கையும் கொண்டிருக்கவில்லை. செய்யுள் இயற்றுவதற்கான அவர்களுடைய முதன்முயற்சிகள் தாங்கள் சரியான முறையில் பரிணமித்த நாகரிக இனமாக ஏற்றுக்கொள்ளப்படவேண்டும் என்ற அளவுமீறிய ஆவலினால் எழுந்தவைதான். ஆனால் இப்போது அவர்களுடைய கவிதை முயற்சி தொடர்வது ஒரு கொடுமைப்படுத்தும் மனப்பான்மையால் மட்டுமே.

டாட்டாவின் புருவத்தில் பனித்திருந்த வியர்வை துளிர்த்து, அவன் நெற்றியோரங்களில் பதிக்கப்பட்டிருந்த மின்வாயுலோகப்பட்டைகளில் வழிந்தது. புலவரின் எவ்வொரு கவிதைநயமும் விட்டுப்போகாமல் கவிதையின் விளைவுகளை மிகைப்பித்துக்காட்டும்வண்ணம் வடிவமைக்கப்பட்ட நிழலுருக்காட்சி செறிவாக்கிகள், தாள இணக்கேற்றிகள், எதுகை மோனை நிலைப்பாக்கிகள், உவமை அணிவிப்பிகள் போன்ற மின்கருவிகளுடன் அந்த மின்வாய்கள் இணைக்கப்பட்டிருந்தன.

ஆரதன் நடுங்கி அமர்ந்திருந்தான். அவனுக்கு என்ன எதிர்பார்ப்பதென்று தெரியவில்லை. ஆனால் அதுவரை நடந்தது ஏதும் அவனுக்குப்பிடித்ததாக இருக்கவில்லை என்பதும் இனிமேல் நடக்கப்போவது அதைவிட மேம்பட்டதாக இருக்காது என்பதும் தெளிவாகத்தெரிந்தன.

வோகன் தானே எழுதிய ஓர் அழுகல் கவிதையை வாசிக்கத்தொடங்கினான்.

'ஓ, சீகாவரத் தோராகமிணோ...' என்று தொடங்கினான். டாட்டாவின் உடலில் ஒரு வலிப்பு ஏற்பட்டது. அவன் எதிர்பார்த்ததை விட இது மேலும் மோசமாக இருந்தது.

'? ... உன் சிமிகேப்புகள் எனக்கு --- ஓர் தங்கீரத்தம்மத்தின் வீஞ்சைரநோமம்.'

'ஆஆஆஆஆஆஆஆஆஆ..........' என்றான் டாட்டா, உருண்டோடி வரும் வலிக்கட்டிகளிலிருந்து தன் தலையைப்பின்னிழுக்க முயன்றவாறு. ஆரதன் தன் இருக்கையில் அசைந்தாடுவதையும் தன் ஓரக்கண்ணால் பார்த்துக்கொண்டான். பற்களைக்கடித்து நரநரத்தான்.

'ஊகவே உங்கை உங்காகிக்கிறேன்,' எனத் தொடர்ந்தான் இரக்கமற்ற வோகன் 'என் புசவாலியத்தீமாரஞ்சீவே.'

*உணர்ச்சிவசத்தால் அவன் குரல் ஓர் உயர்சுரத்துக்கு எழுந்தது. 'என்னை ஊவபொம்மு உத்தவிராகம சூங்கயிபல தோமசினாய் பவ்வி மரடவாறக்கிறாணமவே. இல்லாவிட்டால் உன் வெம்பாந்த பெயவீசமரியை என் புந்தாமணந்தரத்தால் உங்காலசித்திவுசேன். செய்கிறேனா இல்லையா, பார்!'*

*'அங்ங்ங்ஙாஆஆஆஆயீஈஈஈவூஊஊஊஊஊ' என்று கத்திய டாட்டா, இறுதி வரியின் மின்மிகைப்பு தலையின் இருபக்கங்களிலும் தாக்கியதால் ஒரு பெரும் வலிப்பால் துடித்துத் துவண்டு விழுந்தான்.*

*ஆரதன் அசைந்து தலையாட்டிக்கொண்டிருதான்.*

*'புவிப்பூச்சிகளே …' என்று வோகன் வீரிட்டான். (டாட்டா ஆதிரையருகிலுள்ள ஒரு சிறு கோளிலிருந்து வந்தவன் என்பதை அவன் அறிந்திருக்கவில்லை. அறிந்திருந்தாலும் அதைப்பற்றி கவலைப்பட்டிருக்கமாட்டான்) 'வெளியின் வெற்றிடத்தில் மூச்சுத்திணறிச்சாகிறீர்களா …' என்றவன், ஒரு மர்ம அமைதிக்குப்பின் தொடர்ந்தான், 'அல்லது என் கவிதை எப்படியிருந்தது என்று சொல்கிறீர்களா?'*

*வௌவால் போன்ற வடிவுடைய தன் தோலிருக்கையில் தன்னை வீழ்த்திக்கொண்டு அவர்களையே பார்த்தான். மீண்டும் அந்தச்சிரிப்பைபெருமுயற்சியுடன் வரவழைத்தான்.*

*டாட்டா மூச்சுத்திணறுவது போல் பெருமூச்சுவிட்டான். உலர்ந்த தன் வாயில் நாக்கைச்சுழற்றி முனகினான்.*

*ஆரதன் மகிழ்ச்சியுடன் சொன்னான்: 'எனக்கு மிகவும் பிடித்திருந்தது.'*

*டாட்டா திரும்பி அவனைப்பார்த்து வாயைப்பிளந்தான். இப்படி ஓர் அணுகுமுறை இருப்பது தனக்குத்தோன்றவில்லையே!*

*வோகன் ஒரு வியப்புற்ற புருவத்தை உயர்த்தினான். அது அவன் மூக்கை கொஞ்சம் மறைத்ததால் முன்பைவிட அவனை மோசமாகக்காட்டவில்லை.*

*'ஓ …' என்று பெருவியப்பில் சுழன்றான்.*

*'ஆம்' என்ற ஆரதன் தொடர்ந்தான், 'சில கற்பனைக்காட்சிகள் மனத்தில் நல்ல தாக்குதலை உண்டாக்கின.'*

*டாட்டா அவனைப்பார்த்து விழித்தான். இந்த புதிய கருத்தைச்சுற்றி தன் எண்ணங்களையும் ஒருங்கமைக்க முயற்சித்தான். இந்த இக்கட்டிலிருந்து தப்பிக்க ஒரு வழி கிடைக்கிறதா?*

*'சரி, மேலும் சொல்,' என்றான் வோகன்.*

*'ஆம், அப்புறம் … நல்ல தாளநயமும் கூட,' என்று தொடர்ந்தான் ஆரதன். 'அதனுடன் இயைந்த …' என்று சொல்லித்தடுமாறினான்.*

*டாட்டா அவனைக்காப்பாற்ற விரைந்தான் '… இயைந்த இயல்புமீறிய உவமையுடன் …' என்று சொல்லி பின் அவனும் திணறினான்.*

*'உயிரினங்களின் மீது அன்பு செலுத்தும் …'*

*'… வோகக்கொள்கை,' என்று டாட்டா கிசுகிசுத்தான்.*

*'ஓ, ஆமாம். வோகக்கொள்கை. அதாவது புலவரின் கருணை நிறைந்த வோகக்கொள்கை,' ஆரதன் இப்போது அவிழ்த்துவிட்டதுபோல உணர்ந்தான். 'அது கவிதை வரிகளாகிய ஊடகத்தின்மூலம் ஒன்றை இயற்கடப்பதும், மற்றொன்றை பதங்கமாக்கலுமாக, இருபிரிவாக்கத்தால் அடிப்படையான ஒருமிப்புடனும் தெளிவான உள்நோக்குடனும் எடுத்துரைப்பது என்னவென்றால், உம்…. ஆ…'. திடீரென்று அவன் மனம் அவனை கைவிட்டது.*

*டாட்டா நளினமாக களத்தில் குதித்தான்.*

*‘கவிதையின் கருப்பொருள் எதுவோ அதை,’ என்று உரக்கக்கூவினான். ஆரதனுக்கு மட்டும் கேட்கும்படி, ‘நல்ல வேலை செய்தாய்,’ என்றான்.*

வோகன் *அவர்களை கூர்ந்துநோக்கினான். அவனுடைய கசப்புக்கட்டிய இனவெறி உள்ளத்தை அவர்கள் தொட்டுவிட்டதாக ஒரு கணம் உணர்ந்தான். இல்லை, இதற்கெல்லாம் தான் மசியக்கூடாது என்று முடிவுசெய்தான். பூனை நைலான் துணியில் பிராண்டுவது போன்ற ஒரு குரலில் பேசத்தொடங்கினான்.*

*‘நான் கொடிய கல்மனத்தினனாக வெளிப்படையாகத்தோன்றினாலும் என் உள்ளம் அன்பையே விரும்புவதுதான் நான் கவிதை எழுதுவதற்கான காரணம் என்கிறீர்கள்.’ ஒரு சிறு இடைவெளிக்குப்பின் ‘அப்படியா?’ என்று கேட்டான்.*

*டாட்டா பதற்றமான ஒரு சிரிப்பைச்சிரித்தான். ‘ஆம், அப்படித்தான். நாம் எல்லாரும் அப்படித்தானே, உள் மனத்தில்… ம்…’*

வோகன் எழுந்தான்.

‘இல்லை. *நீங்கள் சொல்வது முற்றிலும் தவறு,’ என்றான், ‘என் கொடிய கல்மனமாகிய வெளித்தோற்றத்தை ஒரு முரண்பின்னணியில் விளக்கமாகக்காட்டுவதற்கே நான் கவிதை எழுதுகிறேன். எப்படியும் நான் உங்களை கப்பலிலிருந்து வெளியே எறியத்தான் போகிறேன். காவலா, கைதிகளை மூன்றாம் எண் வளிப்பூட்டறைக்கு இழுத்துச்சென்று வெளியே எறி.’*

*‘என்ன?’ என்றான் டாட்டா வியப்புடன்.*

ஒரு கனத்த இளைஞனாகிய வோகக்காவலன் முன்வந்து கொழுத்த மடிப்புக்களுடைய கைகளால் *அவர்களை கட்டுக்களிலிருந்து உரித்து இழுத்தான்.*

*‘எங்களை நீ வெளியே எறியக்கூடாது.’ என்று டாட்டா கத்தினான். ‘நாங்கள் ஒரு நூல் எழுதிக்கொண்டிருக்கிறோம்.’*

*‘எதிர்ப்பு பயனளிக்காது!’* என்று வோகக்காவலன் பதிலுக்குக்கத்தினான். *அதுதான் அவன் வோகன் காவல்துறைப்பயிலகத்தில் சேர்ந்ததும் முதலில் கற்ற சொற்றொடர்.*

*கலத்தலைவன் அமைதியாக வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு வேறுபக்கம் திரும்பிக்கொண்டான்.*

*ஆரதன் அவனை மிரண்டு பார்த்தான்.*

*‘நான் இப்போது சாக விரும்பவில்லை,’ என்று கத்தினான். ‘எனக்குக் கொஞ்சம் தலைவலி இருக்கிறது. தலைவலியுடன் வானுலகம் சென்றால் வானுலக இன்பம் சுவைக்காது.’*

*காவலன் அவர்கள் கழுத்துக்களைச்சுற்றி வலுவாகப்பிடித்தான். தன் கலத்தலைவனின் பின்னால் குனிந்து வணங்கிவிட்டு, இன்னும் எதிர்ப்புதெரிவித்துக்கொண்டே இருக்கும் அவர்களை கலப்பாலத்திலிருந்து வெளியேற்றினான். ஓர் இரும்புக்கதவு மூடியது. கலத்தலைவன் மீண்டும் தனிமையில் இருந்தான். அவன் ஒரு பாடலை முணுமுணுத்துக் கொண்டும் விரல்களால் தன் கவிதைக்குறிப்பேட்டை வருடிக்கொண்டும் தனக்குள் சிந்தித்தான்.*

*‘ம்… இயைந்த இயல்புமீறிய உவமையுடன்’* என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

ஒரு கணம் *அந்த எண்ணத்தைக்கருத்திற்கொண்டு, பின் ஒரு முரட்டுப்புன்சிரிப்புடன் குறிப்பேட்டை மூடினான்.*

‘இவர்களுக்கு சாவே ஒரு வரம்’ என்றான்.

*ஒரு வோகனின் தேய்ப்பிக்கைகளில் இறுக்கமாக பிடிபட்ட இரண்டு மனிதவளையங்களின் பயனற்ற எதிர்ப்பொலிகள் இரும்பாலான நீண்ட தாழ்வாரத்தில் எதிரொலித்தன.*

*'விடுடா, என்னை. விடுடா, முரடா!' என்று வெடித்தான் ஆரதன்.*

*வோகக்காவலன் அசையாமல் இழுத்துக்கொண்டு சென்றான்.*

*'கவலைப்படாதே. நான் ஏதாவது வழி செய்கிறேன்' என்றான் டாட்டா. அவன் மிகுந்த தன்னம்பிக்கையுடன் பேசியதாகத்தோன்றவில்லை.*

*'எதிர்ப்பு பயனளிக்காது!' என்று முழங்கினான் காவலன்.*

*'அப்படியெல்லாம் சொல்லாதே' என்று டாட்டா திக்கினான். 'இப்படிப்பேசினால் நான் எப்படி தன்னம்பிக்கை மனப்பான்மையுடன் இருப்பது?'*

*'என்ன? நீயா தன்னம்பிக்கை மனப்பான்மையைப்பற்றி பேசுகிறாய்? இன்று இடிபட்டது உன் கோளன்று. நான் இன்று காலை எழுந்தபோது, ஏதாவது படிக்கலாம், என் நாயின் முடியை கோதிவிடலாம், இன்றைய பொழுதை இன்பமாகக்களிக்கலாம் என்றெல்லாம் எண்ணினேன். இப்போது மாலை நான்கு மணிதான் ஆகிறது. அதற்குள் புவியின் புகையும் சாம்பலிலிருந்து ஆறு ஒளியாண்டுகள் தொலைவில் ஒரு வேற்றுலகனின் வெளிக்கலத்திலிருந்து வெளியெறியப்படுகிறேன்'. வோகன் தன் பிடியை இறுக்கியதால் அவன் தொண்டை கரகரப்புடன் பேசினான்.*

*'சரி, சரி. பயந்து சாவதை நிறுத்து.'*

*'பயமா? பயத்தைப்பற்றி இப்போது யார் நினைப்பது?' என்று சிடுசிடுத்தான் ஆரதன். 'நான் இன்னும் கலாச்சார அதிர்ச்சியிலிருந்து மீளவில்லை. விரைவில் இதிலிருந்து மீண்டு வியப்புக்கள் தணிந்து என் நிலைமையை ஏற்றுக்கொள்வேன். அதன் பிறகு பார், எப்படிப்பயப்படுகிறேனென்று!'*

*'ஆரதா, நீ புலம்புகிறாய். வாயை மூடு!' என்ற டாட்டா சிந்திக்க தீவிரமாக முயன்றான். ஆனால் காவலனின் அதட்டலால் மனவொருமையை இழந்தான்.*

*'எதிர்ப்பு பயனளிக்காது!'*

*'ஏய், நீயும் வாயை மூடடா!'*

*'எதிர்ப்பு பயனளிக்காது!'*

*'ஓ, நிறுத்தடா, நிறுத்து' என்ற டாட்டா, தன் முகத்தை முறுக்கி தன்னைப்பிடித்திருந்தவனின் முகத்தை உற்றுநோக்கினான். அவனுக்கு ஒரு சிந்தனை தோன்றியது.*

*'இதெல்லாம் உனக்கு பிடித்திருக்கிறதா?' என்று திடீரென்று கேட்டான்.*

*வோகன் திடீரென்று நின்றுவிட்டான். ஏராளமான முட்டாள்தனம் அவன் முகத்தில் மெதுவாக பரவத்தொடங்கியது.*

*'பிடிக்கிறதென்றால்? நீ என்ன சொல்கிறாய்?' என்று பூதக்குரலில் கேட்டான்.*

*'அதாவது, இந்தக்கப்பலில் அங்குமிங்கும் நடமாடுவதும், கத்துவதும், மக்களை கப்பலிலிருந்து வெளியெறிவதுமாகிய இந்த வேலை உனக்கு பிடித்திருக்கிறதா என்று கேட்கிறேன்.'*

*வோகன் அந்த இரும்புக்கூரையின் முகட்டை பார்த்தான். அவன் புருவங்கள் கிட்டத்தட்ட ஒன்றுடனொன்று கலந்துவிட்டன. அவன் வாய் பிளந்து தொங்கியது. இறுதியாக அவன் சொன்னான், 'உம்..., இங்கு கிடைக்கும் உணவு நன்றாயிருக்கிறது.'*

*'அப்படித்தான் இருக்க வேண்டும்,' என்றான் டாட்டா.*

*ஆரதன் தன் தலையை முறுக்கி டாட்டாவைப்பார்த்தான்.*

*'டாட்டா, என்னடா செய்கிறாய்?' என்று கிசுகிசுப்பான குரலில் வியப்புடன் கேட்டான்.*

*'என்னைச்சுற்றியுள்ள உலகில் ஓர் அக்கறை எடுத்துக்கொள்கிறேன். இது தவறா?' என்றான். 'அப்படியானால் இங்கு கிடைக்கும் உணவு நன்றாயிருக்கிறது என்கிறாய்!' என்று தொடர்ந்தான்.*

*வோகனின் மனத்தில் மெதுவாக எழுந்த எண்ணங்கள் அதன் கலங்கிய ஆழங்களில் ஊர்ந்து பரவ, அவன் டாட்டாவைப்பார்த்து விழித்தான்.*

*'ஆம். ஆனால் நீ கேட்டபிறகுதான் நினைத்துப்பார்க்கிறேன். உப்புமா ஒன்றும் அவ்வளவு நன்றாயில்லை. ஆனாலும் ...' மீண்டும் அவன் சிந்தித்தான். அந்தச்சிந்தனைக்காக மீண்டும் கூரையைப்பார்ப்பது அவசியமாயிற்று. பிறகு மகிழ்ச்சியுடன் 'சில கத்தல்கள் எனக்குப்பிடித்திருக்கின்றன,' என்று சொல்லி தன் நுரையீரல்களில் காற்றை நிரப்பிக்கொண்டு 'எதிர்ப்பு ...' என்று புயல் வேகத்தில் ஊதத்தொடங்கினான்.*

*'சரி, சரி. அதை நீ நன்றாகத்தான் செய்கிறாய்,' என்று டாட்டா அவசரமாக இடைமறித்தான். 'ஆனால், உப்புமா நன்றாக இல்லாவிட்டால்,' என்று சொற்கள் அவன் மனத்தை அடைவதற்கான நேரத்தையளித்து மெதுவாகச்சொன்னான், 'நீ எக்காரணத்தால் இந்த வேலையில் இன்னும் இருக்கிறாய்? உன் சீருடை உனக்கு மிகவும் பிடிக்கிறதா? இல்லாவிட்டால் இங்கே நல்ல பெண்கள் கிடைக்கிறார்களா, என்ன? அல்லது உன் வாழ்வை வெறுமையாக வீணடிப்பதுதான் உனக்கு விருப்பமா?'*

*ஆரதன் அவர்கள் இருவரையும் மாறிமாறிப்பார்த்தான், தான் காண்பதையும் கேட்பதையும் நம்பவியலாமல்.*

*'வந்து...' என்றான் காவலன், 'அது வந்து... தெரியவில்லை! அது... சும்மா ஓர் இதற்குத்தான் இந்த வேலையைச்செய்கிறேன். என் அத்தை ஒருமுறை சொன்னாள், வெளிக்கலக்காவலாளி வேலை ஒரு வோக இளைஞனுக்கு நல்லவேலை என்று. அதனால்தான்... இந்த சீருடை, சீரொளி எய்வி, வெறுமையாக வீணடிப்பது ...'*

*'பார்த்தாயா, ஆரதா?' என்று தன் கூற்றுக்களின் முடிபை எடுத்துரைக்கும் ஒரு விவாதப்போட்டியாளரைப்போல் தொடங்கினான். 'நீதான் துயரத்தில் இருப்பதாக எண்ணினாய்!'*

*ஆரதன் இன்னும் அப்படித்தான் எண்ணினான். தன் பிறப்பிடக்கோள் அழிக்கப்பட்டதுடன், வோகக்காவலன் அவனை வெளியில் எறிவதற்கு பாதிவழி இழுத்து வந்துவிட்டது அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது என்று சொல்வதற்கில்லை.*

*'இவனுடைய துயரத்தைக் கொஞ்சம் புரிந்துகொள்ளப்பார்' என்று டாட்டா வலியுறுத்தினான். 'பாவம், இவனது வாழ்நாள் முழுவதையும் இந்தக்கப்பலில் நடமாடி மக்களை வெளியெறிவதிலே கழிக்கவேண்டியிருக்கிறது.'*

*'கத்திக்கொண்டு,' என்று சேர்த்தான் காவலன்.*

*'கத்திக்கொண்டு! அதுவும்தான்' என்ற டாட்டா தன் கழுத்தைச்சுற்றி வளைத்திருந்த கொழுப்பார்ந்த கையை நட்புடன் தட்டிக்கொடுத்தான். 'ஏன் இதைச்செய்கிறான் என்று அவனுக்கே தெரியவில்லை.'*

*இது ஒரு பெருந்துயரந்தான் என்பதை ஆரதன் ஒப்புக்கொண்டான். அதை ஒரு சிறு தலையாட்டலால் வெளியிட்டான், ஏனென்றால் பேசவியலாதவாறு அவன் கழுத்து நெறிக்கப்பட்டிருந்தது.*

*குழப்பங்களின் அடையாளங்கள் காவலனின் மன ஆழத்திலிருந்து வெளிப்படுவது தெரிந்தது.*

*'ஆம், நீ சொன்னபிறகுதான் எனக்கும் தெரிகிறது. உண்மையில் ...'*

*'நல்ல பையன். அப்படியே சிந்தித்துப்பார்' என்று டாட்டா ஊக்குவித்தான்.*

*'அது சரி. அப்படியானால் வேறென்ன செய்வது?'*

*‘அப்படிக்கேள்’ என்று டாட்டா உற்சாகத்துடன் ஆனால் மெதுவாக சொன்னான். ‘முதலில் இந்தச்செயலை நிறுத்து. இதை இனிமேல் நீ செய்யப்போவதில்லை என்று அவர்களிடம் சொல்லிவிடு.’ மேலும் ஏதோ சொல்லவேண்டும் என்றுதான் விரும்பினான். ஆனால் அதுவரை சொன்னதை அசைபோட்டுக்கொண்டிருந்த காவலனின் மனத்தின் கொள்ளளவு அதற்கு மேல் ஏற்காதுபோல தோன்றியது.*

*‘உம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்...‘ என்ற காவலன் ‘அது ஏனோ எனக்கு நல்லதாகத்தோன்றவில்லை’ என்றான்.*

*டாட்டா திடீரென்று ஓர் அருமையான வாய்ப்பு நழுவிக்கொண்டிருப்பதாக எண்ணினான்.*

*‘பொறு, பொறு’ என்று அவசரமாகச்சொன்னான். ‘இது முதல் படிதான். இதற்கு மேலும் செய்யவேண்டியது இன்னும் இருக்கிறது.’*

*ஆனால் அந்தக்கணத்தில் காவலன் தன்பிடியை இறுக்கி கைதிகளை வளிப்பூட்டறைக்கு இழுத்துச்செல்லும் தன் குறிக்கோளை தொடர்ந்தான்.*

*‘அதைப்பற்றி நான் சிந்திக்கத்தான் வேண்டும். ஆனால் இப்போதே சிந்திப்பதும் உங்களை எறிந்தபின் சிந்திப்பதும் ஒன்றுதானே!’*

*வோகனுக்கு அவை ஒன்றுதான். ஆனால் டாட்டாவுக்கு ஒன்றல்லவே!*

*‘இதோ பார். ஆனால் ...’ என்று கொஞ்சம் திடமில்லாமல் சொன்னான்.*

*‘கொங்... பர்ர்ர்ர்ர்ர்’ என்று ஆரதன் ஏதோ சொன்னது தெளிவில்லாமல் வந்தது.*

*‘கொஞ்சம் பொறு,’ என்று டாட்டா எடுத்துக்கொடுத்து, ‘மேலும் இசை, கலை போன்றவை நிறைய இருக்கின்றன. அவற்றைப்பற்றியெல்லாம் உனக்குச் சொல்ல வேஏஏஏஆஆஆஆஆ’ என்றான்.*

*‘எதிர்ப்பு பயனளிக்காது!’ என்று உறுமிய காவலன் மேலும் சொன்னான் ‘இந்த வேலையில் தொடர்ந்தால் நான் முதிய கத்தல் அலுவலராக பதவி உயர்வு அடைவேன். கத்தாத, மக்களைத்தள்ளாத அலுவலர்களுக்கு அதிக வாய்ப்புக்கள் இல்லை. ஆகையால் எனக்குத்தெரிந்ததையே நான் செய்யப்போகிறேன்.’*

*அவர்கள் வளிப்பூட்டறையை அடைந்துவிட்டனர். மிகவும் வலுவான ஒரு பெரிய வட்டமான இரும்புவாசல் கலத்தின் தோலுக்குள் நுழைய விட்டது. காவலன் ஒரு கட்டுப்படுத்தியை இயக்கியபோது வாசல் வழுக்கிச்சுழன்று திறந்தது.*

*‘என்னைப்பற்றி ஆர்வம் எடுத்துக்கொண்டதற்கு நன்றி, வணக்கம்,’ என்று சொல்லி காவலன் டாட்டாவையும் ஆரதனையும் கதவின் வழியே தெரிந்த ஒரு சிறு அறைக்குள் தள்ளினான். ஆரதன் மூச்சுவாங்கி தரையில் கிடந்தான். டாட்டா அவசரமாக எழுந்து மூடிக்கொண்டிருந்த கதவில் தன் தோளால் இடித்ததால் எந்தப்பயனும் உண்டாகவில்லை.*

*‘ஆனால், இதைக் கேள்,’ என்று காவலனை நோக்கி இரைந்தான். ‘உனக்குத் தெரியாத வேறு பெரிய கலாச்சார உலகம் இருக்கிறது. இதைக்கேட்டுப்பார்’ என்று சொல்லி, தனக்குத்தெரிந்த ஒரேயொருதுளி கலாச்சாரத்தை எடுத்துவிட்டான். வாதாபி கணபதிம் என்ற பாடலின் தொடக்கச்சுரங்களை கத்தினான்.*

*‘கா...கா..ரி சசசநி பரி.. இதைக் கேட்கும்போது உன் மனத்தில் ஏதும் உணர்வு தோன்றவில்லையா?’*

*‘இல்லை. ஒன்றுந்தோன்றவில்லை. ஆனால் என் அத்தையிடம் இதைப்பற்றி சொல்கிறேன்.’*

*அதற்கு மேலும் அவன் ஏதும் சொன்னானென்றால், அது வந்து சேரவில்லை. கதவு இறுக்கமாகப்பூட்டிக்கொண்டது. தொலைவில் வெளிக்கல எந்திரங்களின் மெதுவான இரைச்சல்தவிர வேறு எந்த ஒலியும் கேட்கவில்லை.*

*அவர்கள் சுமார் இரண்டு மீட்டர் விட்டமும் மூன்று மீட்டர் நீளமுமுள்ள ஒரு வழவழப்பான உருளை அறையில் இருந்தனர்.*

*டாட்டா பதற்றத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான்.*

*'கொஞ்சம் அறிவுள்ளவன் என்றுதான் நினைத்தேன்,' என்றுசொல்லி வளைந்த சுவரில் சுருண்டு சாய்ந்தான்.*

*ஆரதன் இன்னும் தரையின் வளைவில் விழுந்த இடத்திலேதான் கிடந்தான். அவன் தலையைத்தூக்கிப்பார்க்கவில்லை. மூச்சிறைக்க அப்படியே கிடந்தான்.*

*'நாம் பொறியில் மாட்டிக்கொண்டோம், இல்லை?'*

*'ஆம். நாம் மாட்டிக்கொண்டிருக்கிறோம்,' என்றான் டாட்டா.*

*'நீ ஏதாவது வழிசெய்கிறேன் என்றாயே! உனக்கு ஏதும் தோன்றவில்லையா? ஒருவேளை உனக்கு ஏதும் தோன்றியிருக்கும். ஆனால் நீ அதைக்கவனியாமல் விட்டுவிட்டாயோ?'*

*'ஆம். எனக்கு ஒன்று தோன்றத்தான்செய்தது,' என்று மூச்சிறைத்தலுடன் சொன்னான்.*

*ஆரதன் ஓர் எதிர்பார்ப்புடன் எட்டிப்பார்த்தான்.*

*'ஆனால், அது பயனளிப்பதற்கு நாம் இந்த காற்றுப்புகாவாசலின் மறுபக்கத்தில் இருக்கவேண்டும்.' அவர்கள் எறியப்பட்ட வாசலை ஓர் உதை உதைத்தான்.*

*'ஆனால் அது நல்ல திட்டமா?'*

*'ஓ, ஆமாம். மிகவும் நல்லது.'*

*'அது என்ன திட்டம்?'*

*'நான் அதை முழுவதுமாக சிந்தித்து முடிக்கவில்லை. ஆனால் அதைப்பற்றி இப்போது பேசி என்ன பயன்?'*

*'சரி, உம்... இனி என்ன நடக்கப்போகிறது?'*

*'ஓ, இன்னும் சில நொடிகளில் நமக்கு மறுபக்கத்தில் இருக்கும் இன்னொரு வாசல் தானாகத்திறக்கும். நாம் வெளியின் இருளில் தூக்கியெறியப்பட்டு முச்சுத்திணறுவோம் என்று எதிர்பார்க்கிறேன். உன் நுரையீரல் முழுவதையும் காற்றால் நிரப்பிக்கொண்டால் முப்பது வினாடிகள்வரை அதிகநேரம் உயிர்வாழலாம்.' என்றான் டாட்டா. தன் கைகளை தலைக்குப்பின்னால் கட்டிக்கொண்டு புருவத்தை மேலே தூக்கி ஒரு பழைய ஆதிரைப்போர்ப்பாடலை முணுமுணுத்தான். ஆரதன் கண்களுக்கு திடீரென்று டாட்டா மிகவும் வேற்றுலகனாகத்தோன்றினான்.*

*'அப்படியானால் இதுதான் நம் முடிவு. நாம் சாகப்போகிறோம்!'*

*'ஆம். ஆனால், ஓ, இங்கே பார், இது என்ன?'*

*அவன் திடீரென்று எழுந்து ஆரதனின் பின்னால் அறையின் சுவரில் எதை நோக்கியோ கையை நீட்டினான். 'இது என்ன மாற்றி?'*

*'எது? எங்கே?' என்று வியந்து ஆரதன் சுழன்று திரும்பினான்.*

*'இல்லை. சும்மா விளையாடினேன். நாம் சாகத்தான் போகிறோம்.'*

*மீண்டும் சுவரில் சாய்ந்து சரிந்தான். பாடலை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தான்.*

'ஒரு வோகன் வெளிக்கலத்தின் வளிப்பூட்டறையில் ஓர் ஆதிரை மனிதனுடன் மாட்டிக்கொண்டு வெளியில் முச்சுத்திணறி இறக்கப்போகும் இதுபோன்ற நேரங்களில்தான் நான் சிறுவனாயிருந்தபோது என் அம்மா சொன்னதை கேட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.'

'ஏன், உன் அம்மா என்ன சொன்னார்?'

'தெரியாது. நான்தான் அதைக்கேட்கவில்லையே!'

'ஓ,' என்ற டாட்டா பாடலைத்தொடர்ந்தான்.

'ஆ, அருமை!' என்று ஆரதன் தன் மனத்துள் சொல்லிக்கொண்டான். 'தஞ்சைப்பெரியகோவில் போய்விட்டது. கமலகாசன் திரைப்படங்கள் போய்விட்டன. நானும் *பெரும்பாலும் ஆபத்தில்லாதது* என்ற சொற்களுந்தான் மிஞ்சியிருக்கிறோம். இனி எந்தக்கணத்திலும் *பெரும்பாலும் ஆபத்தில்லாதது* என்ற சொற்கள் மட்டுந்தான் மிஞ்சியிருக்கும். நேற்றுதான் உலகம் அமைதியாகச்சென்றுகொண்டிருந்ததாகத்தோன்றியது.'

ஓர் எந்திரம் இயங்கும் ஒலி எழுந்தது.

வெளி வாசல் திறந்தபோது விசுக்கென்ற ஒரு மிதமான சருக்கொலியைத்தொடர்ந்து காற்று வெளியேறியதால் உண்டான காதைச்செவிடாக்குவதுபோன்ற பேருறுமல் கேட்டது. வாசலுக்கு வெளியே தெரிந்த கருமையில் ஆங்காங்கே நம்பவியலாத ஒளிர்வுடைய ஒளிப்புள்ளிகள் தெரிந்தன. டாட்டாவும் ஆரதனும் ஓர் எய்வியிலிருந்து வெளிப்பட்ட குண்டைப்போன்று வெளியில் தெரித்தனர்.

# அத்தியாயம் 8

*பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி ஒரு தனிச்சிறந்த நூல். இது பல ஆண்டுகளாக பல திருத்தர்களின் மேற்பார்வைகளில் பலமுறை தொகுக்கப்பட்டும் மறுதொகுக்கப்பட்டுமிருக்கிறது. எண்ணற்ற பயணிகளின் பங்களிப்புகளும் ஆய்வாளர்களின் பங்களிப்புகளும் அதில் அடங்கியுள்ளன.*

*அதன் முன்னுரை இவ்வாறு தொடங்குகிறது:*

*'விண்வெளி மிகப்பெரியது. மிக மிகப் பெரியது. அது எவ்வளவு மாபெரும் அளவில் கற்பனைக்கெட்டாத அளவில் பெரியது என்பதை நம்பமாட்டீர்கள். உங்கள் மருந்துக்கடை அதிகத்தொலைவில் இருப்பதாக நீங்கள் எண்ணலாம். ஆனால் விண்வெளியில் உள்ள தொலைவுகளின் சார்பில் அது எம்மாத்திரம்! ஆகவே கேளுங்கள் ...' என்று தொடர்கிறது.*

*(பிறகு விரைவில் இந்த நடை மிதமடைந்து உண்மையில் நமக்குத் தெரிய வேண்டியவற்றை சொல்லத்தொடங்குகிறது. எடுத்துக்காட்டாக, பெதசலமின் என்ற ஒரு வியப்புறு அழகிய கோளின் வளங்கள் ஆண்டுக்குப்பத்துமும்மடியாயிரக்கணக்கான பயணிகளின் வரவால் தேய்வுறுவதைத்தடுக்க, ஒவ்வொரு பயணியும் கோளிலிருக்கும்போது உண்டதற்கும் உடற்கழிவிட்டதற்கும் உள்ள வேறுபாடு அவர் திரும்பிச்செல்லும்போது அறுவைமுறையால் மீட்கொளப்படுகிறது. ஆகவே பயணிகள் கழிவறைக்குச்செல்லும்போதெல்லாம் தவறாமல் பற்றுச்சீட்டு பெற்றுக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம்.)*

*உண்மையில் சொல்லப்போனால், விண்வெளியின் பெருந்தொலைவுகளைப்பொறுத்தவரை, வழிகாட்டியின் முன்னுரையை எழுதியோரைவிட மிகுந்த அறிவாற்றல் உள்ளவர்களும் தோல்வியே அடைந்திருக்கின்றனர். சிலர் மதுரையை ஒரு பட்டாணியாக கற்பனைசெய்யுங்கள் என்கிறார்கள். வேறுசிலர் கதிரவனை ஒரு பூசணிக்காய் என்கிறார்கள். மற்றும் பலரும் இதுபோன்ற தலைசுற்ற வைக்கும் கருத்துக்களையே சொல்கிறார்கள்.*

*நேரான உண்மை என்னவென்றால், விண்மீனிடைத்தொலைவுகள் மனித மனத்தின் கற்பனைகளில் பொருந்தாது.*

*ஒளிக்கும் ஒரு வேகம் உள்ளது என்பதை உணர பெரும்பான்மையான இனங்களுக்கு பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகுமளவுக்கு மிக விரைவில் பயணிக்கும் ஒளியும் விண்மீன்களுக்கிடையில் பயணிக்க வெகுநேரம் எடுத்துக்கொள்கிறது. கதிரவனிலிருந்து புவி இருந்த இடத்துக்கு ஒளி வர எட்டு நிமிடங்கள் ஆகிறது. கதிரவனின் மிக அருகிலுள்ள அண்மைப்பக்க சென்றாரசு விண்மீனை அடைய நான்கு ஆண்டுகள் ஆகிறது.*

*விண்மீன்திரளின் மறுபக்கத்திலுள்ள தமகிரன் போன்ற இடங்களை ஒளி அடைய மேலும் அதிக நேரம் ஆகிறது: ஐநூறாயிரம் ஆண்டுகள்.*

*இத்தொலைவைப்பயணிக்க ஒரு சாதனையாளர் எடுத்துக்கொண்ட குறைந்த அளவு நேரம் ஐந்து ஆண்டுகளுக்குக்கொஞ்சம் குறைவு. ஆனால் அவர் வழியில் எதையும் பார்த்திருக்கவியலாது.*

*நுரையீரல் முழுவதையும் காற்றால் நிரப்பிக்கொண்டால் வெளியின் வெற்றிடத்தில் சுமார் முப்பது நொடிகள் உயிர்வாழலாம் என்று பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி சொல்கிறது. மேலும், வெளி அவ்வளவு பெரியதாக இருப்பதால், அந்த முப்பது நொடிகளில் அவ்வழியே செல்லும் மற்றொரு கப்பலால் மீட்கப்படுவதற்கான நிகழ்தகவு இரண்டின் இருநூற்றைம்பத்தேழாயிரத்து எழுநூற்றொன்பதாம் அடுக்கில் ஒன்று என்றும் அது கூறுகிறது.*

*ஒரு நம்பவியலாத தற்செயல் என்னவென்றால், இந்த எண்தான், ஒருமுறை புரசவாக்கத்தில் ஒரு நல்ல கேளிக்கைக்கு ஆரதன் சென்று மிகவும் நல்ல ஒரு பெண்ணைச்சந்தித்த ஒரு பிரிவீட்டின் தொலைபேசி எண்ணுமாகும்.*

*புவிக்கோளும், புரசவாக்கம் பிரிவீடும், தொலைபேசியும் அழிந்து போய்விட்டாலும், அவற்றையெல்லாம் ஒருவிதத்தில் நினைவில் நிலைப்பிக்கும் வண்ணம், ஆரதனும் டாட்டாவும் இருபத்தொன்பது நொடிகளுக்குப்பின் மீட்கப்பட்டனர்.*

# அத்தியாயம் 9

*காரணமில்லாமல் ஒரு வளிப்பூட்டறை திறந்துமூடியதைக்கண்ட ஒரு கணினி விழிப்பெச்சரிக்கையுடன் தனக்குத்தானே பேசிக்கொண்டது.*

*அது ஏனென்றால் காரணம் மதியச்சாப்பாட்டுக்குப்போயிருந்தது. விண்மீன்திரளில் ஒரு விரிசல் ஏற்பட்டிருந்தது. சுழியெல்லை அகலமும் மிகப்பல இருமடியாயிரம் ஒளியாண்டுகள் நீளமுமுடைய அந்த விரிசல் சரியாக சுழியெல்லை நேரந்தான் நீடித்தது.*

*அது மூடியபோது எண்ணற்ற காகிதத்தொப்பிகளும் ஊதுபைகளும் அதன்வழியே விழுந்து அண்டமெங்கும் நகர்ந்து பரவின. மூன்றடி உயரமான சந்தைப்பகுப்பாய்வர் எழுவர் அடங்கிய ஒரு குழு அதன் வழியே விழுந்து மூச்சுத்திணறலாலும் வியப்பாலும் இறந்தனர்.*

*இருநூற்றுமுப்பத்தொன்பதாயிரம் அரைவேக்காட்டு முட்டைகளும் அதன் வழியே விழுந்து, பஞ்சத்தால் அடியுண்டதும் பான்சல் அமைப்பிலுள்ளதுமாகிய போகரில் கோளில் ஒரு குவியலாகச்சேர்ந்தன.*

*போகரில் இனம் முழுவதும் பஞ்சத்தால் மறைந்து விட்டது, ஒரே ஒரு மனிதனைத்தவிர. அவனும் சில வாரங்களில் பித்தத்திரால் நச்சுமையால் இறந்தான்.*

*அந்த விரிசல் நீடித்த சுழியெல்லை நேரம் காலத்தின் முன்னும் பின்னும் நிகழ்தகவில்லாத வகையில் அதிர்ந்து ஆர்ப்பரித்தது; மிகத்தொலைவான கடந்தகாலமொன்றில் மலட்டு வெற்றுவெளியில் அலைந்துகொண்டிருந்த நேர்ந்தாவாறான அணுத்தொகுதிகளை அலைக்கழித்துத்துன்புறுத்தி அசாதாரணப்பாங்குகளில் ஒன்றுடனொடன்று சேரும்படிசெய்தது. இந்தப்பாங்குகள் விரைவில் தம்மையே நகலெடுக்கக்கற்றுக்கொண்டு (இந்தப்பாங்குகளின் அசாதாரணத்தன்மைகளில் இதுவும் ஒன்று), தாங்கள் படிந்த ஒவ்வொரு கோளிலும் மிகுந்த கலக்கத்தை உண்டாக்கத்தொடங்கின. இவ்வாறுதான் அண்டத்தில் உயிர் உண்டாயிற்று.*

*ஐந்து மாபெரும் நிகழ்வுப்பெருஞ்சுழல்கள் காரணமின்மைக்கொடுஞ்சுழற்புயல்களாக சுழன்றுவீசி ஒரு நடைபாதையில் பாய்ந்தன.*

*நடைபாதையில் டாட்டாவும் ஆரதனும் புதிதாகத்தரையிடப்பட்ட மீன்களைப்போல் தவித்துக்கிடந்தனர்.*

*'பார்த்தாயா?' என்று, தெரியாததின் மூன்றாம் வீச்சினூடே விரைந்துகொண்டிருந்த நடைபாதையின்மீது கிடந்த டாட்டா பெருமூச்சுக்களுக்கிடையே சொன்னான். 'நான் ஏதாவது வழி செய்கிறேன் என்று சொன்னேனல்லவா?'*

*'ஆம், ஆம். சொன்னாய்!' என்றான் ஆரதன்.*

*'வழியில் செல்லும் ஒரு கப்பலைக்கண்டுபிடித்து அதனால் மீட்கப்பட்டது என் அறிவாற்றல் சிந்தனையால்!'*

*உண்மையான அண்டம் அவர்கள் கால்களுக்கடியில் வளைந்து நெளிந்து சுழன்றது. அதனருகில் பல கற்பனை அண்டங்கள் மலை ஆடுகள் போல அமைதியாக கடந்துசென்றன. முதன்மையொளி வெடித்ததால் வெளிக்காலம் குப்பைத்தொட்டி சரிந்ததுபோல் சிதறியது. காலம் மலர்ந்தது. பருப்பொருள் குறுகியது. மீப்பெருமப்பகாவெண் ஒரு மூலையில் பதுங்கி என்றும் காணவியலாமல் ஒளிந்து கொண்டது.*

*'ஏய், போதும், நிறுத்து. அது நடப்பதற்கு எதிராக வானளாவிய நிகழ்தகவு உள்ளது.'*

*'ஏளனம் செய்யாதே. அது நடந்ததா இல்லையா?'*

*'நாம் எவ்வகையான கப்பலில் இருக்கிறோம்?' என்று ஆரதன் கேட்டான், முடியாக்காலத்தின் குழி அவர்களுக்கடியில் பிளந்து கொண்டிருக்க.*

*‘எனக்குத் தெரியவில்லை. நான் இன்னும் என் கண்களைத்திறக்கவில்லை’ என்றான் டாட்டா.*

*‘நானும் திறக்கவில்லை’ என்றான் ஆரதன்.*

*அண்டம் குதித்து உறைந்து நடுங்கி பல எதிர்பாராத திசைகளில் வழிந்தது.*

*ஆரதனும் டாட்டாவும் தம் கண்களைத்திறந்து மிகுந்த வியப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தனர்.*

*‘கடவுளே! தூத்துக்குடி கடற்கரைபோன்றே தோன்றுகிறது’ என்றான் ஆரதன்.*

*‘நீ அவ்வாறு சொல்வதைக்கேட்டு எனக்கு கொஞ்சம் நிம்மதியாக இருக்கிறது’ என்றான் டாட்டா.*

*‘ஏன்?’*

*‘ஏனென்றால் எனக்குதான் பைத்தியம் பிடித்துவிட்டது என்று எண்ணினேன்.’*

*‘ஒருவேளை உனக்கு பைத்தியமாகவே இருக்கலாம். நான் அவ்வாறு சொன்னது உன் கற்பனையாக இருக்கலாம் அல்லவா?’*

*டாட்டா கொஞ்சம் சிந்தித்தான்.*

*இறுதியாக, ‘சரி, நீ சொன்னாயா, இல்லையா?’ என்று கேட்டான்.*

*‘சொன்னதாகத்தான் நினைக்கிறேன்’ என்றான் ஆரதன்.*

*‘ஒருவேளை நம் இருவருக்குமே பைத்தியம் பிடிக்கிறதோ, என்னவோ!’*

*‘ஆம். இவ்வளவும் நடந்தபின் இது தூத்துக்குடி என்று எண்ணினால் நாம் பைத்தியந்தான்’ என்றான் ஆரதன்.*

*‘சரி, இது தூத்துக்குடிதான் என்று நீ நினைக்கிறாயா?’*

*‘ஆம்.’*

*‘நானும் அப்படித்தான் நினைக்கிறேன்.’*

*‘ஆகவே, நாம் இருவரும் பைத்தியங்கள்.’*

*‘உம். சரியான நேரத்தில்தான் பைத்தியமாகி இருக்கிறோம்.’*

*‘ஆம்’ என்றான் அவ்வழியே சென்று கொண்டிருந்த ஒரு பைத்தியக்காரன். ‘யாரவன்?’ என்று ஆரதன் கேட்டான். ‘யார்? ஐந்து தலைகளும் கருவாடுநிறைந்த நெல்லிக்காய்மரமும் உடைய மனிதனா?’*

*‘ஆம்’ என்றான் அவ்வழியே சென்று கொண்டிருந்த ஒரு பைத்தியக்காரன்.*

*‘யாரவன்?’ என்று ஆரதன் கேட்டான்.*

*‘யார்? ஐந்து தலைகளும் கருவாடு நிறைந்த நெல்லிக்காய் மரமும் உடைய மனிதனா?’*

*‘ஆம்.’*

*‘தெரியவில்லை. யாரோ ஒருவன்.’*

*‘ஓ!’*

*அவர்கள் இருவரும் நடைபாதையில் அமர்ந்துகொண்டு, குழந்தைகள் மணலில் குதித்துச்சென்றதையும், வலிமையூட்டப்பட்ட கிடைப்பட்டைகளை நிச்சயமின்மைப்பகுதிகளுக்கு எடுத்துச்செல்லும் முரட்டுக்குதிரைகள் வானில் முழங்கிச்சென்றதையும் ஒருவித மனச்சங்கடத்துடன் பார்த்துக்கொண்டிருந்தனர்.*

*‘இதோ பார்,’ என்று ஒரு செருமலுடன் சொன்ன ஆரதன் தொடர்ந்தான். ‘இது தூத்துக்குடியாக இருந்தால், அதில் ஏதோ ஒரு தவறு இருக்கிறது.’*

*‘கடல் நிலையாயிருப்பதையும் நிலம் மேலுங்கீழுமாக அசைவதையும் சொல்கிறாயா?’ என்றான் டாட்டா. ‘ஆம். அது விந்தையாக இருப்பதாகத்தான் நானும் எண்ணினேன்.’ என்று அவன் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருந்தபோதே தூத்துக்குடி ஒரு பேரொலியுடன் ஆறு சமபாகங்களாகப்பிரிந்து அப்பாகங்கள் குடிவெறியில் இருப்பதுபோல் வெட்கமில்லாமல் ஒன்றைச்சுற்றி மற்றொன்றாக நடனமாடின. ‘உண்மையில் ஏதோ தவறாகத்தான் இருக்கிறது.’*

*குழலொலியும் யாழொலியும் ஓலமிட்டு காற்றிலெழுந்து மிதந்தன. சூடான வடைகள் குதித்தெழுந்து சாலையில் உருண்டன. ஏராளமான மீன்கள் வானிலிருந்து பொழிந்தன. ஆரதனும் டாட்டாவும் ஒதுங்கிடத்தைத்தேடி ஓடினர்.*

*அவர்கள் தடித்த ஒலிச்சுவர்களைக்கடந்து, மலைபோலுயர்ந்த எண்ணக்கருத்துருகளையும், மடுபோல்தாழ்ந்த மெல்லிசைகளையும் தாண்டி மோசமான காலணிகளுடைய வௌவால்களை மிதித்துக்கொண்டு ஓடியபோது, இறுதியாக ஒரு பெண்ணின் குரலை கேட்டனர்.*

*அந்தக்குரல் தெளிவாகவே கேட்டதெனினும், ‘ஒன்றுக்கெதிராக இரண்டின் நூறாயிரமாம் அடுக்கு. மேலும் குறைந்துகொண்டே வருகிறது’ என்று மட்டுமே சொன்னது. வேறொன்றும் சொல்லவில்லை.*

*டாட்டா ஓர் ஒளிக்கதிரில் வழுக்கி அந்தக்குரல் எங்கிருந்து வருகிறது என்று பார்க்கத்திரும்பினான். ஆனால் அவன் நம்பக்கூடிய எதையும் காணவில்லை.*

*‘அது என்ன குரல்?’ என்று இரைந்தான் ஆரதன்.*

*‘எனக்குத்தெரியவில்லை. ஒரு நிகழ்தகவின் அளவீடு போல் இருந்தது’ என்று டாட்டா பதிலுக்கு இரைந்தான்.*

*‘என்ன, நிகழ்தகவா?’*

*‘நிகழ்தகவு! தெரியாதா? ஒன்றுக்கெதிராக இரண்டு, ஒன்றுக்கெதிராக மூன்று, நான்குக்கெதிராக ஐந்து என்பனபோல். ஒன்றுக்கெதிராக இரண்டின் நூறாயிரமாம் அடுக்கு என்று சொன்னது. அது கிட்டத்தட்ட சாத்தியமே இல்லாதது.’*

*இருமடியாயிரம் இலிட்டர் பாயசம் அடங்கிய பானை ஒன்று அவர்கள் மீது எதிர்பாராமல் கவிழ்ந்தது.*

*‘சரி. இதற்கு என்ன பொருள்?’*

*‘எது? பாயசமா?’*

*‘இல்லை. இந்த நிகழ்தகவு அளவீடு!’*

*‘தெரியவில்லை. எனக்குத்தெரியவேயில்லை. நாம் ஒருவகையான வெளிக்கலத்தில் இருக்கிறோம் என்று நினைக்கிறேன்.’*

*‘அப்படியானால் நாம் இருப்பது முதல்வகுப்புப்பெட்டி இல்லை என்றே சொல்லவேண்டும்.’*

*வெளிநேரத்துணியில் வீக்கங்கள் ஏற்பட்டன. மாபெரும் சகிக்கவியலாத வீக்கங்கள்.*

*‘ஆஆஆஆஆஆஆஆஆ...’ என்றான் ஆரதன், அவன் உடல் தொய்ந்து பல திசைகளில் நெகிழ்ந்தபோது. ‘தூத்துக்குடி ஆவியாவதுபோல் தோன்றுகிறது. விண்மீன்கள் சுழல்கின்றன. ஒரு தூசுச்சுழல். என் கால்கள் கதிரவவீழ்ச்சியினுள் அமிழ்கின்றன. என் கைகளும் கழன்றுவிட்டன.’ ஒரு பயங்கர எண்ணம் அவனுள் தோன்றியது. ‘என் அலைபேசியை இப்போது எப்படிப்பயன்படுத்துவது?’ என்றான். ஏமாற்றத்துடன் தன் கண்களை டாட்டாவை நோக்கித்திருப்பினான்.*

*‘டாட்டா, நீ ஒரு வாத்தாக மாறுவதை நிறுத்து!’ என்றான்.*

*மீண்டும் அந்தக் குரல் கேட்டது.*

*‘ஒன்றுக்கெதிராக இரண்டின் எழுபத்தைந்தாயிரமாம் அடுக்கு. மேலும் குறைந்துகொண்டே வருகிறது.’*

*டாட்டா எரிச்சலுடன் தன் குட்டையில் அளைந்தான்.*

*‘ஏய், யார் நீ?’ என்று அகவினான். ‘நீ எங்கிருக்கிறாய்? இங்கு என்ன நடக்கிறது? இதை நிறுத்துவதற்கு ஏதும் வழி இருக்கிறதா?’ என்று தொடர்ந்தான்.*

*‘அமைதியாயிருக்கவும்’ என்று இனிமையாகச்சொன்னது அந்தக்குரல். ஒற்றைச்சிறகும் இரண்டில் ஒன்று எரிந்துவிட்ட எஞ்சின்களும் கொண்ட ஒரு விமானத்தில் பணிப்பெண் சொல்வது போல், ‘ஓராபத்துமில்லை’ என்றது.*

*‘நான் அதைப்பற்றிக்கேட்கவில்லை.’ என்றான் டாட்டா கோபத்துடன். ‘நான் ஒரு கச்சிதமான வாத்தாக இருப்பதையும் என் நண்பன் கைகால்களை விரைவாக இழந்து கொண்டிருப்பதையும்பற்றி கேட்கிறேன்.’*

*‘பரவாயில்லை. இப்போது அவை திரும்ப வந்துவிட்டன,’ என்றான் ஆரதன்.*

*‘ஒன்றுக்கெதிராக இரண்டின் ஐம்பதாயிரமாம் அடுக்கு. மேலும் குறைந்துகொண்டே வருகிறது,’ என்றது குரல்.*

*‘வழக்கமாக இருப்பதைவிட கொஞ்சம் நீளமாக இருக்கின்றன. ஆனால்...’ என்றான் ஆரதன்.*

*‘நீ எங்களுக்குச்சொல்லவேண்டியது ஏதும் இல்லையா?’ என்றான் டாட்டா ஒரு பறவையின் கிறீச்சிடும் சீற்றத்துடன்.*

*குரல் தொண்டையைச்செறுமிக்கொண்டது. தொலைவில் ஒரு குட்டையான நான்கு தாவிக்குதித்தது.*

*‘தங்க இதயம் என்ற வெளிக்கலத்துக்கு உங்களை வரவேற்கிறோம்.’ என்றது குரல்.*

*குரல் மேலும் தொடர்ந்தது.*

*‘தயவுசெய்து உங்களைச்சுற்றிலும் நீங்கள் காண்பதாலும் கேட்பதாலும் பதற்றமடையாமலிருங்கள். நிச்சய இறப்பிலிருந்து ஒன்றுக்கெதிராக இரண்டின் இருநூற்றெழுபத்தாறாயிரமாம் அடுக்கு அல்லது ஒருவேளை அதற்கு மேலும் இருக்கக்கூடிய நிகழ்தகவின்மையில் காப்பாற்றப்பட்டிருப்பதன் தொடக்கப்புன்விளைவுகளை நீங்கள் உணர்வது இயல்புதான். நாம் இப்போது ஒன்றுக்கெதிராக இரண்டின் இருபத்தையாயிரமாம் அடுக்கிலிருந்து குறைந்து கொண்டிருக்கும் நிகழ்தகவு மட்டத்தில் பயணித்துக்கொண்டிருக்கிறோம். கூடியவிரைவில் நாம் இயல்புநிலைக்கு திரும்புவோம்; அதாவது இயல்புநிலை என்னவென்பது விளங்கியவுடன். நன்றி. ஒன்றுக்கெதிராக இரண்டின் இருபதாயிரமாம் அடுக்கு. மேலும் குறைந்துகொண்டே வருகிறது.’*

*குரல் நின்றுவிட்டது.*

*டாட்டாவும் ஆரதனும் ஒரு சிறு ஒளிப்பாயச்செந்நீலச்சதுரறையில் இருந்தனர்.*

*டாட்டா அடக்கவியலாத உற்சாகமடைந்தான்.*

*‘ஆரதா! என்ன விந்தை! முடிவிலாநிகழ்தகவின்மையுந்தி திறனளிக்கும் வெளிக்கலத்தால் நாம் காப்பாற்றப்பட்டிருக்கிறோம்! என்னால் நம்ப இயலவில்லை! இதைப்பற்றிய வதந்திகளை முன்பு கேட்டிருக்கிறேன். அவையெல்லாம் அதிகாரபூர்வமாக மறுக்கப்பட்டன. ஆனால் செய்து*

*முடித்திருக்கிறார்கள். நிகழ்தகவின்மையுந்தியை உருவாக்கிவிட்டார்கள்! ஆரதா, ... என்ன இது? ஆரதா? என்ன நடக்கிறது?'*

*ஆரதன் சதுரறையின் வாசற்கதவை அடைக்குமாறு தன்னையழுத்தி அதை மூடியேவைத்திருக்க முயன்றுகொண்டிருந்தான். ஆனால் வாசலில் கதவு சரியாகப்பொருந்தவில்லை. இடுக்குக்கள் வழியாக முடியுடைய சிறு கைகள் பல நீட்டிக்கொண்டு உள்நுழையப்பார்த்தன. அவற்றின் விரல்நுனிகள் மையால் கறைபட்டிருந்தன. சிறு குரல்கள் குழப்பமாக அரற்றின.*

*ஆரதன் திரும்பிப் பார்த்தான்.*

*'டாட்டா! முடிவிலா எண்ணிக்கையுள்ள குரங்குகள் வெளியே இருக்கின்றன. அவை தாங்கள் எழுதிய அசோகன் நாடக வசனத்தைப்பற்றி நம்மிடம் பேச விரும்புகின்றன.'*

## *அத்தியாயம் 10*

*முடிவிலாநிகழ்தகவின்மையுந்தி என்பது உயர்வெளியில் கிடந்து உழலாமலே மாபெரும் விண்மீனிடைத்தொலைவுகளை ஒரு நொடியின் ஒன்றுமில்லாத பின்னத்தில் எளிதில் கடப்பதற்கான ஓர் அற்புதமான புதுமுறை.*

*அது ஒரு நல்வாய்ப்பான தற்செயலால் கண்டுபிடிக்கப்பட்டு, தமகரனிலுள்ள விண்மீன்திரளரசு ஆய்வகக்குழுவால் ஒரு கட்டுப்படுத்தக்கூடிய உந்தல் வடிவில் வளராக்கப்பட்டது.*

*அதன் கண்டுபிடிப்பைப்பற்றிய சுருக்கமான கதை இதுதான்.*

*ஒரு பாம்பிள்வீனி 57 கீழ்மீசான் மூளையின் ஏரண மின்சுற்றுக்களுடன் (ஒரு கோப்பை சூடான காப்பி போன்ற) ஒரு வலுவான பிரௌனின் இயக்கமாக்கியில் தொங்கலிட்ட அணுத்திசையவரைவியை இணைப்பதன் மூலம் சிறிதளவு முடிவுறுநிகழ்தகவின்மையை உருவாக்கும் கொள்கை நாம் நன்கறிந்ததே. அவ்வாறான உருவாக்கிகள் பல கேளிக்கைகளில் விருந்தோம்பியின் முந்தானையிலுள்ள மூலக்கூறுகள் அனைத்தையும் தீர்மானிக்கத்தகாமை கோட்பாட்டின்படி ஒரே நேரத்தில் வலதுபக்கம் திடீரென்று தாவச்செய்யும் வேடிக்கைக்காக பயன்படுத்தப் பட்டன.*

*பல மதிப்புக்குறிய இயற்பியலாளர்கள் இது சகிக்கத்தகாதது என்றனர். அதற்கு ஒரு காரணம் இது அறிவியலை கீழ்த்தரமாக்குவதாக அமைகிறது என்றனர். மற்றொரு முக்கியக்காரணம் இந்தக்கேளிக்கைகளுக்கு அவர்கள் அழைக்கப்படாததாகும்.*

*அவர்கள் சகிக்காத மற்றொன்று ஒரு வெளிக்கலத்தை விண்மீன்களிடையேயுள்ள மனங்குழப்பும் தொலைவுகளை நொடியில் கடக்கச்செய்வதற்குப்போதுமான முடிவிலாநிகழ்தகவின்மைபுலத்தை உருவாக்கும் எந்திரத்தை கட்டுவிக்கும் முயற்சியில் தோல்வியுற்றதாகும். இறுதியில் அவ்வாறான இயந்திரத்தைக்கட்டுவிப்பது ஒரு தோற்றசாத்தியமின்மை என்று வெறுப்புடன் அறிவித்தனர்.*

*பிறகு ஒரு நாள் ஒரு கேளிக்கை முடிந்தபின் சோதனைச்சாலையை பெருக்கவிடப்பட்ட ஒரு மாணவன் இவ்வாறு சிந்திக்கத்தொடங்கினான்:*

*அவ்வாறான இயந்திரம் ஒரு தோற்ற சாத்தியமின்மையானால், ஏரணத்தால் அது ஒரு முடிவுறு நிகழ்தகவின்மை என்றாகிறது. ஆகையால் அதைக்கட்டுவிக்க நான் செய்யவேண்டியதெல்லாம் அதன் நிகழ்தகவின்மை எவ்வளவு என்று கணக்கிட்டு அதையும் ஒரு கோப்பை சூடான காப்பியையும் ஒரு முடிவுறுநிகழ்தகவின்மை இயற்றியில் புகுத்தவேண்டியதுதான்.*

*அவன் அவ்வாறே செய்தபோது, நெடுங்காலமாக முயன்றும் அடையாமலிருந்த முடிவிலாநிகழ்தகவின்மை இயற்றியை அவன் செய்துவிட்டதைக்கண்டு அவனே வியப்பால் அதிர்ச்சியுற்றான்.*

*விண்மீன்திரளின் மாபெரும் அறிவாளிக்கான பரிசைப்பெற்றபோது ஒரு மதிப்புக்குறிய இயற்பியலாளர் கூட்டம் வெறுப்புடன் அவனை தூற்றியது அவனை மேலும் அதிர்ச்சிக்குள்ளாக்கியது. தங்களை விட அறிவாளியான மாணவனையும் அவர்கள் சகிக்கவில்லை.*

# *அத்தியாயம் 11*

*தங்க இதயத்தின் நிகழ்தகவின்மைகசியாக்கட்டுப்பாட்டுக்கூண்டறை[6] ஒரு வழக்கமான வெளிக்கலத்தின் கூண்டறைபோலவே தோன்றியது. ஆனால் அது புதிதாயிருந்ததால் மிகவும் தூய்மையாயிருந்தது. சில கட்டுப்பாட்டு இருக்கைகளிலிருந்து அதை மூடிப்பொதிந்திருந்த நெகிழ்மத்தாள்கள்கூட எடுக்கப்படவில்லை. கூண்டறை நீள்கோளவடிவத்திலும் பெரும்பாலும் வெள்ளையாகவும், ஒரு சிறு உணவகத்தினளவிலும் இருந்தது. ஆயினும் அது கச்சிதமான நீள்கோளமாக இல்லை. அதன் பக்கச்சுவர்களிரண்டும் ஓர் இணையான வளைவாக ஒடுக்கப்பட்டும் எல்லா மூலைகளும் கோணங்களும் தடித்த வடிவங்களாக வளைக்கப்பட்டும் இருந்தன. உண்மை என்னவென்றால், அதை ஓர் இயல்பான எளிய நீள்கோளமாக வடிவமைப்பது அதிகப்பயன்தரக்கூடியதாக இருந்திருக்கும்; ஆனால் அப்படியிருந்தால், வடிவமைப்பாளர்கள் மனநிறைவடைந்திருக்கமாட்டார்கள். குழிந்த சுவர்களில் பதிந்த கட்டுப்பாட்டு மற்றும் வழிகாட்டு அமைப்புப்பலகங்களுக்கு மேலாக பெரிய காணொளித்திரைகளுடனும், குவிந்த சுவர்களில் பதிந்த நீண்ட கணினிவரிசையுடனும், கூண்டறை ஏதோ குறிக்கோள்களுடன் வடிவமைக்கப்பட்டதுபோல் தோற்றமளித்தது. ஒரு மூலையில் ஓர் எந்திரன் குனிந்து அமர்ந்திருந்தது. மிளிருமாறு மெருகூட்டப்பட்ட அதன் இரும்புத்தலை மிளிருமாறு மெருகூட்டப்பட்ட அதன் இரும்பு முழங்கால்களுக்கு நடுவில் தொங்கிக்கிடந்தது. அதுவும் கொஞ்சம் புதியதுதான். அது அழகாகக்கட்டப்பட்டு மெருகூட்டப்பட்டிருந்தாலும் எக்காரணத்தாலோ அதன் பல பாகங்களும் சரியாகப்பொருந்தாததுபோல் காணப்பட்டது. உண்மையில் அதன் பாகங்கள் கச்சிதமாகப்பொருந்தியிருந்தன; ஆனால் அதன் பற்சக்கர அமைப்பின் ஏதோவொரு பண்புக்கூறு அவை மேலும் நன்றாகப்பொருந்தியிருக்கலாம் என்று தோன்றச்செய்தது.*

*பீபிள்பிராசன் தன் கைகளை மினுங்கும்கருவிகளில் உரசிக்கொண்டும் கிளர்ச்சியுடன் சிரித்துக்கொண்டும் பதற்றத்துடன் கூண்டறையில் முன்னும்பின்னும் நடந்துகொண்டிருந்தான்.*

*திலக்கோமை ஒரு கருவித்தொகுதியின்முன் அமர்ந்து எண்களை வாசித்தளித்தாள். அவள் குரலை அருணாவமைப்பு வெளிக்கலம்முழுவதும் எடுத்துச்சென்றது.*

*'ஒன்றுக்கெதிராக ஐந்து; மேலும் குறைந்துகொண்டே வருகிறது,' என்றாள் அவள். 'ஒன்றுக்கெதிராக நான்கு; மேலும் குறைந்துகொண்டே வருகிறது ... ஒன்றுக்கெதிராக மூன்று ... இரண்டு ... ஒன்று ... ஒன்றுக்கொன்றான நிகழ்தகவு விகிதம். நாம் இயல்பு நிலையை அடைந்துவிட்டோம். மீண்டும் சொல்கிறேன். நாம் இயல்பு நிலையை அடைந்துவிட்டோம்.' அவள் தன் நுண்ணொலியனை இலதாக்கினாள். பிறகு மீண்டும் உளதாக்கி ஒரு புன்சிரிப்புடன் தொடர்ந்தாள்: 'ஆகையால் இன்னும் இயல்பற்றநிலை ஏதும் உங்களிடமிருந்தால் அது உங்கள் சிக்கல். நாங்கள் மீண்டும் கூப்பிடும்வரை இளைப்பாறுங்கள்.'*

*பீபிள்பிராசன் எரிச்சலால் வெடித்தான்: 'திலக்கோமை, யார் இவர்கள்?'*

*திலக்கோமை தன் இருக்கையில் சுழன்று அவனைநோக்கித்திரும்பினாள்.*

*'யாரோ இருவர். திறந்த வெளியிலிருந்து எடுத்தோம். பன்மை ச ஆல்பாவின் சச ₉ சுளை.'*

*'அது சரி. உன் நல்லெண்ணத்தை பாராட்டுகிறேன், திலக்கோமை. ஆனால் இந்தச்சூழ்நிலையில் இது தேவைதானா? நாமே ஓட்டத்திலிருக்கிறோம். காவல்துறையும் விண்மீன்திரளின்பாதியும் இதற்குள் நம்மை தேடிக்கொண்டிருபார்கள். இப்போதுதான் வழிப்போக்கர்களை ஏற்க வேண்டுமா? கருணையில் நீ நூற்றுக்குநூறு. ஆனால் சிந்தனையில் சுழி.'*

*எரிச்சலுடன் ஒரு கட்டமைப்புப்பலகத்தில் தன் கையை அடித்தான். முக்கியமான எதையும் உடைக்கும்முன்பு திலக்கோமை அமைதியாக அவன் கையை அகற்றினாள். பீபிள்பிராசனின் மனத்தில் எவ்வளவு முரட்டுத்தனமும் தற்பெருமையும் இருக்கின்றனவோ அவ்வளவு அவன் கைகள் திறமையற்றவை. அவனுடைய ஒரு முரட்டுக்கையசைவு வெளிக்கலத்தையே எளிதில் உடைத்தெறியக்கூடும். தன்னுடைய எந்தவொரு செயலின் முழுப்பொருளையும் அறியாததே அவன் வெற்றிகரமாக வாழ்வதற்கு முதற்காரணம் என்று திலக்கோமை சந்தேகிக்கத்தொடங்கியிருந்தாள்.*

*6மொ. கு: நீர்மூழ்கிக்கப்பலில் நீர்கசியாக்கூண்டறை இருப்பது போல.*

*‘பீபூ,’ என்று பொறுமையாகப்பேசினாள், ‘திறந்த வெளியில் அவர்கள் கவசமில்லாமல் மிதந்தனர். நீயாயிருந்தால் அவர்களை அப்படியே இறக்கவிட்டிருப்பாயா?’*

*‘ம்... நான்... அப்படியில்லை. இருந்தாலும் ...’*

*‘அப்படியில்லை என்றால்? வேறெப்படியாவதா? இருந்தாலும், என்ன இருந்தாலும்?’ திலக்கோமை தன் தலையை ஒரு பக்கமாகச்சரித்துப்பார்த்தாள்.*

*‘இல்லை ... வேறு யாராவது அவர்களைப் பிறகு காப்பாற்றியிருக்கலாம்.’*

*‘ஒரு நொடி கழிந்தால் அவர்கள் இறந்திருப்பார்கள்.’*

*‘நீ இந்த சிக்கலைப்பற்றி ஒரு நொடி சிந்தித்திருந்தால் சிக்கலே இல்லாமால் போயிருக்கும் அல்லவா?’*

*‘அப்படியானால் அவர்கள் செத்திருந்தால்தான் உனக்கு மகிழ்ச்சியாய் இருந்திருக்கும்!’*

*‘ம்... மகிழ்ச்சி என்றில்லை... ஆனால்...’*

*‘சரி போகட்டும்.’ திலக்கோமை கட்டுப்பாட்டுப்பலகத்தைநோக்கி திரும்பியபடியே சொன்னாள், ‘எப்படியும், நான் அவர்களை எடுக்கவில்லை.’*

*‘என்ன? நீ எடுக்கவில்லையா? அப்படியானால் வேறு யார் எடுத்தார்?’*

*‘வெளிக்கலமே எடுத்தது.’*

*‘ஆங்...?’*

*‘நாம் நிகழ்தகவின்மை ஓட்டத்திலிருக்கும்போது.’*

*‘ஆனால் அது சாத்தியமில்லை.’*

*‘இல்லை, பீபூ. அது மிக மிக நிகழ்தகவின்மை. அவ்வளவுதான்.’*

*‘இ... ஆமாம்.’*

*‘இதோ பார், பீபூ’ என்று அவன் கையைத்தட்டிக்கொண்டே சொன்னாள், ‘வேற்றுலகர்களைப்பற்றி கவலைப்படாதே. அவர்கள் யாரோ இரண்டு பேர். எந்திரனை அனுப்பி அவர்களை இங்கு கொண்டுவரச்செய்வோம். ஏ மார்வின்!’*

*மூலையில் எந்திரனின் தலை திடீரென்று வளைந்து நேரானது. பிறகு மிகச்சன்னமாக தள்ளாடியது. தன் உண்மையான எடையைவிட இரண்டு கிலோகிராம் அதிக எடை உள்ளது போன்ற முயற்சியுடன் எழுந்தது. அறையின் குறுக்கே நடப்பது ஒரு மாபெரும் வேலையாகத்தோன்றும்படி நடந்துவந்தது. திலக்கோமையின் முன் வந்து நின்றபோது அவள் இடது தோளைத்தாண்டி எங்கோ பார்த்து விழிப்பது போன்றிருந்தது.*

*‘நான் மிகவும் மனத்தாழ்வில் இருக்கிறேன் என்பதை நீங்கள் அறியவேண்டும்’ என்றது. அதன் குரல் மெதுவாகவும் உற்சாகமில்லாமலும் கேட்டது.*

*‘அடக்கடவுளே’ என்று முனகிய பீபிள்பிராசன் ஓர் இருக்கையில் தன்னை வீழ்த்திக்கொண்டான்.*

*திலக்கோமை அன்புடன் உற்சாகமூட்டும் குரலில் ‘உன் மனத்துக்குத்தெம்பூட்டும் ஒரு வேலே தருகிறேன்.’*

*‘அது சரிப்படாது. எனக்கு மிகப்பெரிய மனம்.’*

*‘மார்வின்!’ என்றாள் திலோத்தமை எச்சரிக்கும் குரலில்.*

*‘சரி, சரி. நான் என்ன செய்யவேண்டும்?’*

*‘இரண்டாம் எண் நுழைவுக்குடா சென்று அங்குள்ள வேற்றுலகரை கடுங்காணிப்புடன் இங்கு கொண்டுவா.’*

*ஒரு மைக்குரோநொடி இடைநிற்றலாலும், சுருதியிலும் ஒலித்தரத்திலும் தவறென்று சொல்லவியலாதபடி துல்லியமாகக்கணக்கிட்ட ஒரு நுண்ணிணக்கேற்றத்தாலும் மார்வின் தன் வெறுப்பையும் மனித இனம் எவ்வளவு மோசமானது என்பதையும் காட்டுவதில் வெற்றியடைந்தான்.*

*‘இவ்வளவுதானா?’ என்றான்.*

*‘ஆம்’ என்றாள் திலக்கோமை திடமாக.*

*‘இதெல்லாம் எனக்கு மகிழ்ச்சியைத்தராது.’*

*பீபிள்பிராசன் தன் இருக்கையிலிருந்து துள்ளி எழுந்தான்.*

*‘உனக்கு மகிழ்ச்சி என்றெல்லாம் அவள் சொல்லவில்லை. சொன்னதைச்செய்.’ என்று இரைந்தான்.*

*‘சரி, சரி. செய்து தொலைக்கிறேன்.’ என்று உடைந்த மணிபோல் ஓர் ஒலியை எழுப்பிக்கொண்டு சென்றான்.*

*‘நல்லது... மிக்க நன்றி...’ என்று பீபிள்பிராசன் சிடுசிடுத்தான்.*

*மார்வின் திரும்பி தன் தட்டையான இமைகளையும் சிவந்த முக்கோணக்கண்களையும் உயர்த்தி அவனை நோக்கித் திருப்பினான்.*

*‘நான் உங்களையும் மனத்தாழ்வடையச்செய்கிறேனா?’ என்று ஆதங்கத்துடன் கேட்டான்.*

*‘இல்லை, மார்வின்! அதெல்லாம் ஒன்றுமில்லை’ என்று கொஞ்சலுடன் சொன்னாள் திலக்கோமை.*

*‘உங்களையும் மனத்தாழ்வடையச்செய்தால் என் மனம் பொறுக்காது.’*

*‘இல்லை. அதைப்பற்றி கவலைப்படாதே.’ என்று கொஞ்சலைத்தொடர்ந்தாள். ‘உனக்கு இயல்பாகத்தோன்றும்படி செயற்படு. எல்லாம் சரியாகிவிடும்.’*

*‘நிச்சயமாகவா? நீ தவறாக எடுத்துக் கொள்ளவில்லையே?’ என்று துருவினான் மார்வின்.*

*‘இல்லவே இல்லை மார்வின். இதெல்லாம் வாழ்வில் நிகழ்வதுதானே!’*

*மார்வின் அவள்மீது ஒரு மின்பார்வையை வீசினான்.*

*‘வாழ்வா? வாழ்வைப்பற்றி என்னிடம் பேசாதே!’*

*வெறுப்புடன் சுழன்று திரும்பி கூண்டறையை விட்டு தன்னை இழுத்துச்சென்றான். கூண்டறையின் கதவு அவனுக்குப்பின்னால் ஒரு மனநிறைவுப்பெருமூச்சுடன் சாத்திக்கொண்டது.*

*‘இந்த எந்திரனின் தொல்லையை இன்னொரு கணம் என்னால் தாங்கவியலாது, பீபூ’ என்று உறுமினாள் திலக்கோமை.*

*எந்திரன் என்பது மனிதனின் வேலையைச்செய்வதற்காக வடிவமைக்கப்பட்ட ஓர் எந்திரவியல் செங்கருவி என்று பால்வீதியக்கலைக்களஞ்சியம் வரையறுக்கிறது. வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் சந்தையிடல் பிரிவு எந்திரனை ‘நீங்கள் உடன்பழக ஒரு நெகிழ்மநண்பன்’ என்று வரையறுக்கிறது.*

*பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் சந்தையிடல் பிரிவை 'புரட்சி வரும்போது முதலில் பலியாகப்போகும் இதயமற்ற எத்தர்கள்' என்று வரையறுக்கிறது. இந்த வரையறை எந்திரனியல் நிருபர் வேலையில் ஆர்வமுள்ளவர்கள் விண்ணப்பிக்கலாமென்ற ஓர் அடிக்குறிப்புடன் காணப்படுகிறது.*

*இதில் வேடிக்கை என்னவென்றால், ஆயிரமாண்டுகளுக்குப்பின்னுள்ள எதிர்காலத்திலிருந்து ஒரு நேரநெளிவுமூலம் விழுந்த பால்வீதியக் கலைக்களஞ்சியத்தின் ஒரு பதிப்பு வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் சந்தையிடல் பிரிவை 'புரட்சி வந்தபோது முதலில் பலியான இதயமற்ற எத்தர்கள்' என்று வரையறுக்கிறது.*

*ஓர் இமைப்புடன் நீலச்சிவப்புச்சதுரறை இல்லாமல் போய்விட்டது. குரங்குகள் வேறெந்தப்பரிமாணத்திலோ ஆழ்ந்தன. கப்பலில் ஏறுவதற்குமிறங்குவதற்குமானபகுதியில் தாங்கள் இருப்பதை ஆரதனும் டாட்டாவும் உணர்ந்தனர். அந்த இடம் மிகவும் நன்றாகவே இருந்தது.*

*'இந்த வெளிக்கலம் புத்தம் புதிது என்று எண்ணுகிறேன்.' என்றான் டாட்டா.*

*'எப்படித் தெரிகிறது?' என்று கேட்டான் ஆரதன். 'உலோகத்தின் வயதை கண்டுபிடிக்க ஏதாவது விந்தைக்கருவி வைத்திருக்கிறாயா?'*

*'இல்லை. இதோ இந்த விளம்பரப்புத்தகத்தைத் தரையில் கண்டெடுத்தேன். அண்டத்தையே வாங்கிவிடலாம் என்று சொல்லக்கூடிய விளம்பரங்களுள் ஒன்று. ஆகா, இதோ பார். நான் சொன்னது சரியாகிவிட்டது.'*

*டாட்டா ஒரு பக்கத்தில் தன் விரலால் குத்திக்காட்டி புத்தகத்தை ஆரதனிடம் நீட்டினான்.*

*'இது சொல்கிறது: நிகழ்தகவின்மை இயற்பியலின் ஓர் அரிய கண்டுபிடிப்பு. கப்பலின் உந்தி முடிவிலாநிகழ்தகவின்மையை அடைந்தவுடனே அண்டத்தின் ஒவ்வொரு புள்ளியையும் அது கடக்கிறது. மற்ற அரசினர்களை உங்கள் மீது பொறாமைப்படச்செய்யுங்கள். அடேயப்பா, இது பெரியவிடத்துச்செயல்.'*

*டாட்டா கிளர்ச்சியடைந்தவனாய் கப்பலின் செய்நுட்பக்குறிப்புவிவரப்பக்கங்களை புரட்டிப்படித்தான். அவ்வப்போது வியப்பான ஏக்கங்கள் அவனிடமிருந்து வெளிப்பட்டன. அவன் புவியில் சிக்கிக்கொண்டிருந்த காலத்தில் வெளிப்பயணத்தொழில்நுட்பம் வெகுவாக வளராக்கமடைந்திருப்பது தெளிவானது.*

*ஆரதன் முதலில் கொஞ்சநேரம் இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்தான். ஆனால் டாட்டா சொன்னதில் பெரும்பாலானவை அவனுக்கு விளங்காததால் அவன் கவனமும் கைகளும் வேறெங்கோ அலையத் தொடங்கின. ஒன்றும் புரியாத ஒரு கணினி வரிசையில் தன் விரல்களை ஓடவிட்டான். ஒரு பலகத்தில் அழுத்துவதற்கு ஆவலூட்டும் வகையில் இருந்த ஒரு பெரிய சிவப்புப்பொத்தானை அவன் விரல்கள் வந்து அடைந்தன. அதை அழுத்தினான். பலகம் ஒளிரத்தொடங்கி 'இந்தப் பொத்தானை அழுத்தாதே' என்ற சொற்றொடர் தோன்றியது. ஆரதன் திடுக்கிட்டான்.*

*'இதைக்கேள்,' என்றான் இன்னும் புத்தகத்திலேயே ஆழ்ந்திருந்த டாட்டா, 'கப்பலின் தன்னாள்வியலை மிகவும் பெரிதாகச்சொல்கிறார்கள். வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் புதிய தலைமுறை எந்திரன்களும் கணினிகளும் இருக்கின்றனவாம். அவை உமத பண்புக்கூறுகள் உடையனவாம்.'*

*'உமத? அதென்ன?' என்றான் ஆரதன்.*

*'ஓ, அது உண்மையான மனிதத்தற்பண்புகள் என்கிறது.'*

*'ஓ, பயங்கரமாகத்தோன்றுகிறதே!'*

*அவர்களுப் பின்னால் ஒரு குரல் சொன்னது, 'ஆம், பயங்கரந்தான்.' சலிப்புடன்கூடிய அந்தக்குரலுடன் ஓர் உலோக ஒலியும் வந்தது. அவர்கள் சுழன்று திரும்பி ஓர் உற்சாகமற்ற இரும்பு மனிதன் வாசலில் சோர்வுடன் நிற்பதை கண்டனர்.*

*‘என்ன?’*

*‘பயங்கரம்,’ என்று தொடர்ந்தான் மார்வின், ‘எல்லாமே பயங்கரந்தான். அதைப்பற்றி பேசக்கூட எனக்கு மனமில்லை. எடுத்துக்காட்டாக இந்த கதவைப்பாருங்கள்’ என்று சொல்லி உள்ளே வந்தான். அவனுடைய குரலிணக்கேற்றியின் உலோக மின்சுற்றுக்கள் விளம்பரப்புத்தகத்தின் நடையில் அவனை பேசவைத்தன. இந்தக்கப்பலின் எல்லாக்கதவுகளும் கலகலப்பான தற்பண்புடையவை. உங்களுக்காகதற்க்க மகிழ்ச்சியுடன் காத்திருக்கின்றன. நீங்கள் சென்றதும் தங்கள் வேலைகளை நன்குசெய்துமுடித்த மனநிறைவுடன் மூடிக்கொள்கின்றன.’*

*உண்மையில் அவன் வந்ததும் அந்தக் கதவு மூடியபோது எழுந்த ‘ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம்ம் ஆ’ என்ற ஒலி ஒரு மனநிறைவுப்பெருமூச்சுபோல்தான் கேட்டது.*

*மார்வின் ஒரு வெறுப்புடன் அதை பார்த்தான். அவனுடைய ஏரண மின்சுற்றுக்கள் அருவருப்புடன் அந்த கதவின்மீது வன்முறையைச்செலுத்தலாமா என்று விவாதித்தன. வேறுசில மின்சுற்றுக்கள் குறுக்கிட்டு அதனால் என்ன பயன்? விட்டுத்தள்ளு என்றன. மற்றும் சில மின்சுற்றுக்கள் சும்மா வேடிக்கைக்காக கதவின் மூலக்கூறு அகைகளையும் மனிதவனைய மூளையணுக்களையும் அலசிப்பார்த்தன. அதையும் செய்துமுடித்தபின் சுற்றியுள்ள கனநோமநொடி வெளியில் அவை வெளியிடும் நீரிய உமிழ்தல் மட்டத்தை அளந்து பார்த்தன. பிறகு செய்வதற்கு ஒன்றும் இல்லாமல் அலுப்புடன் தங்களைத்தாங்களே இயக்கடக்கிக்கொண்டன. அவன் திரும்பியபோது ஏமாற்ற அதிர்ச்சியால் அவன் எந்திர உடல் ஒரு முறை நடுங்கியது.*

*‘வாருங்கள். உங்களை கலப்பாலத்துக்கு அழைத்துச்செல்ல எனக்கு உத்தரவு. எனக்கு ஒரு கோளின் அளவு மூளை. ஆனால் உங்களை கலப்பாலத்துக்கு அழைத்துச்செல்லும் வேலை அளிக்கப்பட்டுள்ளது. இதனால் என் வேலையில் மனநிறைவடையவியலுமா? சொல்லுங்கள்.’*

*திரும்பி அவன் வெறுக்கும் கதவை நோக்கி நடந்தான்.*

*‘ம்... மன்னிக்கவும்,’ என்றான் தொடர்ந்து நடந்த டாட்டா, ‘இந்த வெளிக்கலம் எந்த அரசினுடையது?’*

*மார்வின் அவனைப் புறக்கணித்தான்.*

*‘இந்தக் கதவிடம் எச்சரிக்கையாய் இருங்கள். இது மீண்டும் திறக்கப்போகிறது. அதனிடமிருந்து திடீரென்று எழும் தற்பெருமித்தால் நான் இதை அறிகிறேன்.’*

*ஒரு பணிவான சிறு சிணுக்கத்துடன் கதவு மீண்டும் பிளந்து திறந்தது. மார்வின் வீராப்புடன் கடந்து சென்று ‘வாருங்கள்’ என்றான்.*

*மற்றவர்கள் விரைவில் தொடர்ந்து சென்றனர். கதவின் பிளவு மனநிறைவான சில கிளிக்குகளுடனும் உருளொலிகளுடனும் மீண்டும் பொருந்திக்கொண்டது.*

*‘வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் சந்தையிடல் பிரிவுக்கு நன்றி’ என்று சொல்லி மார்வின் அவர்களுக்கு முன் நீண்டு கிடந்த பளபளக்கும் வளைந்த தாழ்வாரத்தில் தனிமையுணர்வுடன் முன்சென்றான். ‘உண்மையான மனிதத்தற்பண்புகள் உடைய எந்திரன்களைக்கட்டநினைத்து என்னை உருவாக்கினார்கள். நான் ஒரு தற்பண்பு மாதிரியம். பார்த்தால் உங்களுக்கு தெரியவில்லையா?’*

*டாட்டாவும் ஆரதனும் அவமானத்துடன் தங்கள் அறியாமையை ஒப்புக்கொண்டனர்.*

*‘அந்தக்கதவு மீது எனக்கு ஒரே வெறுப்பு’ என்று சொன்ன மார்வின், ‘நான் உங்களையும் மனத்தாழ்வடையச்செய்கிறேனா?’ என்று கேட்டான்.*

*‘எந்த அரசு ...’ என்று டாட்டா மீண்டும் தொடங்கினான்.*

*‘இது எந்த அரசுக்கும் சொந்தமில்லை,’ என்று சிடுசிடுத்த மார்வின் ‘இது திருடப் பட்டது’ என்றான்.*

*‘திருடப் பட்டதா?’*

*'திருடப் பட்டதா?' என்று மார்வின் எதிரொலித்தான்.*

*'யார் திருடியது?' என்று டாட்டா கேட்டான்.*

*'பீபிள்பிராசன்.'*

*டாட்டாவின் முகத்தில் ஒரு மகத்தான மாற்றம் தோன்றியது. அதிர்ச்சியையும் வியப்பையும் காட்டும் குறைந்தது ஐந்து விதமான தோற்றங்கள் ஒன்றாகக்குவிந்து குப்பையாகக்கலந்தன. நடந்து கொண்டிருந்த அவன் இடது கால் தூக்கியபின் மீண்டும் தரையைச்சென்றடைவது மிகவும் கடினமாகத்தோன்றியது. அவன் எந்திரனைப்பார்த்து விழித்துக்கொண்டே சில அம்பனையத்தசைகளை சிக்கலெடுக்க முயன்று கொண்டிருந்தான்.*

*'பீபீள்பிராசன் ...?' என்று வலுவிழந்து சொன்னான்.*

*'நான் ஏதும் தவறாகச்சொல்லிவிட்டேனா?' என்ற மார்வின் தன்னை இழுத்துச்செல்வதை தொடர்ந்தான். 'நான் மூச்சுவிடுவதற்காக என்னை மன்னித்து விடுங்கள். ஆனால் நான் மூச்சே விடுவதில்லை. எனினும் ஏன்தான் இப்படிச் சொல்கிறேனோ! அடக்கடவுளே, நான் எவ்வளவு மனத்தாழ்வுடன் இருக்கிறேன்! இதோ இன்னொரு தன்மனநிறைவுடைய கதவு. வாழ்வு! வாழ்வைப்பற்றி என்னுடன் பேசாதீர்கள்.'*

*'யாரும் பேசவில்லை' என்று முணுமுணுத்த ஆரதன் 'டாட்டா, உன் உடம்புக்கு ஏதாவது செய்கிறதா?' என்றான்.*

*டாட்டா அவனைப் பார்த்து விழித்தான். 'இவன் பீபிள்பிராசன் என்றா சொன்னான்? என்றான்.*

# *அத்தியாயம் 12*

*பீபிள்பிராசன் தன்னைப்பற்றிய செய்திக்காக துணையீதவானலைப்பட்டைகளை தேடியபோது கசடிசையின் உரத்த ஒலி தங்க இதயத்தின் கூண்டறையில் வெள்ளமாகப்பாய்ந்தது. அந்த எந்திரத்தைச்செயலாக்குவது கடினமாயிருந்தது. முன்காலத்தில் பொத்தான்களை அமுக்கியும் சுழற்றிகளைத்திருப்பியும் வானொலி செயலாக்கப்பட்டது. பிறகு தொழில்நுட்பம் முன்னேறியபோது கட்டுப்பாடுகள் தொடுவுணர்விகளாக மாறின; பலகங்களை விரலால் தடவினால் போதும். இப்போதெல்லாம் கேட்பொலியகைகளின் பொதுவான திசைகளில் கையை அசைத்தாலே போதும். உடல் வேலை வெகுவாகக்குறைக்கப்பட்டது. ஆனால் ஒரே வானொலி நிலையத்தை தொடர்ந்து கேட்க வேண்டுமானால் இம்மியும் அசையாமல் இருக்கவேண்டியது எரிச்சலூட்டுவதாக இருந்தது.*

*பீபிள்பிராசன் தன் கையை வீசினான். நிலையம் மீண்டும் மாறியது. வேறொரு கசடிசை கேட்டது. ஆனால் இது செய்தி அறிவிப்பின் பின்னணி இசை. எப்போதும்போல் இசையின் தாளத்துடன் பொருந்துவதற்காக செய்தி திருத்தப்பட்டிருந்தது.*

*' ... நிலையம் உங்களுக்காக விண்மீன்திரளெங்கும் எக்காலமும் இந்த துணையீத அலைப்பட்டையில் செய்தி அகற்பரப்புகிறது' என்று ஒரு குரல் கிரீச்சிட்டது. 'எங்குமுள்ள அறிவாற்றலுள்ள எல்லா உயிரினங்களுக்கும் எங்கள் வணக்கம். மற்றவர்கள் இரண்டு கற்களை உரசிப்பார்க்கவும். இன்றைய முதன்மைத்தலைப்புச்செய்தி என்னவென்றால், புதிய நிகழ்தகவின்மை உந்தி பொருத்தப்பட்ட மாதிரிய வெளிக்கலம் திருடப்பட்டதுதான். திருடியது வேறு யாருமில்லை; விண்மீன்திரள் அதிபர் பீபிள்பிராசன்தான். இப்போது எல்லாரும் கேட்கும் கேள்வி, இந்தப் பீமகானின் பைத்தியம் இறுதியில் முழுமைநிலையை அடைந்துவிட்டதா என்பதுதான். அகிலண்டத்தொண்டையுறுமியைப்புனைந்தவரும், முந்நாள் நம்புமைத்தந்திரவாதியும், பெருவெடிப்புக்குப்பின் வந்த மீப்பெருவெடிப்பு என்று ஒருமுறை கலம்பிகையின் கிறுக்குத்தனப்பதிவேட்டால் வழங்கப்பட்டவரும், யாமறிந்த அண்டத்திலே இவரைப்போல் மோசமாக உடையணிவார் எவரும் காணோம் என்று ஏழாவது முறையாக தேர்ந்தெடுக்கப்பட்டவருமாகிய பீபிள்பிராசன் இந்தமுறை இதற்கு என்ன பதில் சொல்லப்போகிறார்? அவருடைய தனியாள் மூளைநலத்தனித்துவர் குமட்டரைக்கேட்டோம் ...'*

*இசை ஒரு கணம் சுழன்று வீழ்ந்தது. வேறொரு குரல் நுழைந்தது. அது குமட்டருடையதாக இருக்கவேண்டும். அவர் சொன்னார்: 'அதாவது, பீபிள்பிராசன் என்ன விதமான மனிதன் என்றால் ...' அதற்கு மேல் அவர் ஒன்றும் சொல்லவில்லை. ஏனென்றால் ஒரு மின்பென்சில் கூண்டறையின் குறுக்கே பறந்துவந்து வானொலிவாங்கியின் உளதிலது உணர்வுவெளியின் வழியாகச்சென்றது. பீபிள்பிராசன் திரும்பித் திலக்கோமையைப் பார்த்தான். அவள்தான் பென்சிலை எறிந்திருந்தாள்.*

*'ஏய், ஏன் அப்படிச்செய்தாய்?' என்று கேட்டான்.*

*திலக்கோமை ஒரு திரைநிறையவுள்ள எண்களில் தன் விரலை ஒற்றிக்கொண்டிருந்தாள்.*

*'எனக்கு ஒன்று நினைவுக்கு வந்தது.'*

*'அப்படியா? அதற்குத்தான் என்னைப்பற்றிய செய்தியை இலதாக்கினாயா?'*

*'உன்னைப்பற்றி ஏற்கெனவே அதிகம் கேட்டிருக்கிறாய்.'*

*'என் மனப்பான்மையை உயர்த்த அது தேவை என்பதுதான் நமக்குத்தெரியுமே.'*

*'உன் ஆணவத்தை ஒரு கணம் விட்டு வருகிறாயா? இது முக்கியமானது.'*

*'என் ஆணவத்தை விட முக்கியமான ஒன்று இருந்தால், அதைப்பிடித்து சுட்டுக்கொல்லவேண்டும்.' பீபிள்பிராசன் அவளை முறைத்தான். பிறகு சிரித்தான்.*

*'இதோ பார். நாம் இரண்டு பேரை எடுத்தோம் அல்லவா?'*

*'எந்த இரண்டு பேர்?'*

*'நாம் எடுத்த இரண்டு பேர்.'*

*'ஓ, அந்த இரண்டு பேர்!'*

*'நாம் அவர்களை பன்மை ச ஆல்பாவின் சச , சுளையிலிருந்து எடுத்தோம்.'*

*'ஆம்...?' என்று சொல்லி பீபிள்பிராசன் விழித்தான்.*

*'அது உனக்கு எதையாவது நினைவு படுத்துகிறதா?' என்று திலக்கோமை அமைதியாகக்கேட்டாள்.*

*'ம்... பன்மை ச ஆல்பாவின் சச , சுளை... பன்மை ச ஆல்பாவின் சச , சுளை...'*

*'ஏதாவது?'*

*'ஆ... ச என்பதற்கு என்ன பொருள்?'*

*'எந்தச்ச?'*

*'எந்தச்சவானாலும்.'*

*பீபிள்பிராசனுடன் பழகுவதில் திலக்கோமைக்கு இருந்த மாபெரும் இடர்ப்பாடு என்னவென்றால், அவன் எப்போது மற்றவர்களை ஏமாற்றுவதற்காக முட்டாளாக நடிக்கிறான், எப்போது தான் சிந்திப்பதற்கு சோம்பேறித்தனப்பட்டுக்கொண்டு மற்றவர்களை சிந்திக்கவைப்பதற்காக முட்டாளாக நடிக்கிறான், எப்போது நடப்பது ஒன்றும் தனக்கு விளங்கவில்லை என்பதை மறைக்க முட்டாளாக நடிக்கிறான், எப்போது உண்மையிலே கலப்படமற்ற முட்டாளாக இருக்கிறான் என்ற வேறுபாடுகளை தெரிந்துகொள்வதுதான். அவன் மிகுந்த அறிவாளியாக இருப்பதில் பெயர்பெற்றவன். ஆனால் எப்போதும் அறிவாளியாக இல்லை. இது அவனுக்கு சற்றுத்துயரமளித்தது. அதனால்தான் இந்த நடிப்பு. மக்கள் தன்னை வெறுப்பதைவிட தன்னை ஒரு புதிராக எண்ணுவதே மேல் என்று அவன் எண்ணினான். இதுதான் எல்லாவற்றிலும் முட்டாள்தனமாக திலக்கோமைக்கு தோன்றியது. ஆனால் இதைப்பற்றி விவாதிப்பதை கைவிட்டிருந்தாள்.*

*அவன் அவ்வாறு இருந்ததற்கு எதுவானாலும் காரணமாக இருந்துவிட்டுப்போகட்டும் என்று ஒரு பெருமூச்சு விட்டு, அவனுக்கு எளிதாக்குவதற்காக காண்திரையில் ஒரு விண்மீன் வரைபடத்தை கொண்டுவந்தாள்.*

*'பார், இதோ இங்கே' என்று சுட்டிக்காட்டினாள்.*

*'ஏய், ... ஆம்!' என்றான் பீபிள்பிராசன்.*

*'என்ன?'*

*'என்ன என்ன?'*

*அவள் தலையின் உட்பக்கத்தின் ஒரு பகுதி அவள் தலையின் உட்பக்கத்தின் மற்றப்பகுதிகளைப்பார்த்து அலறியது. அவள் அமைதியாக, 'நீ என்னை முதலில் எந்தச்சுளையிலிருந்து கொண்டு வந்தாயோ அதே சுளைதான் இது' என்றாள்.*

*அவன் அவளைப்பார்த்தான். பிறகு திரையைப்பார்த்தான்.*

*'ஏய், ... ஆம்!' என்றான், 'என்ன வியப்பு! நாம் குதிரைத்தலை நெபுலத்தின் நடுவில் சென்றிருக்க வேண்டும். நாம் அங்கு எப்படிச்சென்றோம்? அது எங்கோ ஒரு மூலையிலல்லவா கிடக்கிறது.'*

*அவள் இதை புறக்கணித்தாள்.*

*மேலும் அமைதியாக, 'நிகழ்தகவின்மையுந்தி. இதை நீதான் முன்பு எனக்கு விளக்கினாய். நாம் அண்டத்தின் ஒவ்வொரு புள்ளியையும் கடந்து செல்வோம், தெரியுமல்லவா?'*

*‘ஆம். ஆனால் இது ஒரு மிகப்பெரிய தற்செயல். இல்லையா?’*

*‘ஆம்.’*

*‘அதே இடத்தில் இன்னொருவரை எடுப்பதா? அண்டத்திலிருக்கும் இடங்களிலெல்லாம் ... இது மிகவும்... இதை கணக்கிட வேண்டும். கணினி!’*

*வெளிக்கலத்தின் ஒவ்வொரு நுண்துகளையும் ஊடுருவிக்கட்டுப்படுத்தும் வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் கலமேற்கணினி தகவற்றொடர்பு நிலமத்துக்கு மாறியது.*

*‘வணக்கம்!’ என்று உல்லாசமாகச்சொன்ன அதே நேரத்தில் பதிவுக்காக ஒரு சிறு நகர்நாடாத்துண்டையும் வெளித்தள்ளியது கணினி.*

*‘அடக்கடவுளே,’ என்றான் பீபிள்பிராசன். இந்தக்கணினியுடன் அவன் அதிகநாள் பழகவில்லை. அதற்குள் அதை வெறுக்கத்தொடங்கியிருந்தான்.*

*கணினி சலவைத்தூள் விற்பனையாளரின் உற்சாகத்துடன் தொடர்ந்தது.*

*‘உங்கள் சிக்கல் எதுவாயினும் அதன் தீர்வை மகிழ்ச்சியுடன் வழங்க நான் காத்துக்கொண்டிருக்கிறேன்.’*

*‘சரி, வேண்டாம். நான் காகிதத்தை பயன்படுத்திக்கொள்கிறேன்.’*

*‘தாராளமாக’ என்று சொன்ன கணினி உரையை குப்பைக்கூடையில் போட்டது. ‘அதனால் பரவாயில்லை. உங்களுக்கு எப்போது தேவைப் ...’*

*‘மூடிக்கொள்!’ என்ற பீபிள்பிராசன் ஒரு பென்சிலை பிடுங்கிக்கொண்டு திலக்கோமையின் அருகில் அமர்ந்தான்.*

*‘சரி, சரி,’ என்று காயம்பட்ட குரலில் சொன்ன கணினி தன் பேச்சுக்கால்வாயை மூடிக்கொண்டது.*

*பீபிள்பிராசனும் திலக்கோமையும் நிகழ்தகவின்மைபறப்புப்பாதைவருடி தங்கள் முன் அமைதியாக மினுக்கிய எண்களில் ஆழ்ந்து பார்வையிட்டனர்.*

*‘அவர்கள் நோக்குநிலையில் அவர்கள் காப்பாற்றப்படுவதற்கான நிகழ்தகவின்மை என்ன என்பதைக்கணக்கிடலாம், அல்லவா?’ என்று பீபிள்பிராசன் கேட்டான்.*

*‘ஆம். அது ஒரு மாறிலி. ஒன்றுக்கெதிராக இரண்டின் இருநூற்றெழுபத்தையாயிரத்து எழுநூற்றொன்பதாம் அடுக்கு.’*

*‘அது மிக அதிகம். அவர்கள் மிக மிக நல்வாய்ப்புடையவர்கள்.’*

*‘ஆம்.’*

*‘ஆனால், வெளிக்கலம் அவர்களை எடுத்தபோது நாம் என்ன செய்துகொண்டிருந்தோம் என்பதன் ஒப்பளவில் ...’*

*திலக்கோமை எண்களைத்தட்டினாள். இரண்டின் முடிவிலிக்கு ஒன்றுகுறைவானதாம் அடுக்கு என்ற விடையைப்பெற்றனர். (இது நிகழ்தகவின்மை இயற்பியலில் மட்டுமே மரபேற்புசார் பொருளுடைய ஒரு விகிதமுறா எண்).*

*‘இது மிகக்குறைவு,’ என்று தொடர்ந்த பீபிள்பிராசன் வாயால் ஒரு மெல்லிய ஊதொலியை வெளியிட்டான்.*

*‘ஆம்’ என்று ஒத்துக்கொண்ட திலக்கோமை அவனை புதிருடன் பார்த்தாள்.*

*‘இவ்வளவு பெரிய நிகழ்தகவின்மை முரண்பாட்டை எவ்வாறு விளக்குவது? நிகழ்தகவின்மைக்கணக்கு சமனமாக வேண்டுமானால் வேறெங்காவது ஒரு நிகழ்தகவின்மை தோன்றவேண்டும்.*

*பீபிள்பிராசன் சில எண்களை கிறுக்கினான். பிறகு அவற்றை அடித்துவிட்டு பென்சிலை எறிந்தான்.*

*‘கழுதை முட்டை! எனக்கு இந்த கணக்கெல்லாம் வராது.’ பீபிள்பிராசன் எரிச்சலால் தன் இரண்டு தலைகளையும் ஒன்றாக முட்டிக்கொண்டு பல்லைக்கடித்தான். ‘சரி, கணினி!’*

*கணினியின் குரலியற்றிமின்சுற்றுக்கள் மீண்டும் உயிர்பெற்றன. ‘மீண்டும் வணக்கம்!’ என்றன. (நகர்நாடாத்துண்டு, நகர்நாடாத்துண்டு). ‘என் குறிக்கோளெல்லாம் உங்கள் வாழ்வை எளிமையாக, மேலும் எளிமையாக, மேலும் மேலும் எளிமையாக ...’*

*‘போதும், நிறுத்து. எனக்கு ஒரு கணக்குபோட்டுக்கொடு.’*

*‘நிச்சயமாக! உங்களுக்கு நிகழ்தகவு முன்னறிவிப்பு வேண்டுமா? என்னிடம் ...’*

*‘ஆம். நிகழ்தகவின்மை தரவு.’*

*‘சரி. இதோ ஒரு முக்கியக்கருத்து. பெரும்பாலான மக்களின் வாழ்க்கை தொலைபேசியெண்களால் ஆளப்படுகின்றன என்பது உங்களுக்குத் தெரியுமா?’*

*ஒரு வலிப்பு முகபாவம் பீபிள்பிராசனின் ஒரு தலையில் தோன்றி மற்றத்தலைக்கும் ஊர்ந்தது.*

*‘உனக்கு மூளை கலங்கிவிட்டதா?’*

*‘இல்லை. ஆனால் உங்கள் மூளை கலங்கும், நான் சொல்வதைக் ...’*

*திலக்கோமை ஒரு பெருமூச்சு விட்டாள். நிகழ்தகவின்மைபறப்புப்பாதைவருடியின் பொத்தான்களை பிராண்டினாள்.*

*‘தொலைபேசியெண்?’ என்றாள். ‘அந்தக்கழுதை தொலைபேசியெண் என்றா சொன்னது?’*

*திரையின் எண்கள் மினுங்கின.*

*அடக்கத்துடன் இடைநின்றிருந்த கணினி இப்போது தொடர்ந்தது.*

*‘நான் என்ன சொல்லவந்தேன் என்றால் ...’*

*‘ஒன்றும் சொல்லவேண்டாம்’ என்றாள் திலக்கோமை.*

*‘ஏய், என்ன இதெல்லாம்?’ என்றான் பீபிள்பிராசன்.*

*‘தெரியவில்லை. ஆனால் அந்த வேற்றுலகர்கள் நம் துயர எந்திரனுடன் கலப்பாலத்துக்கு வந்துகொண்டிருக்கின்றனர். ஏதாவது ஒரு கடுங்காணிப்புப்படக்கருவியில் அதைப்பார்க்கலாமா?’*

# *அத்தியாயம் 13*

*மார்வின் தாழ்வாரத்தின் வழியே முனகிக்கொண்டே களைப்புடன் நடந்தான்.*

*'என் இடதுபக்கமுள்ள இருமின்வாய்களிலெல்லாம் ஒரே வலி...'*

*'ஐயோ, அப்படியா?' என்றான் அருகில் நடந்துகொண்டிருந்த ஆரதன்.*

*'ஆம். நான் அவற்றை மாற்றும்படி எத்தனையோமுறை சொல்லியும் யாரும் கவனிக்கவில்லை.'*

*'என்னால் நம்ப இயலவில்லை.' என்ற டாட்டாவிடமிருந்து வியப்பான ஓங்கார ஓசைகளும் ஊதொலிகளும் எழுந்தவண்ணமிருந்தன. 'அட, பீபிள்பிராசன்' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டிருந்தான்.*

*திடீரென்று மார்வின் நின்று கையைத் தூக்கினான்.*

*'இப்போது என்ன நேர்ந்து விட்டது, தெரியுமல்லவா?' என்று கேட்டான்.*

*'இல்லையே, என்ன?' என்றான் ஆரதன் மிரட்சியுடன்.*

*'இன்னொரு கதவிடம் அகப்பட்டோம்.'*

*தாழ்வாரத்தின் பக்கவாட்டில் செல்வதற்காக ஒரு சறுக்குக்கதவு இருந்தது. மார்வின் ஐயத்துடன் அதைப்பார்த்தான்.*

*'நாம் அங்குதான் போகவேண்டுமா?' என்று டாட்டா பொறுமையில்லாமல் கேட்டான்.*

*'நாம் அங்குதான் போகவேண்டுமா?' என்று மார்வின் எதிரொலித்தான். 'ஆம். இதுதான் கலப்பாலத்தின் நுழைவாயில். நான் உங்களை கலப்பாலத்துக்குக்கொண்டுவர பணிக்கப்பட்டேன். இதுதான் என் அறிவுசார் இயன்மைக்குச்சவலாக இன்று எனக்குத்தரப்பட்ட வேலை.'*

*வெறுப்புற்றவனாய், ஒரு வேடன் தன் வேட்டை விலங்கை அணுகுவதுபோல் மெதுவாக அந்த கதவை அணுகினான். திடீரென்று அது திறந்துகொண்டது.*

*'ஓர் எளிய கதவை மிகவும் மகிழ்ச்சியடையச்செய்ததற்கு மிக்க நன்றி.' என்றது.*

*மார்வினின் மார்புக்கூடு ஆழத்தில் கியர்கள் அரைத்தன.*

*'வேடிக்கைதான். வாழ்க்கை இதைவிட மோசமாவது சாத்தியமில்லை என்று எண்ணும்போது அப்படியே ஆகிறது.'*

*தன்னை அந்த கதவினூடே வீசினான். ஆரதனும் டாட்டாவும் ஒருவரையொருவர் பார்த்து விழித்து நின்றனர். உள்ளேயிருந்து மார்வின் குரல் மீண்டும் ஒலித்தது.*

*'இதோ வேற்றுலகர்களை அழைத்து வந்தேன். இனி நான் ஒரு மூலையில் அமர்ந்து துருப்பிடிக்க வேண்டுமா அல்லது இந்த இடத்திலேயே நின்று உருக்குலைய வேண்டுமா?'*

*'அவர்களை உள்ளே வரச்சொல், மார்வின்' என்றது மற்றொரு குரல்.*

*ஆரதன் டாட்டாவை பார்த்தான். அவன் சிரிப்பதைக்கண்டு அதிர்ச்சியுற்றான்.*

*'என்ன ...?'*

*'உம்,' என்று வாயில் விரல் வைத்து அமைதிச்சைகை காட்டி, 'உள்ளே வா' என்றான்.*

*கலப்பாலத்தின் உள்ளே காலடி எடுத்து வைத்தான்.*

*சற்றுப்பயத்துடன் தொடர்ந்த ஆரதன் அங்கிருந்தவனைப்பார்த்து திடுக்கிட்டான். அந்த மனிதன் கால்களை ஒரு கட்டுப்பாட்டுப்பலகத்தில் தூக்கிப்போட்டு ஒரு நாற்காலியில் ஆடிக்கொண்டு தன் இடது கையால் வலது தலையின் பல்லை குடைந்துகொண்டிருந்தான். வலது தலை ஏதோவொரு வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருப்பதாக காணப்பட்டது. ஆனால் இடது தலை ஒரு குறிப்பற்ற அகலப்புன்னகையுடன் அவர்களைப்பார்த்தது. ஆரதனால் நம்ப இயலாதவற்றின் எண்ணிக்கை விரைவில் அதிகரித்தது. அவன் தாடை கழன்று விழுந்துவிடுவதுபோல் தொங்கியது.*

*அந்த விந்தை மனிதன் சோம்பலாக ஒரு கையை வீசி 'ஏய், டாட்டா, எப்படி இருக்கிறாய்? நீ வருகைதந்ததுபற்றி மகிழ்ச்சி' என்று சொன்னான்.*

*டாட்டாவும் இதற்குச்சளைக்கவில்லை.*

*'பீபூ, உன்னைக்கண்டதில் எனக்கும் மகிழ்ச்சி. நலமாகக்காண்கிறாய். மூன்றாம் கை உனக்கு பொருத்தமாயிருக்கிறது. நல்ல வெளிக்கலத்தைத்தான் திருடியிருக்கிறாய்.'*

*ஆரதன் கண்கள் விரிய அவர்களைப்பார்த்தான்.*

*'என்ன, இவனை உனக்கு தெரியுமா?' என்றான், நடுங்கும் ஒரு விரலை பீபிள்பிராசனை நோக்கி நீட்டி.*

*'தெரியுமாவா? இவன்தான் ...' என்று தொடங்கிய டாட்டா இடைநின்று மறுவிதமாக அறிமுகம் செய்ய முடிவுசெய்தான்.*

*'ஓ, பீபூ, இவன் என் நண்பன், ஆரதன். இவன் கோள் அழிந்தபோது இவனை நான் காப்பாற்றினேன்.'*

*'ஓ, அப்படியா? வணக்கம் ஆரதன், நீங்கள் வந்ததில் மகிழ்ச்சி.' என்றான் இடது தலையால். அவன் வலது தலையும் மெதுவாகத்திரும்பி வணக்கம் சொல்லிவிட்டு மீண்டும் தன் பல்லைக்குடைவதற்காக திரும்பிக்கொண்டது.*

*டாட்டா தொடர்ந்தான். 'ஆரதா, இவன் என் அரைக்கசின், பீபிள்...'*

*'நாங்கள் சந்தித்திருக்கிறோம்' என்றான் ஆரதன் காட்டமாக.*

*நீங்கள் நெடுஞ்சாலையில் விரைவுப்பாட்டையில் ஓடிக்கொண்டிருக்கும்போது மெதுவாகச்செல்லும் நான்கைந்து வண்டிகளை முந்தியபின் தன்னைத்தானே பாராட்டிக்கொண்டு கவனக்குறைவாக நான்காம்கியரிலிருந்து மூன்றாம்கியருக்கு மாற்றுவதற்குப்பதிலாக தவறுதலாக முதல்கியருக்கு மாற்றிவிட்டால் வண்டியின் பொறி அதன் தலைக்குள்ளிருந்து தெறித்து விழுவது போல் குலுங்குவது மட்டுமல்லாமல் ஆரதன் அப்போது சொன்னதைக்கேட்டு டாட்டா உலுக்கப்பட்டதுபோல் நீங்களும் உலுக்கப்படுவீர்கள்.*

*'எ... என்ன?'*

*'நாங்கள் சந்தித்திருக்கிறோம் என்றேன்.'*

*பீபிள்பிராசன் வியப்பால் திடுக்கிட்டதில் தன் வாயை கடித்துவிட்டான்.*

*'எ... நா... நாம் சந்தித்திருக்கிறோமா? எங்... எப்...'*

*டாட்டா கோபம் கண்களில் தெரிக்க ஆரதன் பக்கம் திரும்பினான். இப்போது அவன் தன் சொந்தச்சூழ்நிலைக்கு வந்துவிட்டதால், இந்த எளிநிலையனை தன்னுடன் கட்டியிழுத்து வந்ததற்காக திடீரென்று வருந்தத்தொடங்கினான். ஒரு கோவில்பட்டி ஈ இலண்டன் வாழ்க்கையைப்பற்றி எவ்வளவு அறிந்திருக்குமோ அவ்வளவுதான் விண்மீன்திரளின் விவகாரங்களைப்பற்றி ஆரதன் அறிந்திருக்கக்கூடும்.*

*'என்ன சொல்கிறாய்? சந்தித்திருக்கிறாயா? இவர் ஆதிரை ஐந்தைச்சார்ந்த பீபிள்பிராசன். ஆத்தூரைச்சார்ந்த ஐயாச்சாமி இல்லை.*

*‘அது எப்படியும் இருக்கட்டும். நாம் சந்தித்திருக்கிறோம், இல்லையா பீபிள்பிராசன், அதாவது குமார்?’*

*‘என்ன!’ என்று இரைந்தான் டாட்டா.*

*‘எனக்கு நீங்கள்தான் நினைவுபடுத்தவேண்டும். இனங்களை நான் எளிதில் மறந்து விடுகிறேன்.’ என்றான் பீபிள்பிராசன்.*

*‘நாம் சந்தித்தது ஒரு கேளிக்கையில்’ என்று ஆரதன் விடாப்பிடியாகத்தொடர்ந்தான்.*

*‘ஓ, அப்படி இருக்காது’ என்றான் பீபிள்பிராசன்.*

*‘நிறுத்து, ஆரதா!’ என்றான் டாட்டா.*

*ஆரதன் நிறுத்தவில்லை. ‘ஆறு மாதங்களுக்கு முன். புவியில்... சென்னையில்...’*

*பீபிள்பிராசன் ஓர் அழுத்தமான புன்னகையுடன் தலையை ஆட்டினான்.*

*‘சென்னை. புரசவாக்கம்,’ என்று அழுத்திச்சொன்னான் ஆரதன்.*

*‘ஓ,’ என்ற பீபிள்பிராசன் ஒரு குற்ற அதிர்வுடன் ‘அந்தக்கேளிக்கை!’ என்றான்.*

*டாட்டாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் ஆரதனையும் பீபிள்பிராசனையும் முன்னும் பின்னும் மாறிமாறிப்பார்த்தான். ‘என்ன?’ என்றான் பீபிள்பிராசனை நோக்கி. ‘நீயும் அந்த கேடுகெட்ட கோளில்தான் இருந்தாயா?*

*‘அதெல்லாம் ஒன்றுமில்லை,’ என்றான் அகற்றும் வகையில் கையை வீசி. ‘ஒருவேளை வேறெங்காவது போகும் வழியில் கொஞ்சம் நின்றிருப்பேன்.’*

*‘ஆனால் நான் அங்கே பதினைந்து ஆண்டுகளாக சிக்கிக்கொண்டிருந்தேன்!’*

*‘எனக்குத்தெரியாதே!’*

*‘நீ அங்கே எதற்கு வந்தாய்?’*

*‘சும்மா பார்ப்பதற்குத்தான்.’*

*‘ஒரு கேளிக்கையில் அழையாமல் நுழைந்தான்,’ என்றான் ஆரதன் கோபத்தில் நடுங்கிக்கொண்டே, ‘ஒரு மாறுவேடக்கேளிக்கை.’*

*‘அப்படித்தானே இருக்கவேண்டும்?’ என்றான் டாட்டா.*

*‘அந்த கேளிக்கையில் ஒரு பெண் இருந்தாள்... அட, இப்போது அதெல்லாம் சொல்லி பயனில்லை. அதுதான் மொத்தமாகப்புகையாகிவிட்டதே.’ என்றான் ஆரதன்.*

*‘சரி, அந்த மொட்டைக்கோளைப்பற்றி சிணுங்குவதை விடு. யாரந்தப் பெண்?’ என்றான் டாட்டா.*

*‘யாரோ ஒருத்தி. சரி, எனக்கு அவளுடன் அதிக வாய்ப்பு இல்லைதான். மாலை முழுவதும் அவளுடன் பேச முயன்று கொண்டிருந்தேன். ஆனால் என்ன அருமையான பெண்! அழகு, நளினம், கூர்ந்த அறிவாற்றல். கடைசியில் ஒருவழியாக அவளை அணுகியபோது, இதோ இருக்கும் உன் நண்பன் குறுக்கே வந்து, ஏ பதுமையே, இவன் உன் நேரத்தை வீணடிக்கிறானா? என்னிடம் பேசேன். நான் வேறொரு கோளிலிருந்து வந்தவன் என்றான். அதன்பின் அவளை நான் பார்க்கவேயில்லை.’*

*‘பீபூ?’ என்று வியப்புடன் பார்த்தான் டாட்டா.*

*‘ஆம்,’ என்றான் ஆரதன், தான் முட்டாள் இல்லை என்று காட்டிக்கொள்ளும் விதத்தில் விழித்துக்கொண்டு, ‘அப்போது அவனுக்கு இரண்டு கைகளும் ஒரு தலையுந்தான் இருந்தன. தன் பெயர் குமார் என்றான், ஆனால்...’*

*‘ஆனால், அவன் வேறொரு கோளிலிருந்து வந்தவன் என்பதை நீ ஒப்புக்கொள்ளத்தானே வேண்டும்?’ என்றாள், கலப்பாலத்தின் மற்றொரு பாகத்திலிருந்து வெளிப்பட்ட திலக்கோமை. அவள் ஆரதனைப்பார்த்து வீசிய ஓர் இனிய புன்னகை ஒரு வண்டி செங்கல்லைப்போல் அவன்மீது அமர்ந்தது. பிறகு அவள் வெளிக்கலத்தின் கட்டுப்பாடுகளில் மீண்டும் தன் கவனத்தை திருப்பிக்கொண்டாள்.*

*சில விநாடிகளுக்கு அங்கு அமைதி நிலவியது. பிறகு ஆரதனின் கலங்கிய மூளையிலிருந்து சில சொற்கள் ஊர்ந்து வந்தன.*

*‘திலகமைதிலி?’ என்றான். ‘நீ எப்படி இங்கே?’*

*‘உன்னைப்போல்தான், ஒரு சவாரி வாங்கிக்கொண்டு. கணிதத்தில் ஒரு பட்டமும் வானியற்பியலில் இன்னொன்றும் வாங்கியபின் அங்கே செய்வதற்கு வேறென்ன இருக்கிறது? ஒன்று இது அல்லது திங்கட்கிழமை மீண்டும் அதே அலுப்பூட்டும் வங்கி.’*

*‘முடிவிலியில் ஒன்று குறைவானது,’ என்று கணினி சளசளத்தது, ‘நிகழ்தகவின்மை கணக்கு இத்துடன் முற்றுப்பெறுகிறது.’*

*பீபிள்பிராசன் தன்னைச்சுற்றிலும் பார்த்தான். டாட்டாவையும் ஆரதனையும் திலக்கோமையையும் பார்த்தான்.*

*‘திலக்கோமை, நாம் நிகழ்தகவின்மையுந்தியை பயன்படுத்தும் ஒவ்வொரு முறையும் இதுபோன்ற ஏதாவது நிகழப்போகிறதா?’ என்றான்.*

*‘அதற்கு அதிக நிகழ்தகவுகள் இருக்கத்தான் செய்கின்றன,’ என்றாள்.*

# *அத்தியாயம் 14*

*வெளியின் இரவில் தங்க இதயம் அமைதியாக பறந்துகொண்டிருந்தது, இப்போது வழக்கமான ஒளியன் உந்தியால். அதன் பயணிகள் நால்வரும் தங்கள் விருப்பத்தினாலோ, ஓர் எளிய தற்செயலாலோ ஒன்றுசேராமல், ஏதோவொரு இனம்புரியாத இயற்பியல் கொள்கையால் ஒன்றுசேர்க்கப்பட்டதால் சங்கடமான நிலையிலிருந்தனர். அணுக்களிடையேயும் மூலக்கூறுகளிடையேயும் உள்ள உறவுகளை ஆளும் அதே விதிகள் மனிதர்களிடையே உள்ள உறவுகளையும் ஆள்வதுபோல் தோன்றியது.*

*வெளிக்கலத்தின் செயற்கையிரவு வந்ததற்கு நன்றியுடன் அவர்கள் தங்கள் தனித்தனியான கூண்டறைகளில் சென்று ஓய்வெடுத்து தங்கள் எண்ணங்களை காரணப்படுத்த முயன்றனர்.*

*திலக்கோமையால் உறங்க இயலவில்லை. அவள் நீளிருக்கையில் அமர்ந்து புவியுடன் தனக்கிருந்த ஒரே கடைசியிணைப்பாயிருக்கும் கூண்டை பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தக்கூண்டில் பீபிள்பிராசனிடம் மன்றாடி எடுத்துவந்த இரண்டு வெள்ளைச்சுண்டெலிகள் இருந்தன. அவள் தன் கோளை மீண்டும் காணப்போவதாக எதிர்பார்க்கவில்லை. ஆனால் அதன் அழிவால் தனக்கேற்பட்ட எதிர்மவுணர்வுகளால் மன அலைவுற்றாள். அது தொலைவானதாகவும் உண்மையற்றதாகவும் தோன்றியது. அதைப்பற்றி என்ன நினைப்பதென்றே அவளுக்கு தெரியவில்லை. சுண்டெலிகள் கூண்டினுள் தங்கள் சிறிய நெகிழ்மநடைச்சக்கரத்தில் ஓடித்திரிவதை பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு அவை அவள் கவனத்தை முழுவதுமாக இருத்திக்கொண்டன. திடீரென்று தன்னை உலுக்கி எழுப்பினாள். கலப்பாலத்துக்குச்சென்று வெளிக்கலத்தின் வெளியிடைப்பயணத்தை விவரிக்கும் வரிவரைவுகளையும் எண்களையும் மினுங்கும் சிறுவிளக்குகளையும் கண்காணித்தாள். எந்த எண்ணங்களை தவிர்க்கவிரும்புகிறாள் என்பதே அவளுக்கு தெரியவில்லை.*

*பீபிள்பிராசனால் உறங்க இயலவில்லை. அவனும் தான் வரவிடாமல் தவிர்க்கும் எண்ணங்கள் எவையென்று தெரியாமல் திண்டாடினான். அவனுக்கு நினைவு தெரிந்த காலத்திலிருந்தே ஏதோவொன்று முழுமையாயில்லாததுபோன்ற ஓர் உணர்வால் அவதிப்பட்டிருக்கிறான். பெரும்பாலான நேரங்களில் இந்த எண்ணத்தை தள்ளிவைத்துவிட்டு அதைப்பற்றி கவலைப்படாமல் இருந்தான். ஆனால் டாட்டாவும் ஆரதனும் விளக்கவியலாத வகையில் திடீரென்று வருகைதந்ததால் அந்த எண்ணங்கள் மீண்டும் எழுப்பப்பட்டன. எப்படியோ அவன் காணவியலாத ஏதோவொரு பாங்குடன் இதுவும் இணங்குவது போலிருந்தது.*

*டாட்டாவால் உறங்க இயலவில்லை. மீண்டும் தன் பயணம் தொடர்ந்ததால் மிகுந்த உற்சாகமாய் இருந்தான். பதினைந்து ஆண்டுகளாக அவன் இருந்த ஒரு சிறைவாசம் போன்றது அவன் நம்பிக்கையை இழக்கப்போகும் இறுதி நேரத்தில் முடிந்தது. பீபிள்பிராசனுடன் உரசுவது கொஞ்சம் மகிழ்ச்சியாகவே இருந்தது. ஆயினும், அவனுடைய அரைக்கசினைப்பற்றிய ஏதோவொன்று விளங்காத புதிராகவேயிருந்தது. அவன் விண்மீன்திரளின் அதிபராகிவிட்டது உண்மையில் வியக்கக்கூடியதே. அதைப்போலவே அந்த பதவியை விட்டோடிவந்தவிதமும் வியக்கக்கூடியது. இதன் பின்னணியில் ஏதும் காரணம் இருக்கிறதா? பீபிள்பிராசனிடம் கேட்டுப்பயனில்லை. அவன் தன் செயல்களுக்கு எப்போதுமே காரணங்காட்டியதாக வரலாறில்லை. புரியாத ஒரு கலை வடிவமாகவே அவன் மாறிவிட்டான். வாழ்க்கையின் எல்லாவற்றையும் மிகுந்த அறிவும் மிகுந்த அறியாமையும் அடங்கிய ஒரு கலவையால் தாக்கினான். இவற்றில் எது எதுவென்று காண்பதுதான் கடினம்.*

*ஆரதன் உறங்கினான். அவன் மிகவும் களைப்பாயிருந்தான்.*

*பீபிள்பிராசனின் கதவில் ஒரு தட்டல் கேட்டது. அது பிளந்து திறந்தது.*

*‘பீபூ...?’*

*‘ம்... வா’*

*திலக்கோமை ஓர் ஒளி நீள்வட்டத்தால் சூழப்பட்டு நின்றிருந்தாள்.*

*‘நீ தேடி வந்ததை கண்டுபிடித்துவிட்டோம் என்று நினைக்கிறேன்.’*

*‘அப்படியா?’*

*டாட்டா உறங்கும் முயற்சியை கைவிட்டான். அவன் கூண்டறையின் ஒரு மூலையில் ஒரு கணினித்திரையும் விசைப்பலகையும் இருந்தன. அவன் அதனருகில் சற்றுநேரம் அமர்ந்து வோகன்களைப்பற்றிய ஒரு புதிய பதிகையை வழிகாட்டிக்காக எழுத முயன்றான். ஆனால் தெளிவான ஏதும் அவன் மனத்தில் தோன்றாததால் அதையும் கைவிட்டான். ஒரு மேலங்கியை போர்த்துக்கொண்டு கலப்பாலத்தை நோக்கி நடந்தான்.*

*அவன் நுழைந்ததும் வேறு இரண்டு உருவங்கள் கருவிகள் மீது கிளர்ச்சியுடன் கவிந்திருப்பதைக்கண்டு வியப்புற்றான்.*

*‘பார். வெளிக்கலம் சுற்றுப்பாதையில் நுழையப் போகிறது,’ என்று திலோக்கோமை சொல்லிக்கொண்டிருந்தாள். ‘அங்கு ஒரு கோள் இருக்கிறது. இது நீ முன்னறிவித்த மீச்சரியான ஒருங்களவுகள்தாம்.’*

*பீபிள்பிராசன் ஓசை கேட்டு நிமிர்ந்தான்.*

*‘டாட்டா! ஏய், இங்கே வந்து இதைப் பார்,’ என்றான்.*

*டாட்டா சென்று பார்த்தான். திரையில் எண்கள் வரிசையாக மினுங்கின.*

*‘இந்த விண்மீன்திரள் ஒருங்களவுகள் எந்த இடம் என்று புரிகிறதா?’*

*‘இல்லை.’*

*‘உனக்கு ஒரு துப்புத்தருகிறேன். கணினி!’*

*‘வணக்கம், நண்பர்களே! உங்களுடன் செயற்படுவதில் நான் மிகவும் மகிழ்கிறேன்.’*

*‘வாயை மூடு. திரையைக் காட்டு,’ என்றான் பீபிள்பிராசன்.*

*கலப்பாலத்தில் வெளிச்சம் மங்கியது. ஒளிப்புள்ளிகள் திரைகளில் நகர்ந்து திரைகளை கவனித்துக்கொண்டிருந்த நான்கு இணை கண்களில் எதிரொளித்தன.*

*அவற்றில் ஒன்றுமே இல்லை.*

*‘இது எந்த இடம் புரிகிறதா?’ என்றான் பீபிள்பிராசன்.*

*டாட்டா உதட்டைப் பிதுக்கி, ‘இல்லையே!’ என்றான்.*

*‘நீ என்ன காண்கிறாய்?’*

*‘ஒன்றுமில்லை.’*

*‘புரிகிறதா?’*

*‘எதைப்புரிந்துகொள்ளவேண்டும் என்கிறாய்?’*

*‘நாம் குதிரைத்தலை நெபுலத்தில் இருக்கிறோம். ஒரு மாபெரும் முழு இருட்டு மேகம்.’*

*‘அதை நான் வெறுந்திரையைப்பார்த்து புரிந்துகொள்ளவேண்டுமாக்கும்!’*

*‘விண்மீன்திரளிலே வெற்றுத்திரையைக்காணும் ஒரே இடம் இருண்ட நெபுலத்தினுள்தான்.’*

*‘மிக்க நன்று.’*

*பீபிள்பிராசன் நகைத்தான். அவன் எதைப்பற்றியோ குழந்தைத்தனமான ஒரு கிளர்ச்சி அடைந்திருந்தது தெளிவானது.*

*‘ஆ, இது மிக அருமை. அற்புதம்!’*

*‘ஒரு தூசு மேகத்தினுள் சிக்கிக்கொண்டு இருப்பதில் என்ன அற்புதம்?’ என்றான் டாட்டா.*

*‘இங்கு எதைக்காணலாம் என்று எதிர்பார்ப்பாய்?’ என்று சீண்டினான் பீபிள்பிராசன்.*

*‘ஒன்றுமில்லை.’*

*‘விண்மீன் இல்லை? கோள்கள் இல்லை?’*

*‘இல்லை.’*

*‘கணினி!’ என்று இரைந்து, ‘நோக்குக்கோணத்தை சுமார் நூற்றெண்பது பாகைகள் திருப்பு,’ என்ற பீபிள்பிராசன் பிறகு ‘பேசாதே!’ என்றும் கட்டளையிட்டான்.*

*ஒரு கணம் ஒன்றும் நிகழாததுபோல் தோன்றியது. பிறகு திரையின் விளிம்பில் ஓர் ஒளிர்வு தோன்றியது. ஒரு கோப்பையின் அளவான ஒரு சிவப்புவிண்மீன் அதன் குறுக்கே தவழ்ந்தது. விரைவில் மற்றொன்றும் அதைத்தொடர்ந்து வந்தது - ஓர் இரும அமைப்பு. பிறகு ஒரு பெரிய பிறை படத்தின் ஒரு மூலையில் வந்தது – ஒரு சிவப்பு வட்டொளி கோளின் இரவுப்பகுதியை ஆழ்ந்த கருப்புப்பின்னணியிலிருந்து வேறுபடுத்தியது.*

*‘நான் கண்டுபிடித்துவிட்டேன்’ என்று திரையில் தட்டிக்கொண்டு பீபிள்பிராசன் கத்தினான். ‘நான் கண்டுபிடித்து விட்டேன்!’*

*டாட்டா பெருவியப்புடன் அதையே பார்த்துக்கொண்டிருந்தான்.*

*‘என்ன இது?’ என்று கேட்டான்.*

*‘இதுதான்... இருப்பவற்றிலே மிகவும் நிகழ்தகவின்மையான கோள்,’ என்றான் பீபிள்பிராசன்.*

# அத்தியாயம் 15

*(மேற்கோள்: பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு கையேடு, பக்கம் 634784, பகுதி 5 அ, பதிகை: மகரத்தியா)*

*நமக்கு தெளிவாகத்தெரியாத தொன்மைக்காலத்தில் முன்னாள் விண்மீன்திரள் பேரரசில் வாழ்க்கை கட்டற்றதும் செறிவானதும் பெரும்பாலும் வரியில்லாததுமாய் இருந்தது. வலுவான வெளிக்கலங்கள் விண்மீன்திரளின் தொலைவான இடங்களிலுள்ள அயல் கோளமைப்புக்களிடையே சாகசங்களையும் அதற்கான பலன்களையும் தேடி பயணித்தன. அப்போது மக்கள் வீரர்களாயிருந்தனர். வெகுமதியும் அதிகமாயிருந்தது. ஆண்கள் ஆண்மை உடையவர்களாய் இருந்தனர். பெண்கள் பெண்மை உடையவர்களாய் இருந்தனர். ஆல்பா சென்றாரசின் சிறு முடியுள்ள விலங்குகள் ஆல்பா சென்றாரசின் சிறு முடியுள்ள விலங்குமை உடையனயாய் இருந்தன. தெரியாதவற்றையறிய அனைவரும் அச்சமின்றி நாடினர். பெரும் சாதனைகளை செய்தனர். அதற்குமுன் யாரும் பிளந்திராத முடிவில்லைகளை துணிவுடன் பிளந்தனர். இப்படித்தான் அந்தப்பேரரசு வடிவமைக்கப்பட்டிருந்தது.*

*அதனால் பலர் மாபெரும் பணக்காரர்கள் ஆனார்கள். ஆனால் அது முற்றிலும் இயல்பானதும் வெட்கப்படத்தகாததும் ஆகும். ஏனென்றால், எவரும் ஏழையாக இல்லை. அதாவது சொல்லிக்கொள்ளுமளவுக்கு முக்கியமானோர் எவரும் ஏழையாக இல்லை. வியாபாரத்தில் மிகவும் வெற்றியடைந்த பணக்காரர்களுக்கு வாழ்க்கை ஆர்வமில்லாததும் அலுப்புத்தட்டுவதுமாக தோன்றத்தொடங்கியது. இது அவர்கள் வாழ்வதற்குத்தேர்ந்த உலகின் தவறு என்று கற்பனை செய்யத்தொடங்கினர். எந்த உலகும் மிகச்சரியானதாக இல்லை. ஒன்றில் மாலை நேரங்களில் வெப்பநிலை மிகச் சரியானதாக இல்லை. மற்றொன்றில் பகலின் நீளம் அரைமணி நேரம் அதிகமாக இருந்தது. வேறொன்றில் கடலின் நிறம் செந்நீல நிறத்தின் தவறான சாயலாக மிகச்சரியாக இருந்தது.*

*இக்காரணங்கள் ஒரு தனித்துவமான தொழிலகம் வளரச்சாதகமான சூழ்நிலையை உருவாக்கின: தனிப்பயனாக்கச்சொகுசுக்கோள் கட்டுமானம். இந்தத்தொழிலகத்தின் உரைவிடம் மகரத்தியா கோள். இங்கு உயர்வெளிபொறியியலாளர் விண்வெளியின் வெண்துளைகள் வழியாக பொருளை உறிஞ்சி அதை கனவுக் கோள்களாக உருமாற்றினர். தங்கக்கோள்கள், பிளாட்டினக்கோள்கள், மென்மையான தேய்ப்பியாலானதும் மிகப்பல நிலநடுக்கங்களுடன் கூடியதுமான கோள்கள் போன்றவை விண்மீன்திரளின் பணக்காரர்களின் உயர்தர வேண்டல்களுக்கு ஈடுகொடுக்குமாறு அன்புடன் செய்யப்பட்டன.*

*ஆனால் இந்தத்தொழிலகத்தின் மாபெரும் வெற்றியால் மகரத்தியா கோளே எல்லாவற்றிலும் பணக்காரக்கோளாக மாறியது. விண்மீன்திரளின் மற்றக்கோள்கள் ஏழ்மைக்குத்தள்ளப்பட்டன. அதனால் அந்த அமைப்பு இறுதியில் உடைந்தது. பேரரசு வீழ்ந்தது. மும்மடியாயிரம் உலகங்களில் ஒரு சோக அமைதி கவிந்தது. அந்த அமைதியைக்குலைத்தது, திட்டமிட்ட அரசியல் பொருளாதாரத்தை ஏற்படுத்தும் அவசியத்தை எடுத்துரைக்கும் அறிவுக்களஞ்சிய நூல்களை எழுத கற்றறிஞர்கள் இரவு முழுவதும் உழைத்ததால் ஏற்பட்ட பேனாவுரசல்கள் மட்டுமே.*

*மகரத்தியாவின் நினைவு மக்கள் மனத்திலிருந்து மறைந்து அது ஒரு கற்பனைப்பழங்கதையாக ஆனது.*

*அறிவு மிகுந்த தற்காலத்தில் அதை யாரும் நம்பவில்லை.*

## *அத்தியாயம் 16*

*கலப்பாலத்தில் நடந்த விவாத்ததின் ஒலியைக்கேட்டு ஆரதன் விழித்தெழுந்தான். டாட்டா கையைவீசிப்பேசிக்கொண்டிருந்தான்.*

*'நீ சரியான பைத்தியம், பீபூ' என்றான், 'மகரத்தியா ஒரு வதந்தி, கற்பனைப்பழங்கதை, தங்கள் பிள்ளைகள் பொருளியலாளராக வரவேண்டும் என்று விரும்பும் பெற்றோர் அந்தப்பிள்ளைகளுக்கு இரவில் இந்தப்பழங்கதையைத்தான் சொல்வார்கள். அது...'*

*'அதைச் சுற்றிய ஒரு சுற்றுப்பாதையில்தான் நாம் இப்போது இருக்கிறோம்,' என்று அழுத்தமாகச்சொன்னான் பீபிள்பிராசன்.*

*'இதோ பார், நீ எந்தச்சுற்றுப்பாதையில் இருக்கிறாய் என்று எனக்குக்கவலையில்லை. ஆனால் இந்த வெளிக்கலம் ...'*

*'கணினி!' என்று பீபிள்பிராசன் இரைந்தான்.*

*'ஐயோ ... !'*

*'வணக்கங்கள்! உங்கள் கணினி நண்பன் செந்தில் பேசுகிறேன். நான் மிக நலமாக உள்ளேன். எந்த நிரலை என்னில் நீங்கள் ஓட்டினாலும் நான் மிகுந்த ஆனந்தமடைவேன்.'*

*ஆரதன் திலக்கோமையை கேள்விக்குறியுடன் பார்த்தான். அவள் அவனை உள்ளே வரும்படியும் ஆனால் அமைதியாக இருக்கும்படியும் கையசைத்தாள்.*

*'கணினி,' என்றான் பீபிள்பிராசன், 'நம் தற்போதைய வீசுபாதையை மீண்டும் சொல்.'*

*'ஓர் அழகான கோள். பழங்கதையில் வரும் மகரத்தியா கோளைச்சுற்றி நாம் தற்போது ஐநூறு கிலோமீட்டர் உயர சுற்றுப்பாதையில் இருக்கிறோம்.'*

*'இது எதையும் நிரூபிக்கவில்லை. இந்தக்கணினி என் எடையைச்சொன்னாலும் அதை நான் நம்பமாட்டேன்,' என்றான் டாட்டா.*

*'இதோ சொல்கிறேன்,' என்று உல்லாசத்துடன் சொன்ன கணினி, மேலும் நகர்நாடாவை வெளியிட்டது. 'தற்பண்புத்தொல்லைகளின் தீர்வுகளையும் பத்து பதின்மவிலக்கங்கள் துல்லியத்தில் கணக்கிடுவேன், உங்களுக்கு உதவுமானால்.'*

*திலக்கோமை குறுக்கிட்டாள்.*

*'பீபூ, இது எந்தக்கோளானாலும் அதன் பகல் பக்கத்துக்கு எந்தக்கணமும் நாம் வரப்போகிறோம்.'*

*'என்ன நீயும் நம்பவில்லையா? இந்தக்கோள் நான் முன்னறிவித்த இடத்திலே இருக்கிறது, இல்லையா?'*

*'ஆம். இங்கு ஒரு கோள் இருப்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். நான் யாரிடமும் வாதிடவில்லை. எனக்கு மகரத்தியாவுக்கும் வேறொரு மிகப்பேரளவான மண்ணாங்கட்டிக்கும் வேறுபாடு தெரியாது. விடியற்காலம் வரப்போகிறது, நீ விரும்பினால்.'*

*'சரி, சரி,' என்று முணுமுணுத்தான் பீபிள்பிராசன், 'நம் கண்களுக்காவது ஒரு விருந்தை அளிப்போம். கணினி!'*

*'வணக்கம். தங்கள் விருப்ப...'*

*'வாயை மூடிக்கொண்டு கோளின் தோற்றத்தை மீண்டும் காட்டு.'*

*அவர்களுக்கடியில் உருண்டு கொண்டிருக்கும் கோளாகிய பண்புக்கூறற்றதும் இருண்டதுமான ஒரு பெருங்கல் மீண்டும் திரையை நிரப்பியது.*

*அவர்கள் அமைதியாக அதை ஒருகணம் பார்த்தனர். ஆனால் பீபிள்பிராசன் மிகவும் கிளர்ச்சியடைந்த நடுக்கத்துடன் இருந்தான்.*

*'நாம் இப்போது இரவுப்பகுதியை கடக்கிறோம்...' என்று மெல்லிய குரலில் சொன்னான். கோள் உருண்டு கொண்டிருந்தது.*

*'கோளின் மேற்பரப்பு நமக்கடியில் ஐநூறு கிலோமீட்டரில் உள்ளது...' என்று தொடர்ந்தான். ஒரு மாபெரும் நிகழ்ச்சியாக அவன் கருதியது நிகழும் அந்தக்கணத்துக்கு ஒரு முக்கியத்துவமூட்ட முயன்றுகொண்டிருந்தான். மகரத்தியா! டாட்டாவின் மறுவினையால் அவன் சற்று எரிச்சல் அடைந்திருந்தான். ஆயினும், மகரத்தியா!*

*'இன்னும் சிலநொடிகளில் நாம் பார்க்கப்போகிறோம்... அதோ தெரிகிறது!'*

*அந்தக்கணம் தானாகவே முக்கியமானது. விண்வெளியில் ஒரு கதிரவன் உதிக்கும் அற்புதமான காட்சியைக்கண்டு அதிக அனுபவமுள்ள விண்மீன் நாடோடியும் வியக்காமல் இருக்கவியலாது. ஆனால் ஓர் இருமக்கதிரவோதயம் விண்மீன்திரளின் புதுமைகளில் ஒன்று.*

*கருத்த இருட்டிலிருந்து திடீரென்று ஒரு குருடாக்கும் ஒளி குத்தியது. அது கொஞ்சங்கொஞ்சமாக வளர்ந்து பக்கவாட்டில் பரவி ஒரு பிறையாக விரிந்தது. சில நொடிகளில் இரண்டு கதிரவன்கள் தோன்றின - அடிவானத்தின் கருப்பு விளிம்புகளை வெண்மைத்தீயால் தீய்க்கும் ஒளி உலைகள். அவர்களுக்கு அடியில் உள்ள வளிமண்டலத்தில் நிறத்தண்டுகள் சீறியெழுந்தன.*

*'விடியலின் நெருப்புகள்...!' என்று பீபிள்பிராசன் அடிமூச்சில் சொல்லிக்கொண்டான். 'இரண்டைக்கதிரவன்கள் சலினமும் உரகமும்...!'*

*'அல்லது வேறெதோ,' என்றான் டாட்டா அமைதியாக.*

*'சலினமும் உரகமும்!' என்று அழுத்தினான் பீபிள்பிராசன்.*

*கதிரவன்கள் வெளியின் உயரக்கோணத்தில் தகிக்கத்தொடங்கின. கலப்பாலத்தில் ஒரு மெல்லிய சோக இசை கேட்டது. மார்வின் மனிதர்கள் மகிழ்ச்சியாயிருப்பதைச்சகிக்காமல் தனக்குத்தானே ஒரு பாடலை முனகிக்கொண்டிருந்தான்.*

*அவர்கள் முன்னிலையில் தெரிந்த அருங்காட்சியால் டாட்டாவின் மனத்தில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டது. ஆனால் அது எந்தவொரு புதிய கோளைப்பார்க்கும்போதும் ஏற்படும் கிளர்ச்சிதான். அவனைப்பொறுத்தவரை இருந்தபடிப்பார்ப்பதே போதுமானது. அதன்மீது ஓர் அபத்தமான கற்பனைப்பழங்கதையை ஏற்றியே அதன் பெருமையை பீபிள்பிராசன் உணர வேண்டிய அவசியத்தை நினைத்து டாட்டா எரிச்சலடைந்தான். இந்த மகரத்தியா பிதற்றலெல்லாம் சிறுபிள்ளைத்தனமாக தோன்றியது. ஒரு தோட்டம் அழகாக இருக்கிறதென்று காண்பதற்கு அதன் பின்னணியில் தேவதைகள் மறைந்திருக்கிறார்கள் என்று கற்பனைசெய்வது அவசியமா?*

*இந்த மகரத்தியா பேச்செல்லாம் ஆரதனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவன் திலக்கோமையை அணுகி என்னவென்று கேட்டான்.*

*'எனக்குத் தெரிந்ததெல்லாம் பீபிள்பிராசன் சொன்னதுதான்,' என்று கிசுகிசுத்தாள். 'மகரத்தியா என்பது நெடுங்காலத்துக்கு முன் தொடங்கிய ஒரு பழங்கதையாம். அது இருந்ததாக இப்போது யாரும் வெகுவாக நம்பவில்லை. புவியில் பூம்புகார்பற்றிய கதைகள் இருப்பதுபோன்றது இது. வேறுபாடு என்னவென்றால், பழங்கதையின்படி மகரத்தியர்கள் கோள்களை உற்பத்திசெய்தார்களாம்.'*

*ஆரதன் கண்களை உருட்டி விழித்தான். ஏதோ முக்கியமான ஒன்றை தவறவிட்டதுபோல் உணர்ந்தான். அது என்ன என்பது திடீரென்று அவனுக்கு விளங்கியது.*

*'இந்த வெளிக்கலத்தில் காப்பி இருக்கிறதா?' என்று கேட்டான்.*

*தங்க இதயம் கோளைச்சுற்றி தன்பாதையில் விரைந்தபோது கோளின் மேலும் பல பகுதிகள் அவர்களுக்கடியில் தோன்றத்தொடங்கின. கதிரவன்கள் அப்போது கருத்தவானின் உயரத்தில் நின்றன. விடியலின் வாணவேடிக்கை முடிந்திருந்தது. பகலின் நேரடி வெளிச்சத்தில் கோளின் மேற்பரப்பு வெறும் பொட்டலாகத்தெரிந்தது. இறந்தும் உறைந்தும் காணப்பட்டது. மலைகளாகவோ, ஆறுகளாகவோ, ஒருவேளை நகரங்களாகவோ இருக்கலாம் என்று நம்பிக்கையூட்டும் பண்புக்கூறுகள் அவ்வப்போது தொலைதொடுவானத்தில் தோன்றினாலும், அருகில் வந்தபோது அந்தக்கோடுகள் மெலிந்து மறைந்து ஒன்றுமில்லாமல் மண்ணுடன் கலந்தன. கோளின் மேற்பரப்பு காலத்தால் கலங்கியிருந்தது. பல நூற்றாண்டுகளாக அதன்மீது அசைந்து உரசும் காற்றால் பண்புக்கூறுகள் படிப்படியாக அழிக்கப்பட்டிருந்தன.*

*அது மிகமிகப்பழமையானது என்பது தெளிவு.*

*சாம்பல் நிற நிலப்பரப்பு அவர்களுக்கடியில் நகர்ந்தபோது டாட்டாவின் மனத்தில் ஒரு கணம் ஐயம் ஏற்பட்டது. காலத்தின் அளவு அவனைச் சலனமாக்கியது. அதன் உண்மையை உணர்ந்தான். தன் தொண்டையைச் செருமிக்கொண்டான்.*

*'ம்... சரி, அப்படியே இருந்தாலும் ...' என்று தொடங்கினான் டாட்டா.*

*'அப்படித்தான்,' என்றான் பீபிள்பிராசன்.*

*'அப்படியில்லை. ஆனால் அப்படியே இருந்தாலும் நீ என்ன செய்யப் போகிறாய்? இதில் ஒன்றுமில்லையே!'*

*'மேற்பரப்பில் ஒன்றுமில்லை.'*

*'சரி, ஏதோ இருப்பதாகவே வைத்துக்கொள்வோம். நீ வெறும் தொழிலக அகழாய்வியல் நோக்கத்துடனே வந்திருக்கமாட்டாய். உன் நோக்கம் என்ன?'*

*பீபிள்பிராசனின் ஒரு தலை வேறெங்கோ பார்த்தது. மற்றத்தலையும் முதல்தலை என்ன பார்க்கிறது என்று திரும்பிப்பார்த்தது. ஆனால் அங்கு ஒன்றுமில்லை.*

*'அதாவது, ...' என்று பீபிள்பிராசன் நிதானமாகச்சொன்னான், 'ஒரு பகுதி வெறும் ஆர்வம்தான். மற்றொரு பகுதி ஒரு சாதனை உணர்வு. ஆனால் பெரும்பாலும் புகழும் பணமும்.'*

*டாட்டா அவனைக் கூர்ந்து பார்த்தான். பீபிள்பிராசன் அங்கு வந்திருந்த காரணம் அவனுக்கே தெரியவில்லை என்ற எண்ணம் வலுத்தது.*

*'இந்தக்கோளின் தோற்றம் எனக்குப்பிடிக்கவேயில்லை,' என்றாள் திலக்கோமை ஒருவித பயந்த நடுக்கத்துடன்.*

*'ஆ, அதைப்பற்றி கவலைப்படாதே. முந்தைய விண்மீன்திரள் பேரரசின் பாதிச்சொத்தை தன்னுள் எங்கோ பதுக்கியிருக்கும் கோள் கரடுமுரடாகத்தோன்றினால் அது அதன் உரிமை.'*

*கழுதை விட்டை! என்றெண்ணினான் டாட்டா. இது மண்ணோடு மண்ணாகி விட்ட ஒரு தொன்மை நாகரிகத்தின் இருப்பிடம் என்று வைத்துக்கொண்டாலும், இன்னும் பல நிகழ்தகவில்லாத எடுகோள்களை வைத்துக்கொண்டாலும், தற்காலத்தில் பயன்படக்கூடிய ஏராளமான திரவியங்கள் அங்கு புதைந்து கிடக்காது. அவன் தலையை உதறிக்கொண்டான்.*

*'இது வெறும் இறந்த கோள்தான் என்று நான் நினைக்கிறேன்.' என்றான்.*

*'இந்த தவிநிலையை என்னால் தாங்க இயலவில்லை,' என்றான் ஆரதன் பொறுமையின்றி.*

*மன அழுத்தமும் நரம்புத்திரிபும் விண்மீன்திரளின் எல்லாப்பகுதிகளிலும் பெரும் சமுதாயச்சிக்கல்களாக உள்ளன. ஆகவே அந்தச்சிக்கல்களை மேலும் மோசமாக ஆக்காமலிருக்கும் ஒரே நோக்கத்தால் வரப்போகும் சில உண்மைகள் இப்போதே வெளியிடப்படுகின்றன.*

*அந்தக்கோள் பழங்கதையில் வரும் மகரத்தியாதான்.*

*ஒரு தொன்மையான தானியங்கித்தற்காப்பமைப்பு ஓர் ஏவுகணைத்தாக்குதலை தொடங்கப்போகிறது. அந்தத்தாக்குதலின் விளைவுகளாக, மூன்று காப்பிக்கோப்பைகளும் ஓர் எலிக்கூண்டும் உடையப்போகின்றன; ஒருவருடைய மேற்கையில் ஒரு சிராய்ப்பு ஏற்படப்போகிறது; ஒரு கூடை சாமந்திப்பூவும், ஓர் அப்பாவி மெழுகத்திமிங்கலமும் அகால உருவாக்கமும் மரணமும் அடையப்போகின்றன.*

*கொஞ்சமாவது மர்மம் விட்டுவைப்பதற்காக யாருடைய மேற்கையில் சிராய்ப்பு ஏற்பட்டது என்பது இங்கு சொல்லப்படவில்லை. இந்த உண்மை தவிநிலைக்கு விடப்படுவது பாதுகாப்பானது; ஏனென்றால் அதில் எந்த முக்கியத்துவமும் இல்லை.*

## *அத்தியாயம் 17*

*அன்றையதினம் கொஞ்சம் ஆட்டத்துடனே தொடங்கினாலும், ஆரதனின் மனம் முந்தையநாளின் அதிர்ச்சிகள் உடைத்தெறிந்த துண்டுகளிலிருந்து தொகுவிணையத் தொடங்கியிருந்தது. அவன் ஒரு சத்துவதானி எந்திரத்தைக்கண்டு அதனிடமிருந்து கிட்டத்தட்ட ஆனால் முற்றிலும் காப்பி போலல்லாத ஒரு நீர்மம் அடங்கிய நெகிழ்மக்குவளையை பெற்றிருந்தான். அந்த எந்திரம் வேலைசெய்தவிதம் ஆர்வமானது. குடிபொருள் என்ற பொத்தான் அமுக்கப்பட்டபோது அது ஆய்பொருளின் சுவைமொட்டுகளை உடனடியாகவும் மிகவிவரமாகவும் சோதனைசெய்து, ஆய்பொருளின் வளர்சிதைமாற்றத்தை நிறமாலையியலால் அலசி, மிகச்சிறு பரிசோதனை நிமிண்டல்களை ஆய்பொருளின் மூளையிலுள்ள சுவைமையங்களுக்கு நரம்புவழிப்பாதைகளின் வழியே அனுப்பி, ஆய்பொருள் எதை விரும்பும் என்று கணித்தது. ஆனால் இதையெல்லாம் அது ஏன் செய்தது என்று யாருக்கும் விளங்கவில்லை; ஏனென்றால், பெரும்பாலும் எப்போதும் அது கிட்டத்தட்ட ஆனால் முற்றிலும் காப்பி போலல்லாத ஒரு நீர்மத்தையே வழங்கியது. சத்துவதானி எந்திரத்தை உற்பத்தி செய்த வியாதா தன்னாள்வியல் கூட்டகத்தின் புகார்த்துறை இப்போது வியாதா தௌ அமைப்பின் முதல் மூன்று கோள்களின் முக்கிய தரைப்பகுதிகளில் பரந்துள்ளது.*

*ஆரதன் அந்த நீர்மத்தைக்குடித்து புத்துணர்வுபெற்றான். அவன் மீண்டும் திரைகளின்மீது கண்களைச்செலுத்தி, மேலும் பல நூறு கிலோமீட்டர் தரிசு நிலம் நழுவிச்செல்வதை பார்த்துக்கொண்டிருந்தான். திடீரென்று அவனைக்குடைந்துகொண்டிருந்த ஒரு கேள்வியை கேட்கவேண்டுமென்று தோன்றியது.*

*'இது பாதுகாப்பானதா?' என்றான்.*

*'மகரத்தியா ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகளாக செத்துக்கிடக்கிறது' என்றான் பீபிள்பிராசன், 'அது மிகவும் பாதுகாப்பானது. பிசாசுகளும் இதற்குள் அடங்கி அமைதியான குடும்பவாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கும்.'*

*அப்போது ஒரு விளக்கவியலாத விந்தையான ஒலி திடீரென்று கலப்பாலத்தில் ஊடுருவியது. ஓர் உள்ளீடற்ற அடியற்ற குழலொலிபோன்ற ஆரவாரம் தொலைவில் கேட்டது. அதைத்தொடர்ந்து ஓர் உள்ளீடற்ற அடியற்ற குழலொலிபோன்ற ஒரு குரல் கேட்டது. அந்தக்குரல் சொன்னது 'உங்களுக்கு எங்கள் வணக்கம் ...'*

*இறந்த கோளிலிருந்து யாரோ அவர்களுடன் பேசினார்கள்.*

*'கணினி!' என்று இரைந்தான் பீபிள்பிராசன்.*

*'வணக்கம் நண்...'*

*'என்ன இந்தக்கழுதை?'*

*'ஓ, ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகளுக்கு முன்புள்ள ஏதோ ஒரு நாடா நமக்கு அகற்பரப்பப்படுகிறது.'*

*'ஒரு... என்ன? மின்பதிவா?'*

*'சூ! இன்னும் ஏதோ சொல்கிறது,' என்றான் டாட்டா.*

*அது ஒரு முதிர்ந்த, பணிவான, கிட்டத்தட்ட இனிமையான குரல். ஆயினும் அதில் நிச்சயமாகப்புரிந்துகொள்ளக்கூடிய ஒரு சிறு அச்சுறுத்தல் இழையோடியது.*

*'இது ஒரு மின்பதிவான அறிவிப்பு. நாங்கள் எல்லாரும் இப்போது வேறு வேலையாயிருக்கிறோம். உங்கள் மதிப்புக்குறிய வருகைக்கு மகரத்தியாவின் வணிக மன்றம் நன்றி செலுத்துகிறது...'*

*('தொன்மையான மகரத்தியாவிலிருந்து ஒரு குரல்!' என்று இரைந்தான் பீபிள்பிராசன். 'சரி, சரி,' என்று அவனை கையமர்த்தினான் டாட்டா.)*

*'... ஆனால் ஒரு வருத்தம்,' என்று குரல் தொடர்ந்தது, 'முழுக்கோளின் வியாபாரமும் தற்போது மூடப்பட்டுள்ளது. நன்றி. உங்கள் பெயரையும் உங்களை தொடர்புகொள்ளவேண்டிய கோளின் முகவரியையும் தரவிரும்பினால், தயவுசெய்து பீப்பொலிக்குப்பின் பேசவும்.'*

*ஒரு பீப்பொலியைத்தொடர்ந்து அமைதி நிலவியது.*

*'அவர்கள் நம்மை போகச்சொல்கிறார்கள்,' என்றாள் திலக்கோமை சற்று பயத்துடன். 'என்ன செய்யலாம்?'*

*'இது வெறும் மின்பதிவுதான்,' என்றான் பீபிள்பிராசன். 'நாம் தொடர்ந்து செல்வோம். கணினி, புரிகிறதா?'*

*'புரிகிறது,' என்ற கணினி வெளிக்கலத்துக்கு மேலும் ஒரு வேக உந்தமளித்தது.*

*அவர்கள் காத்திருந்தனர்.*

*ஓரிரண்டு நொடிகளுக்குப்பின் அதே ஆரவாரம் மீண்டும் கேட்டது. அதைத் தொடர்ந்து குரல்.*

*'வியாபாரம் தொடங்கியவுடன் எல்லா ஒயிலான சிற்றிதழ்களிலும் வண்ண இணைப்புக்களிலும் அறிவிக்கப்படும் என்பதை உங்களுக்கு வாக்கீடளிக்கிறோம். அப்போது எம் வாடிக்கையாளர் தற்காலப்புவியியலில் மிகச்சிறந்தவற்றையெல்லாம் மீண்டும் தேர்வுசெய்யவியலும்.' குரலில் இருந்த அச்சுறுத்தலில் ஒரு கூரிய விளிம்பு தோன்றியது. 'அதுவரை எம் வாடிக்கையாளருடைய தயவுகூர்ந்த ஆர்வத்துக்கு நன்றி செலுத்தி அவர்களை திரும்பிச்செல்லுமாறு வேண்டுகிறோம். உடனே!'*

*ஆரதன் தன் உடனிருந்தவர்களின் கலக்க முகங்களை பார்த்தான்.*

*'உம், அப்படியானால் நாம் திரும்பவேண்டியதுதான், இல்லையா?' என்று மொழிவுரைத்தான்.*

*'சூ!' என்றான் பீபிள்பிராசன். 'பயப்படுவதற்கு ஒன்றுமே இல்லை.'*

*'அப்படியானால் ஏன் எல்லாரும் ஒரு விரைப்புடன் இருக்கிறோம்?'*

*'எல்லாரும் ஆர்வமாயிருக்கிறோம், அவ்வளவுதான்!' என்று இரைந்தான் பீபிள்பிராசன். 'கணினி, வளிக்கோளத்தில் இறங்கி தரையிறங்க ஆயத்தமாக்கு.'*

*இந்த முறை ஆரவாரம் ஒப்புக்குத்தான் இருந்தது. குரலில் வரவேற்பின்மை தெளிவாக இருந்தது.*

*'எங்கள் கோளின் மீது தங்களுக்குள்ள ஆர்வம் குறையாமல் தொடர்வது மிகவும் நன்றிக்குரியது. ஆகவே, தற்போது உங்கள் வெளிக்கலத்தைச்சந்திக்க வரும் வழியூட்ட ஏவுகணை அதிக ஆர்வமுள்ள எங்கள் வாடிக்கையாளருக்கு நாங்கள் வழங்கும் ஒரு சிறப்புச்சேவை என்பதாக வாக்கீடளிக்கிறோம். அதில் பொருத்தப்பட்ட அணு ஆயுதங்கள் ஒரு பணிவன்புக்காகத்தான். உங்கள் அடுத்த பிறவியில் எங்கள் சேவையை நாடுவீர்கள் என்று எதிர்பார்க்கிறோம். நன்றி.'*

*குரல் சட்டென்று நின்றது.*

*'ஓ,' என்றாள் திலக்கோமை.*

*'ஈ...' என்றான் ஆரதன்.*

*'இதோ பாருங்கள்,' என்றான் பீபிள்பிராசன், 'இதை உங்கள் மண்டைகளில் வாங்கிக்கொள்ளுங்கள். இது வெறும் மின்பதிவான தூதுரை. பல இருமடியாயிரம் ஆண்டுகளுக்கு முன்புள்ளது. இது நமக்குப்பயனாகாதது, புரிகிறதா?'*

*'ஆனால், ஏவுகணைகள்?' என்றாள் திலக்கோமை அமைதியாக.*

*'ஏவுகணைகளா? எனக்கு சிரிப்பூட்டாதே.'*

டாட்டா பீபிள்பிராசனை தோளில்தட்டி பின்பக்கத்திரையைக்காட்டினான். அவர்களுக்கடியில் தொலைவில் மிகத்தெளிவாக இரண்டு வெள்ளி அம்புகள் வளிக்கோளத்தில் வெளிக்கலத்தை நோக்கி ஏறிக்கொண்டிருந்தன. உடனே உருப்பெருக்கமாக்கி அவற்றை அண்மைத்தோற்றத்தில் கண்டனர். இரண்டு பெரும் ஏவூர்திகள் வானில்முழங்கி வந்தன. அவற்றின் திடீர்த்தன்மை அதிர்ச்சியளிக்கக் கூடியதாயிருந்தது.

'அவை நமக்குப்பயனாவதில் ஒரு நல்ல முயற்சியை மேற்கொள்ளப்போகின்றன என்றுதான் நான் நினைக்கிறேன்.' என்றான் டாட்டா.

பீபிள்பிராசன் பெருவியப்பால் அவற்றைப்பார்த்து விழித்தான்.

'ஏய், இது அற்புதம்!' என்றான். 'அங்கிருந்து யாரோ நம்மை கொல்லமுயற்சிக்கின்றனர்!'

'அற்புதம்,' என்றான் ஆரதன்.

'ஆனால் இதன் பொருள் உனக்குப்புரியவில்லையா?'

'புரிகிறது. நாம் சாகப்போகிறோம்.'

'அது சரி. ஆனால் அதைத்தவிர.'

'அதை தவிர?'

'அங்கு ஏதோ இருக்கிறது என்று பொருள்!'

'அதிலிருந்து எவ்வளவு சீக்கிரம் ஓடிப்போகலாம்?'

நொடிக்குநொடி திரையில் ஏவுகணைகளின் நிழலுரு பெரிதாகிக்கொண்டே வந்தது. அவை அப்போது வளைந்து திரும்பி நேரான மனைநோக்குப்பாதைக்கு வந்துவிட்டதால் அதன் தலையிலுள்ள ஆயுதங்கள் மட்டுமே முட்டுமத்தில் தோன்றின.

'ஓர் ஆர்வத்துக்காகத்தான் கேட்கிறேன். நாம் என்ன செய்யப்போகிறோம்?' என்றாள் திலக்கோமை.

'சும்மா அமைதியாய் இருக்கப்போகிறோம்,' என்றான் பீபிள்பிராசன்.

'அவ்வளவுதானா?' என்றான் ஆரதன்.

'இல்லை. நாம் ...அ... நழுவுச்செயலை மெற்கொள்ளப்போகிறோம்!' என்றான் பீபிள்பிராசன், திடீரென்று தோன்றிய பயத்துடன். 'கணினி, என்ன நழுவுச்செயலை மேற்கொள்ளலாம்?'

'ஒன்றுமில்லை. மன்னிக்கவும்,' என்றது கணினி.

'ஏதாவது இருக்கவேண்டுமே... ம்...'

'என் வழிகாட்டி அமைப்பில் ஏதோ அடைத்துக்கொண்டது,' என்று கணினி உல்லாசமாக விளக்கியது, 'தாக்கம் நாற்பத்தைந்து நொடிகளில். என்னை நீங்கள் செந்தில் என்று பெயர்சொல்லி அழைக்கலாம்.'

பீபிள்பிராசன் சற்றும் ஐயமில்லாமல் பல திட்டவட்டமான திசைகளில் ஒரே நேரத்தில் ஓட முயன்றான். 'ஆ... ம்... ம்... நாம் கலத்தை கைமயக்கட்டுப்பாட்டுக்கு கொண்டுவரவேண்டும்.'

'உனக்கு அதை பறக்கவிடத்தெரியுமா?' என்று மகிழ்ச்சியுடன் கேட்டான் டாட்டா.

'தெரியாது, உனக்குத்தெரியுமா?'

'தெரியாது.'

'திலக்கோமை, உனக்குத்தெரியுமா?'

'தெரியாது.'

*‘நன்று,’ என்றான் பீபிள்பிராசன், நிதானத்துடன், ‘நாம் எல்லாரும் சேர்ந்து பறக்கவிடுவோம்.’*

*‘எனக்கும் தெரியாது,’ என்று சொன்னான் ஆரதன், தானும் அவர்களில் ஒருவன் என்பதை நிலைநாட்ட வேண்டிய நேரம் வந்துவிட்டதை உணர்ந்து.*

*‘அது நீ சொல்லாமலே எங்களுக்குத்தெரியுமே,’ என்றான் பீபிள்பிராசன். ‘சரி, கணினி, எனக்கு இப்போது முழுக்கைமயக்கட்டுப்பாடு வேண்டும்.’*

*‘இதோ எடுத்துக்கொள்,’ என்றது கணினி.*

*பல பெரிய பணிமேசைகள் பிளந்து திறந்தன. அவற்றிலிருந்து காண்திரைவரிசைகள் மேலெழுந்தன. விரிவடைந்த பன்மப்பினித்தீன் பொதிக்கட்டுத்துண்டுகளும் செலப்பேன்பந்துகளும் பணிக்குழுவினர்மேல் சொரிந்தன. அந்தக்கட்டுப்பாடுகளை அதுவரை யாரும் பயன்படுத்தியிருக்கவில்லை.*

*பீபிள்பிராசன் அவற்றைப்பார்த்து விழித்தான்.*

*‘சரி, டாட்டா, முழுப்பின்வாங்கு உந்தமும் பத்துப்பாகை வலதுபக்கமும்’ என்றான், ‘அல்லது...’*

*‘வாழ்த்துகள், நண்பர்களே,’ என்று கணினி கூவியது, ‘தாக்கம் முப்பது நொடிகளில்...’*

*டாட்டா கட்டுப்பாடுகளில் தாவினான். உடனடியாக அவனுக்கு விளங்கிய ஒருசிலவற்றை இழுத்தான். கலத்தின் வழிகாண்தாரைகள் ஒரேநேரத்தில் பலதிசைகளிலும் தள்ளமுயன்றதால் கலம் குலுங்கித்தத்தளித்தது. ஆகவே அவற்றில் பாதியை விடுவித்தான். கலம் ஒரு குறுவட்டத்தில் சுழன்றுதிரும்பி வந்தவழியே திரும்பிப்பாய்ந்தது – நேராக ஏவுகணைகளின் முகத்தைநோக்கி.*

*சுவர்களிலிருந்து காற்று மெதுவணைகள் ஒரே கணத்தில் ஊதிப்பெருத்தன. அனைவரும் அவற்றின்மீது தூக்கியெறியப்பட்டனர். நிலைமவிசையால் சில நொடிகளுக்கு அவர்கள் தட்டையாக மூச்சுவிடுவதற்குத்திண்டாடி அசையாமல் கிடந்தனர். பீபிள்பிராசன் பெருமுயற்சியுடன் ஓர் இறுதிமுயற்சியாக வழிகாட்டிக்கட்டுப்பாட்டமைப்பைச்சார்ந்த ஒரு நெம்புகோலை காலால் முரட்டுத்தனமாக உதைத்தான்.*

*நெம்புகோல் உடைந்தது. கலம் குறுங்கோணத்தில் முறுங்கி மேல்நோக்கி ஏவப்பட்டது. டாட்டாவின் பால்வீதியின் பயணிக்களுக்கான ஒரு வழிகாட்டி காண்திரையின் மற்றொரு பகுதியில் பட்டுத்தெறித்தது. இதனால் இரண்டு விளைவுகள் ஏற்பட்டன. முதலாவது, வழிகாட்டி அந்தாரைப்பச்சைக்கிளிச்சுரப்பிகளை அந்தாரையிலிருந்து கடத்தும் முறைகளை அந்நேரத்தில் யார் கேட்க விரும்புகிறார்களோ அவர்களுக்கு விளக்கிச்சொல்லத்தொடங்கியது. (ஒரு குச்சியில் குத்தப்பட்ட அந்தாரைப்பச்சைக்கிளிச்சுரப்பி அருவருப்பானதாயினும் மிகவும் விரும்பப்படும் மகிழ்குடிச்சுவையூண். அதன்மூலம் ஒரு சில பணக்காரமுட்டாள்கள் மற்ற பணக்காரமுட்டாள்களிடம் மதிப்புப்பெறுவதற்காக பெருமளவு பணம் செலவிடுகின்றனர்.) இரண்டாவதாக, கலம் திடீரென்று வானத்திலிருந்து ஒரு பாறைபோல் விழத்தொடங்கியது.*

*கிட்டத்தட்ட இந்த நேரத்தில்தான் பணிக்குழு உறுப்பினர் ஒருவருக்கு மேற்கையில் ஒரு மோசமான சிராய்ப்பு ஏற்பட்டது. இது இங்கு அழுத்திச்சொல்லப்படுவது ஏனென்றால், ஏற்கெனவே வெளியிட்டபடி, அவர்கள் மற்றப்படி ஏதும் காயப்படாமல் தப்பினர்; அபாயமான அந்த ஏவுகணைகள் இறுதிவரை கலத்தில் மோதவில்லை. பணிக்குழுவின் பாதுகாப்பு இதனால் வாக்கீடளிக்கப் படுகிறது.*

*‘தாக்கம் இருபது நொடிகளில், நண்பர்களே ...’ என்றது கணினி.*

*‘அப்படியானால், மடையா, பொறிகளை மீண்டும் துவக்கு!’ என்று கதறினான் பீபிள்பிராசன். ‘ஓ, நிச்சயமாக,’ என்றது கணினி. ஒரு சிறு உறுமலுடன் பொறி மீண்டும் வந்தது. கலம் தன் வீழ்பாதையிலிருந்து வளைந்து கிடைமட்டமாக ஏவுகளைகளை நோக்கி மீண்டும் சென்றது.*

*கணினி பாடத்தொடங்கியது.*

*'நீ புயலில் நடக்கும்போது ... ' என்று மூக்கால் முணுமுணுத்தது, 'நிமிர்ந்து நில் ...'*

*பீபிள்பிராசன் அது வாயை மூடும்படி கத்தினான். ஆனால் அவர்கள் தங்கள் அழிவு என்று எடுகொண்ட ஏதோவொன்றின் ஓசையில் அவன் குரல் அடங்கி மறைந்தது.*

*'இருளை...க் கண்டு... கலங்கா...தே!' என்று செந்தில் ஓலமிட்டது.*

*கலம் கிடைமட்டமானபோது அது தலைகீழாக கிடைமட்டமாகியிருந்தது. பணிக்குழுவினர் கூறையில் கிடந்ததால் அவர்களில் யாரும் வழிகாட்டியமைப்பை அடைவது அப்போது முற்றிலும் சாத்தியமற்றதாக இருந்தது.*

*'புயலின் முடிவில் ...'*

*இரண்டு ஏவுகணைகளும் பெரிதாக வளர்ந்து கலத்தை நோக்கி முழக்கத்துடன் விரைந்து கொண்டிருப்பது திரையில் தெரிந்தது.*

*'ஒரு தங்க வானம் ...'*

*ஆனால் ஒரு நம்பவியலாத தற்செயலால் தள்ளாடித்தடுமாறிய கலத்தின் பாதைக்கு அவை தங்கள் பாதையை முற்றிலும் சரியாக்கிக்கொள்ளாததால் கலத்தினடியில் கடந்து சென்றன.*

*'குயிலின் இனிய கானம் ... மீள்திருத்தத் தாக்கல் நேரம் பதினைந்து நொடிகளில் ... காற்றில் பறந்து செல் ...'*

*ஏவுகணைகள் சீற்றத்துடன் வளைந்து திரும்பி வந்து விரட்டலை தொடர்ந்தன.*

*'அவ்வளவுதான்,' என்றான் அதை பார்த்துக்கொண்டிருந்த ஆரதன், 'இனி நாம் நிச்சயமாக இறக்கத்தான் போகிறோம், இல்லையா?'*

*'அப்படிச் சொல்லாதே,' என்று இரைந்தான் டாட்டா, 'ஆனால், நாம் இறக்கத்தான் போகிறோம், இல்லையா?'*

*'ஆம்.'*

*'மழையில் துணிந்து நில்...' என்று பாடினான் செந்தில்.*

*ஆரதனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அவன் தடுமாறி எழுந்து, 'ஏதோ சாத்திக்கூறின்மையுந்தி என்கிறீர்களே, அதை முடுக்கிவிட்டாலென்ன? அது நம் கைக்கு எட்டக்கூடும்.' என்றான்.*

*'உனக்கு என்ன பைத்தியமா?' என்றான் பீபிள்பிராசன், 'தகுந்த நிரலாக்கம் இல்லாமல் அதை முடுக்கிவிட்டால் என்ன வேண்டுமானாலும் நிகழலாம்.'*

*'இந்தச் சூழ்நிலையில் அது முக்கியமா?' என்று இரைந்தான் ஆரதன்.*

*'உன் கனவுகள் உடைந்து சிதறினாலும் ...'*

*ஆரதன் வளைவாக ஒடுக்கப்பட்ட சுவருக்கும் கூறைக்குமிடையேயுள்ள தடித்த வடிவங்களாக வளைக்கப்பட்ட மூலையின் வழியே ஏறினான்.*

*'தொடர்ந்து செல்... தொடர்ந்து செல்... நெஞ்சில் உரத்துடன்...'*

*'நிகழ்தகவின்மையுந்தியை ஆரதனால் முடுக்கவியலாததன் காரணம் யாருக்கும் தெரியுமா?' என்று இரைந்தாள் திலக்கோமை.*

*'உனக்கு அச்சமில்லை... அச்சமில்லை... தாக்கல் ஐந்து விநாடிகளில். உங்களுடன் பழகியதில் எனக்கு மகிழ்ச்சி. விடை பெறுவோம். அச்சமே... யில்லை... யே...!'*

*‘கேட்கிறதா? நிகழ்தகவின்மையுந்தியை ஆரத...’* அடுத்து நிகழ்ந்தது பேரொலியும் பேரொளியுமடங்கிய ஒரு மனங்கலக்கும் மாபெரும் வெடிப்பு.

## *அத்தியாயம் 18*

*அதையடுத்து நிகழ்ந்தது என்னவென்றால், தங்க இதயம் ஒரு மறுவடிவமைக்கப்பட்ட நல்ல உள்ளமைப்புடன் கச்சிதமான இயல்புடன் பறந்து கொண்டிருந்ததுதான். கொஞ்சம் பெரிதாகவும், மென்மையான பசுநீலநிறச்சாயலிலும் இருந்தது. அதன் நடுவில் எங்கும்சென்றடையாத ஒரு சுருளிப்படிக்கட்டும் அதைச்சுற்றி ஒரு பெரணிக்கொத்தும் மஞ்சள்மலர்களும் இருந்தன. அதனருகில் ஒரு பாறையாலான கதிரவக்கடிகைப்பீடத்தில் முதன்மை கணினிமுனையம் இருந்தது. தந்திரமாகப்பொருத்தப்பட்ட ஆடிகளும் விளக்குகளும் ஒரு பார்வையகத்தில் நின்றுகொண்டு அழகாக நறுக்கிவிடப்பட்ட ஒரு தோட்டத்தை பார்ப்பதுபோன்ற மாயத்தோற்றத்தை உண்டாக்கின. பார்வையகப்பகுதியின் எல்லைப்புறத்தைச்சுற்றிலும் பளிங்குமேற்பரப்புடைய மேசைகள் நுணுக்கமான வேலைப்பாடுடைய தேனிரும்புக்கால்களால் நின்றன. மெருகூட்டப்பட்ட பளிங்கு மேற்பரப்பில் பார்த்தபோது கருவிகளின் மறையுருவங்கள் தெரிந்தன. அவற்றை தொட்டபோது உடனடியாக அந்தக் கருவிகள் கைகளுக்கடியில் உருப்பெற்றன. சரியான கோணங்களில் பார்த்தபோது தேவையான தரவுக்காட்சியங்களை ஆடிகள் எதிரொளித்ததுபோல் தோன்றியது. ஆனால் அவை எங்கிருந்து எதிரொளிக்கின்றன என்பது விளங்கவில்லை. ஆக மொத்தத்தில் அது வியக்கும்படி அற்புதமாக இருந்தது.*

*‘என்ன நிகழ்ந்தது?’ என்று கேட்டான், ஒரு மூங்கில் சாய்வுநாற்காலியில் ஓய்வாக அமர்ந்திருந்த பீபிள்பிராசன்.*

*‘அதாவது, நான் சொல்ல வந்தது, அந்த நிகழ்தகவின்மையுந்தியின் மாற்றி இங்கே...’ என்று சொல்லி, ஒரு மீன் தொட்டியின் அருகில் கிடந்த ஆரதன் அது இருந்தவிடத்தை நோக்கி கைநீட்டினான். அப்போது அங்கு ஒரு பூந்தொட்டியில் செடி இருந்தது.*

*‘நாம் இப்போது எங்கே இருக்கிறோம்?’ என்றான், கையில் ஒரு குளிர்ந்த அகிலண்டத்தொண்டையுறுமிக்குவளையுடன் சுருளிப்படிக்கட்டில் அமர்ந்திருந்த டாட்டா.*

*‘முன்பிருந்த அதே இடத்தில்தான்... என்று நினைக்கிறேன்’ என்றாள் திலக்கோமை. அவர்களை சுற்றியுள்ள ஆடிகள் இன்னும் அவர்களுக்கடியில் நகர்ந்து கொண்டிருந்த மகரத்தியாவின் நிலப்பரப்பையே காட்டின.*

*பீபிள்பிராசன் தன் இருக்கையிலிருந்து துள்ளி எழுந்தான்.*

*‘அப்படியானால் ஏவுகணைகள் எங்கே?’ என்றான்.*

*ஒரு புதிய பெருவியப்பான நிழலுரு ஆடியில் தோன்றியது. ‘அவை ஒரு கூடை சாமந்திப்பூவும், ஓர் அப்பாவி மெழுகத் திமிங்கலமுமாக மாறிவிட்டதாகத்தோன்றுகிறது.’ என்றான் டாட்டா.*

*செந்தில் குறுக்கிட்டு ‘அதன் நிகழ்தகவின்மை ஒன்றுக்கெதிராக எட்டு இருமடியாயிரத்து எழுநூற்றறுபத்தேழு ஆயிரத்து நூற்றிருபத்தெட்டு.’ என்று சொன்னது.*

*பீபிள்பிராசன் ஆரதனைப் பார்த்து விழித்தான். ‘இதெல்லாம் உன் வேலையா, புவிப்பயலே?’ என்று கேட்டான்.*

*‘நான் செய்ததெல்லாம்...’ என்று தொடங்கினான் ஆரதன்.*

*‘ஆ, நல்ல வேலை செய்தாய். சரிபார்ப்புத்திரைகளை செயற்படுத்தாமல் நிகழ்தகவின்மை உந்தியை ஒரு கணம் உளதாக்கி இருக்கிறாய். டேய், நம் எல்லார் உயிரையும் நீ காப்பாற்றி இருக்கிறாய், தெரிகிறதா?’*

*‘ஓ, அதெல்லாம் ஒன்றும் பெரிதில்லை...’ என்றான் ஆரதன்.*

*‘என்ன, பெரிதில்லையா? சரி, அப்படியானால் விட்டத்தள்ளு. கணினி! தரையிறங்க ஆயத்தமாகு.’*

*கவனிக்காமல் விட்டுத்தள்ளப்பட்ட மற்றொன்று என்னவென்றால், நிகழ்தகவின்மையை மீறி ஒரு மெழுகத்திமிங்கலம் கோளின் மேற்பரப்புக்கு பல கிலோமீட்டர் உயரத்தில் திடீரென்று உயிர்பெற்றது.*

*திமிங்கலத்துக்கு அது ஒரு இயல்பற்ற நிலையாதலால், தான் யார், என்ன நிலையில் இருக்கிறோம் என்று அந்த அப்பாவி விலங்கு உணர்வதற்குப் போதிய நேரம் கிடைக்கும் முன்பே, அது இல்லை என்ற நிலையை அடையும் நேரம் வந்துவிட்டது.*

*அதன் வாழ்வு தொடங்கிய கணத்திலிருந்து முடியும் வரை அதன் எண்ணப்போக்குகளின் முழுமையான பதிகை கீழ்க்கண்டவாறு.*

*ஆ...! என்ன நடக்கிறது என்று அது நினைத்தது.*

*ம்... நான் யார்?*

*யாராவது பதில் சொல்வார்களா?*

*நான் ஏன் இங்கிருக்கிறேன்? என் வாழ்வின் நோக்கம் என்ன?*

*நான் யார் என்பதற்கு என்ன பொருள்?*

*அமைதியாயிருக்க வேண்டும். ஓ! இது என்ன, ஒரு புதுமையான உணர்வு? என்னுடைய... ம்... பொருள்களுக்கு பெயர் கண்டுபிடித்தால்தான்... நான் ஒரு பேச்சு என்றழைப்பதற்காகவாவது... உலகம் என்றழைக்கும் இதில் உள்ளவற்றை புரிந்துகொள்ளவியலும்... ஆகையால் வயிறு என்று வைத்துக்கொள்ளலாம்... அதில் ஒரு கூச்சமான வெற்றிட உணர்வு.*

*ஆ. அது மேலும் வலுவடைகிறது. மேலும் இது என்ன, ஊதலும் உருமலுமான ஒலியுடன் நான் தலை என்றழைப்பதை கடந்துசெல்கிறதே! சரி, அதை காற்று என்றழைக்கலாம். இது நல்ல பெயரா? எப்படியோ... இருந்துவிட்டுப்போகட்டும். அது எதற்காக என்பது தெரிந்ததும் ஒரு வேளை நான் வேறு நல்ல பெயரைக்கண்டுபிடிப்பேன். அது முக்கியமானதாக இருக்க வேண்டும். ஏனென்றால் அது மிக ஏரானமான அளவில் இருக்கிறது. ஏ! இதென்ன? இது... இதை வால் என்று அழைப்போம்... ஆம் வால். ஏய், இதை அங்குமிங்கும் வேகமாக என்னால் ஆட்டவியலுகிறதே. ம். அது நன்றாக இருக்கிறது. அதனால் அதிக பயனேற்படுவதாகத்தோன்றவில்லை. அது எதற்காக இருக்கிறது என்பதை பிறகு பார்த்துக்கொள்ளலாம். இப்போது நிலைமையை சரியாகத்தொகுத்தறிகிறேனா?*

*இல்லை.*

*சரி, போகட்டும். இது மிகவும் புதுமையாக இருக்கிறது. அறிந்து கொள்வதற்கு எவ்வளவு இருக்கிறது; எதிர்பார்ப்பதற்கு எவ்வளவு இருக்கிறது! அந்த எதிர்பார்ப்பால் எனக்கு மயக்கமே வருகிறது...*

*அல்லது இந்த காற்றினாலா?*

*இப்போது இது மேலும் ஏராளமாக இருக்கிறதே!*

*ஆகா! அது என்ன? திடீரென்று என்னை நோக்கி விரைவாக ஏதோ வருகிறதே! மிகப்பெரியதும், தட்டையானதும், வட்டமானதுமாகிய ஒன்று மிகமிகவிரைவாக வருகிறதே. சரி தட்டையானதும் விரைவாக வருவதுமான அதற்கு சுருக்கமாகத் த,ரை, தரை என்று பெயரிடலாம். நல்ல பெயர்.*

*அது என்னுடன் நட்புடனிருக்குமா?*

*பிறகு ஒரு தொப்பென்ற திடீரொலியைத்தொடர்ந்து அமைதி நிலவியது.*

*மாறாக, ஒரு கூடை சாமந்திப்பூ விழும்போது அதன் மனத்தில் தோன்றியதெல்லாம், ஐயோ மீண்டும் இப்படியா! என்ற ஒன்றுதான். அந்த ஒரு கூடை சாமந்திப்பூ ஏன் அவ்வாறு எண்ணியது என்பதன் சரியான காரணத்தை அறிந்தால் அண்டத்தின் இயல்புகளை இப்போது அறிந்திருப்பதைவிட மேலும் மிக விவரமாக அறியலாம் என்று பலர் நம்பூகிக்கின்றனர்.*

## *அத்தியாயம் 19*

*‘இந்த எந்திரனையும் நம்முடன் கொண்டுபோகவேண்டுமா?’ என்றான் டாட்டா. ஒரு மூலையிலுள்ள மரத்தினடியில் குறுகிநின்றிருந்த மார்வினை வெறுப்புடன் பார்த்தான்.*

*தங்க இதயம் அப்போது இறங்கியிருந்த வெட்டவெளிநிலப்பரப்பை காட்டிய ஆடித்திரைகளிலிருந்து பீபிள்பிராசன் திரும்பிப்பார்த்தான்.*

*‘ஓ, அந்த அவநம்பிக்கை எந்திரனையா? ஆம், கொண்டுபோகவேண்டும்,’ என்றான்.*

*‘ஏன்? இந்த பித்துமனத்தாழ்வுடைய எந்திரனை வைத்துக்கொண்டு என்ன செய்யப்போகிறோம்?’*

*‘உங்களுக்குத்தான் சிக்கல்கள் என்று நினைக்கிறீர்கள்,’ என்றான் மார்வின், புதிதாக நிரப்பப்பட்ட சவப்பெட்டியைப்பார்த்து சொல்வதுபோல். ‘நான் உண்மையிலே பித்துமனத்தாழ்வுடைய எந்திரனாக இருந்தால், அதற்கு நான் என்ன செய்வது? வேண்டாம், அதற்கு பதில் சொல்லவேண்டாம். நான் உங்களைவிட ஐம்பதாயிரம் மடங்கு அறிவுள்ளவன். எனக்கே அதன் பதில் தெரியவில்லை. உங்கள் மட்டத்துக்கு இறங்கி சிந்திக்க முயன்றாலே எனக்குத் தலைவலி வருகிறது.’*

*திலக்கோமை திடீரென்று ஒரு கதவை திறந்து தன் கூண்டறையிலிருந்து வெளிப்பட்டாள்.*

*‘என் வெள்ளைச்சுண்டெலிகள் தப்பித்துவிட்டன!’ என்றாள்.*

*ஒரு துயரமும் அக்கரையும் கலந்த முகபாவம் பீபிள்பிராசனின் எந்த முகத்திலும் தோன்றவில்லை.*

*‘உன் பாழாய்ப்போன வெள்ளைச்சுண்டெலிகளை உடைப்பில் போடு,’ என்றான்.*

*திலக்கோமை அவன் மீது ஒரு கோபப்பார்வையை வீசிவிட்டு மறைந்தாள்.*

*ஒரு முக்கியமான உண்மையை பொதுவாக மக்கள் அறிந்திருந்தால் அவள் சொல்வதில் யாராவது அக்கரை கொண்டிருப்பார்கள். புவியிலுள்ள உயிரினங்களிலே அறிவுக்கூர்மையில் மக்கள் (பெரும்பான்மை சாராக்கண்டறிவாளர்கள் நம்புவதுபோல்) இரண்டாவது தரநிலை அல்லாமல், மூன்றாவது தரநிலையுடையவர்கள் என்பதுதான் அந்த உண்மை.*

*‘மாலை வணக்கம், மக்களே.’*

*அந்தக் குரல் பழக்கமானதுபோல் தோன்றினாலும், வேறுபட்டதாகவும் தோன்றியது. அது ஒரு தாயின் தொனியில் கேட்டது. கோளின் மேற்பரப்புக்குச்செல்லவிடும் வளிப்பூட்டறையின் துளைக்கதவருகில் பணிக்குழுவினர் வந்தடைந்தபோது அந்தக்குரல் அவர்களுக்கு தன்னை அறிவித்துக்கொண்டது.*

*அவர்கள் ஒருவரையொருவர் புதிருடன் பார்த்தனர்.*

*‘அது நம் கணினி,’ என்று பீபிள்பிராசன் விளக்கினான். ‘ஓர் அவசரநிலை காப்புநகலாக அதற்கு இந்தத்தற்பண்பும் இருந்ததை கண்டுபிடித்தேன். இது மேம்பட்டதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.’*

*‘குழந்தைகளே, இதுதான் ஒரு தெரியாத புதிய கோளில் நீங்கள் இறங்கும் முதல் நாள்,’ என்று செந்திலின் புதிய குரல் தொடர்ந்தது, ‘ஆகையால் குளிர்தாங்கும்படி உடையணிந்துகொள்ளுங்கள். பூச்சிக்கண்களுடைய கொடிய பூதங்களுடன் விளையாடக்கூடாது.’*

*பீபிள்பிராசன் பொறுமையில்லாமல் கதவில் தட்டிக்கொண்டிருந்தான்.*

*‘இதற்குப்பதிலாக ஒரு சறுக்கிக்கணிப்பானை நாம் பயன்படுத்தியிருக்கலாம்,’ என்றான்.*

*‘அப்படி யார் சொன்னது?’ என்று சிடுசிடுத்தது கணினி.*

*‘துளைக்கதவை தயவுசெய்து திறக்கிறாயா, கணினி?’ என்று பீபிள்பிராசன் கோபத்தை வெளிக்காட்டாமல் கேட்டான்.*

*‘சொன்னது யாரென்று தெரிந்த பிறகுதான்.’ என்ற கணினி சில நரம்பிணைகளை மூடியது.*

*‘அடக்கடவுளே,’ என்று டாட்டா முணுமுணுத்து, ஒரு கட்டுத்தலையில் சரிந்து பத்துவரை எண்ணத்தொடங்கினான். இதை எவ்வாறு செய்வதென்பதை தன்னுணர்வுள்ள உயிரினங்கள் என்றாவது ஒருநாள் மறந்து விடுவனவோ என்று கவலைப்பட்டான். எண்ணுவதன் மூலமே தாங்கள் கணினிகளைச்சாராதிருப்பதை மனிதர்கள் நிலைநாட்டவியலும்.*

*‘உம்…’ என்று மிரட்டியது கணினி.*

*‘கணினி…’ என்று பீபிள்பிராசன் தொடங்கினான்.*

*‘சொன்னால்தான்,’ என்று குறுக்கிட்டது கணினி, ‘எவ்வளவு நேரமானாலும் சரி…’*

*‘கணினி…’ என்று பீபிள்பிராசன் மீண்டும் தொடங்கினான். கணினியை வெல்ல காரண ஏரணமான எதையாவது சொல்ல வேண்டும் என்று சிந்தித்துக்கொண்டிருந்த பீபிள்பிராசன், அதன் களத்திலேயே அதனுடன் மோதவேண்டாம் என்று முடிவுசெய்தான். ‘இந்த துளைக்கதவை இக்கணமே திறக்காவிட்டால், நான் நேராக உன் முதன்மை தரவுவங்கிகளுக்குச்சென்று ஒரு பெரிய கோடரியால் உன்னை மறுநிரலாக்குவேன், புரிகிறதா?’*

*செந்தில் அதிர்ச்சியடைந்து இடைநிறுத்தி இதைச்சிந்தித்தான்.*

*டாட்டா அமைதியாக எண்ணுவதைத்தொடர்ந்தான். இது ஒரு மனிதனிடம் வெட்டுக்குத்து என்று சொல்வதற்குச்சமானமானது; கணினிக்கு எதிராகச்செய்யக்கூடியதில் மிகவும் தீவிரமானது.*

*செந்தில் இறுதியில் அமைதியாகச்சொன்னான், ‘நம் உறவைப்பேண நாம் அனைவருமே ஒத்துப்போக வேண்டியதுதான்.’ துளைக்கதவு உடனே திறந்தது.*

*ஒரு குளிர்க்காற்று அவர்கள் மீது வீசியது. அவர்கள் தங்களையே வெதுவெதுப்பாக அணைத்துக்கொண்டு சரிவுப்பாலத்தில் நடந்து மகரத்தியாவின் தரிசுமண்ணில் இறங்கினர்.*

*‘எல்லாரும் அழுதுகொண்டு திரும்பப்போகிறீர்கள். எனக்குத்தெரியும்.’ என்று அவர்களுக்குப்பின்னால் கத்திய செந்தில் துளைக்கதவை மூடிக்கொண்டான்.*

*சில நிமிடங்கள் கழித்து அவன் எதிர்பாராமல் திடீரென்று வந்த கட்டளைக்கு இணங்கி துளைக்கதவை திறந்து மீண்டும் மூடினான்.*

## *அத்தியாயம் 20*

*தரிசுநிலத்தில் ஐந்து உருவங்கள் மெதுவாக நடமாடின. நிலத்தின் சில பகுதிகள் மங்கலான சாம்பல்நிறத்திலும், வேறு சில பகுதிகள் மங்கலான பழுப்புநிறத்திலுமிருந்தன. மற்றப்பகுதிகள் பார்ப்பதற்கு அவ்வளவு ஆர்வமாக இல்லை. ஒரு காலத்தில் சதுப்புநிலமாக இருந்து தற்போது தாவரம் ஏதுமில்லாமல் உலர்ந்துபோய் சுமார் ஓர் அங்குலத்துக்கு தூசு படிந்தாற்போல் காணப்பட்டது. மிகவும் குளிராயிருந்தது.*

*அக்காட்சியால் பீபிள்பிராசன் மனத்தாழ்வடைந்தான். அவன் தனியாகத்திரிந்து விரைவில் ஒரு மேட்டின்பின் மறைந்தான்.*

*காற்று ஆரதனின் கண்களையும் காதுகளையும் கரித்தது. புழுக்கமான அடர்த்தியற்ற வளி அவன் தொண்டையை அடைத்தது. ஆயினும் அதிகம் தாக்குதலடைந்தது அவன் மனமே.*

*'கனவுபோலுள்ளது...' என்றான். அவன் குரல் அவன் காதுகளையே உலுக்கியது. அந்த அடர்வுகுறைந்த வளிக்கோளத்தில் ஒலியின் பரவல் மாறுபட்டதாக இருந்தது.*

*'என்னைக்கேட்டால் நாதியற்ற மூலை என்பேன்,' என்றான் டாட்டா. 'பூனையெச்சமண் இதைவிட விரும்பத்தக்கது.' அவனுக்கு ஓர் எரிச்சல் அதிகரிப்பதை உணர்ந்தான். விண்மீன்திரளில் அத்தனை விண்மீன்களும் அத்தனை கோள்களும் இருந்தும், அவன் தன் பதினைந்து ஆண்டு மறைவாழ்விலிருந்து மீண்டபோது இதுபோன்ற ஒரு குப்பைமேட்டுக்கா வரவேண்டும்? ஒரு காப்பிக்கடைகூட இல்லை. அவன் குனிந்து ஒரு பிடி குளிர்ந்தமண்ணை அள்ளினான். ஆனால் அதில் ஆயிரம் ஒளியாண்டுகள் பயணம் செய்து வந்து காணக்கூடிய ஏதுமில்லை.*

*'அப்படியில்லை. உனக்கு புரியவில்லையா? நான் வேறொரு கோளின் மேற்பரப்பில் கால்வைப்பது இதுதான் முதன்முறை. முற்றிலும் மாறுபட்ட உலகம்...! ஆனால் இது குப்பைமேடாக இருப்பது வருந்தத்தக்கதுதான்,' என்றான் ஆரதன்.*

*திலக்கோமை கைகளை தோளில் அணைத்துக்கொண்டு குளிரில்நடுங்கி முகம்சுளித்தாள். அவள் பார்வைக்களத்தின் ஓரத்தில் எதிர்பாராத ஏதோ சிறு அசைவு இருந்ததாக அவளுக்கு நிச்சயமாகத்தோன்றியது. ஆனால் அந்தத்திசையில் திரும்பிப்பார்த்தபோது அவர்களுக்குப்பின் சுமார் முப்பது மீட்டர் தொலைவில் வெளிக்கலம் மட்டும்தான் அசையாமல் அமைதியாக இருந்தது.*

*ஓரிரு நொடிகளுக்குப்பின் தரையின் ஒரு முகட்டில் ஏறிநின்று அவர்களை வரும்படி கையாட்டிய பீபிள்பிராசனைக்கண்டதில் அவளுக்கு ஒரு நிம்மதி ஏற்பட்டது.*

*அவன் கிளர்ச்சியடைந்தவனாக காணப்பட்டான். ஆனால் வளிக்கோளத்தின் அடர்வுக்குறைவாலும் காற்றினாலும் அவன் சொன்னது அவர்களுக்கு சரியாகக்கேட்கவில்லை.*

*அவர்கள் முகட்டின் உயரமான இடத்தையடைந்ததும் அது ஒரு வட்டவடிவமாயிருந்தது தெரிந்தது. அது சுமார் நூற்றைம்பது மீட்டர் அகலமுள்ள ஒரு கிண்ணக்குழி. கிண்ணக்குழியின் வெளிப்பக்கத்தைச்சுற்றிய சரிவில் கருப்புமசிவப்புமான திட்டுக்கள் சிதறிக்கிடப்பதைக்கண்டனர். நின்று ஒரு துண்டை எடுத்துப்பார்த்தனர். அது ஈரமாகவும் தேய்ப்பிபோலவும் இருந்தது.*

*அது புதிய திமிங்கல இறைச்சி என்பதை திடீரென்று உணர்ந்து திகிலடைந்தனர்.*

*கிண்ணக்குழியின் உதட்டு விளிம்பில் பீபிள்பிராசனை சந்தித்தனர்.*

*'அதோ பாருங்கள்,' என்று அவன் கிண்ணக்குழியுள் சுட்டினான்.*

*அதன் மையத்தில் தன் விதியைநினைத்து கவலைப்படவும் நேரமில்லாத ஓர் அப்பாவி மெழுகத்திமிங்கலத்தின் உடல் தனிமையாகக்கிடந்தது. அங்குள்ள அமைதி திலக்கோமையின் தொண்டையிலிருந்து அவள் கட்டுப்பாடின்றி எழுந்த சில சிறு விக்கல்களால் மட்டுமே கலைக்கப்பட்டது.*

*'இதை புதைக்கவேண்டும், இல்லையா?' என்ற ஆரதன் பிறகு தான் அப்படி சொல்லியிருக்கவேண்டாம் என்று எண்ணினான்.*

*'வாருங்கள்,' என்று சொன்ன பீபிள்பிராசன் மீண்டும் கிண்ணக்குழிக்குள் இறங்கத்தொடங்கினான்.*

*'என்ன, அதற்குள்ளேயா?' என்றாள் திலக்கோமை அருவருப்புடன்.*

*'ஆம், வாருங்கள். உங்களுக்கு ஒன்று காட்ட வேண்டும்.'*

*'இங்கிருந்தே தெரிகிறது,' என்றாள் திலக்கோமை.*

*'அதில்லை. வேறொன்று. வா'*

*அவர்கள் தயங்கினார்கள்.*

*'அட, வாருங்கள். நான் உள்ளே போவதற்கு வழி கண்டுபிடித்திருக்கிறேன்.'*

*'உள்ளேயா?' என்றான் ஆரதன் அச்சத்துடன்.*

*'கோளின் உட்பாகத்துக்கு! ஒரு சுரங்கப்பாதை இருக்கிறது. திமிங்கலம் விழுந்த தாக்கலின் விசையால் அது உடைந்து திறந்திருக்கிறது. அங்குதான் நாம் போகவேண்டும்; இந்த ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகளாக மனிதன் காலடி எடுத்துவைக்காத இடத்துக்கு; காலத்தின் ஆழத்துக்கு...'*

*மார்வின் தன் பாடலை மீண்டும் முணுமுணுக்கத்தொடங்கினான்.*

*பீபிள்பிராசன் அவனைத்தட்டியதால் நிறுத்தி விட்டான்.*

*ஒரு வெறுப்புநடுக்கத்துடன் அவர்கள் பீபிள்பிராசனைத்தொடர்ந்து சரிவிலிறங்கி கிண்ணக்குழிக்குள் சென்றபோது, அதை உண்டாக்கிய புன்வாய்ப்பு உயிரினத்தை பார்க்காமலிருக்க முயன்றனர்.*

*'வாழ்வு,' என்று மார்வின் சோகமிழைத்தான், 'நீ அதை வெறுக்கலாம், விட்டுவிடலாம், ஆனால் விரும்ப மட்டும் இயலாது.'*

*திமிங்கலம் விழுந்ததால் தரை உடைந்து உட்சென்றிருந்த இடத்தில் நிலவறைகளும் பாதைகளும் அடங்கிய ஒரு வலையமைப்பு தோன்றியது. அந்தப்பாதைகள் அப்போது விழுந்த மண்ணாலும் பாறைகளாலும் பெரும்பாலும் அடைக்கப்பட்டிருந்தன. பீபிள்பிராசன் அவற்றிலொன்றுக்குள் செல்வதற்காக ஒரு பாதையை உண்டாக்க முயன்றிருந்தான். ஆனால், மார்வின் அதைவிட விரைவாக நொறுங்குகளை அப்புறப்படுத்தினான். அதன் இருண்ட மூலைகளிலிருந்து புழுக்கக்காற்று மிதந்துவந்தது. பீபிள்பிராசன் ஒரு கைவிளக்கை காட்டினான். அப்படியும் அந்த தூசுநிறைந்த இருட்டில் ஒன்றும் தெரியவில்லை.*

*'பழங்கதைப்படி மகரத்தியர்கள் பெரும்பாலும் தரைக்கடியிலே வாழ்ந்தனர்,' என்றான்.*

*'ஏன் அப்படி?' என்றான் ஆரதன், 'மேற்பரப்பு மாசுற்றதாலோ இனத்தொகை அதிகரித்து விட்டதாலோவா?'*

*'அப்படியில்லை. அவர்கள் மேற்பரப்பில் இருக்க விரும்பாததால் என்று நினைக்கிறேன்,' என்றான் பீபிள்பிராசன்.*

*'இதற்குள் போவது நல்லதுதானா? முன்பே ஒருமுறை தாக்கப்பட்டிருக்கிறோம்,' என்றாள் திலக்கோமை பயத்துடன் இருளில் எட்டிப்பார்த்து.*

*'இதோபார், குழந்தாய். இந்தக்கோளின் இனத்தொகை சுழியும் நாம் நால்வரும்தான் என்று நான் உறுதியளிக்கிறேன். ஆகையால் நாம் உள்ளே செல்வோம், வாருங்கள். ஏய், புவிமனிதா...'*

*'ஆரதன்,' என்றான் ஆரதன்.*

*‘சரி, நீ இந்த எந்திரனை துணைக்குவைத்துக்கொண்டு பாதையின் இந்த முனையில் காவலிரு, சரியா?’*

*‘காவலா? எதற்கு? இப்போதுதானே இங்கு யாருமில்லை என்று சொன்னாய்?’*

*‘ஆம். சும்மா ஒரு பாதுகாப்புக்குத்தான், சரியா?’*

*‘யாருடைய பாதுகாப்பு, உனதா எனதா?’*

*‘நல்ல ஆளடா, நீ. சரி, போவோம், வாருங்கள்.’*

*திலக்கோமையும் டாட்டாவும் பின்தொடர, பீபிள்பிராசன் சுரங்கப்பாதையினுள் நுழைந்து சென்றான்.*

*‘உங்கள் எல்லாருக்கும் ஏதாவது கெடுதல் நடக்கட்டும்’ என்று தன் புகாரை வெளிப்படுத்தினான் ஆரதன்.*

*‘கவலைப்படாதே. அப்படித்தான் நடக்கும்,’ என்று மார்வின் அவனுக்கு உறுதியளித்தான்.*

*சில நொடிகளில் அவர்கள் பார்வையிலிருந்து மறைந்தனர்.*

*ஆரதன் வெறுப்புடன் கொஞ்சம் நடமாடினான். பிறகு ஒரு திமிங்கலத்தின் இடுகாடு நடமாடுவதற்கு ஏற்ற இடமன்று என்று முடிவுசெய்தான்.*

*மார்வின் துயரத்துடன் அவனை ஒருகணம் பார்த்தான். பிறகு தன்னைத்தானே இலதாக்கிக்கொண்டான்.*

*பீபிள்பிராசன் பாதையில் விரைவாக நடந்தான். அவன் மிகவும் அச்சத்துடன் இருந்ததை தன் மிடுக்குநடையால் மறைக்கப்பார்த்தான். கைவிளக்கின் ஒளியை அங்குமிங்கும் பாய்ச்சினான். சுவர்கள் முழுவதிலும் கருஞ்சாயல் ஓடுகள் பதிக்கப்பட்டிருந்தன. அவை தொடுவதற்கு குளிர்ச்சியாக இருந்தன. வளியில் மக்கிய வாசனை நிறைந்திருந்தது.*

*‘நான் சொன்னது சரிதானே? ஆளில்லாத கோள். மகரத்தியா!’ என்று சொல்லி ஓடு பதித்த தரையில் கிடந்த குப்பைக்கூளங்களின் நடுவே நடந்தான்.*

*திலக்கோமைக்கு அது சென்னை நகரச்சாலைகளை நினைவு படுத்தியது. இருந்தாலும் அவ்வளவு குப்பை இல்லை.*

*சுவரில் ஓடுகளுக்கு நடுவில் ஆங்காங்கே எளிய முக்கோணப்பாங்கிலான பல வெண்சாயல்நிறத்தில் வடிவடுக்குக்கள் இருந்தன. திலக்கோமை நின்று அவற்றிலொன்றை கூர்ந்துகவனித்தாள். ஆனால் அவளால் ஏதும் புரிந்துகொள்ள இயலவில்லை. ஆகவே அவள் பீபிள்பிராசனை கூப்பிட்டாள்.*

*‘ஏய், இந்த விந்தையான அடையாளங்கள் என்ன என்று தெரியுமா?’*

*‘அவை வெறும் விந்தையான அடையாளங்கள்,’ என்றான் அவற்றை அறைகுறையாகப்பார்த்து.*

*திலக்கோமையும் அதை விடுத்து அவனுடன் நடக்கத்தொடங்கினாள்.*

*அவ்வப்போது இடதுபக்கமும் வலதுபக்கமும் உள்ள சிறு அறைகளுக்குச்செல்லும் கதவுகள் தென்பட்டன. டாட்டா அந்த அறைகளில் அநாதைக்கணினிகள் இருப்பதைக்கண்டான். அவ்வாறான ஓரறைக்குள் சென்று பார்ப்பதற்காக பீபிள்பிராசனை இழுத்துச்சென்றான். திலக்கோமையும் பின்தொடர்ந்தாள்.*

*‘பார், இதுவா மகரத்தியா?’ என்றான் டாட்டா.*

*'ஆம். நாம் அந்தக்குரலை கேட்கவில்லையா?' என்றான் பீபிள்பிராசன்.*

*'சரி, இது மகரத்தியா என்பதை ஒருகணம் ஒப்புக்கொள்கிறேன். இதுவரை நீ ஒன்றும் சொல்லாதது என்னவென்றால், இதை எப்படிக்கண்டுபிடித்தாய் என்பது. நிச்சயமாக ஒரு விண்மீன் படநூலில் பார்த்திருக்க மாட்டாய்.'*

*'ஆய்வு. அரசு பரணீடுகள். ஒற்று வேலை. சில நல்வாய்ப்பான ஊகங்கள். எளிது.'*

*'பிறகு இதை தேடிவருவதற்காக தங்க இதயத்தைத்திருடினாய்!'*

*'நான் அதைத்திருடியது இன்னும் பலவற்றைத்தேடுவதற்காக.'*

*'இன்னும் பல?' என்றான் டாட்டா வியப்புடன், 'வேறு என்ன?'*

*'தெரியவில்லை.'*

*'என்ன?'*

*'நான் வேறு எதைத்தேடுகிறேன் என்று எனக்குத்தெரியவில்லை.'*

*'ஏன்?'*

*'ஏனென்றால்... ஏனென்றால்... அது ஏனென்று நான் நினைக்கிறேனென்றால், தெரிந்தால் அவற்றை தேடவியலாது.'*

*'என்ன, உனக்குப்பைத்தியமா?'*

*'அந்தச்சாத்தியத்தை நான் இன்னும் விலக்கிவிடவில்லை,' என்றான் பீபிள்பிராசன் அமைதியாக. 'என் மனம் இப்போதுள்ள நிலையில் எவ்வளவு அறிய முடியுமோ அவ்வளவுதான் நான் என்னைப்பற்றியே அறிகிறேன். இப்போதுள்ள நிலை சிறந்ததாக இல்லை.'*

*யாரும் வெகுநேரம் பேசவில்லை. டாட்டா ஒரு திடீர்க்கவலை நிறைந்த மனத்துடன் பீபிள்பிராசனை பார்த்துக்கொண்டிருந்தான்.*

*'இதோ பார் நண்பா, உனக்கு வேண்டுமானால்...' என்று இறுதியில் டாட்டா தொடங்கினான்.*

*'இரு, இரு. ஒன்று உனக்குச்சொல்கிறேன்,' என்றான் பீபிள்பிராசன். 'நான் பெரும்பாலும் என் மனம்போல் நடந்துகொள்கிறேன். ஒன்று செய்ய வேண்டுமென்று என் மனத்தில் தோன்றினால், செய்தால்போகிறது என்று செய்துவிடுகிறேன். நான் விண்மீன்திரளின் அதிபராக எண்ணினேன். அது எளிதில் நடந்தது. இந்தக்கலத்தை திருட எண்ணினேன். மகரத்தியாவை தேட எண்ணினேன். எல்லாம் நடந்துவிடுகின்றன. ஆம், அதைச்செய்வதற்கான சிறந்த வழிகளை சிந்திக்கத்தான் செய்கிறேன். ஆனால் எப்போதும் அவை சரியாக வருகின்றன. நான் ஏதோ ஒரு விண்மீன்திரட்கடனட்டையை வைத்திருப்பதுபோலவும் பணம் செலுத்தாவிட்டாலும் அது வேலைசெய்துகொண்டே இருப்பதுபோலவும் தோன்றுகிறது. நான் ஏன் இதை செய்யவிரும்பினேன், செய்வதற்கான வழிகளை எப்படி வகுத்தேன் என்றெல்லாம் சிந்திக்கத்தொடங்கும்போது அவ்வாறு சிந்திக்கவேண்டாம் என்ற வலுவான விருப்பம் ஏற்படுகிறது. இப்போது ஏற்படுவதுபோல. அதைப்பற்றிப்பேசவே எனக்கு அதிகமுயற்சி தேவையிருக்கிறது.'*

*பீபிள்பிராசன் சற்று நேரம் இடைநின்றான். கொஞ்சநேரம் அங்கு அமைதி நிலவியது. பிறகு முகத்தைச்சுளுக்கி மீண்டும் சொன்னான், 'நேற்றிரவு இதை மீண்டும் சிந்தித்தேன், என் மனத்தின் ஒரு பகுதி சரியாக வேலைசெய்யாததுபோல் தோன்றுவதைப்பற்றி. எண்ணங்களை போடுவதற்கு வேறு யாரோ என்னிடம் சொல்லாமல் என் மனத்தை பயன்படுத்துவது போல் தோன்றியது. யாரோ என் மனத்தின் ஒரு பகுதியை தங்கள் பயன்பாட்டுக்காக பூட்டிவைத்திருந்ததால்தான் என்னால் அதை பயன்படுத்த இயலவில்லை என்ற முடிவுக்கு வந்தேன். அதைச் சரிகாண ஏதும் வழி இருக்கிறதா என்று சிந்தித்தேன்.*

*‘கலத்தின் மருத்துவப்பகுதிக்குச்சென்று மூளைவரைவுத்திரையில் என்னை இணைத்தேன். அரசு அலுவலர்களுக்கு நடத்த வேண்டிய எல்லா திரையிடல் சோதனைகளையும் என் அதிபர் நியமனம் ஏற்கப்படும் முன்பு நடத்தியதுபோலவே என் இரண்டு தலைகளுக்கும் மீண்டும் நடத்தினேன். அவை ஒன்றும் காட்டவில்லை. அதாவது எதிர்பாராதது ஒன்றும் காட்டவில்லை. நான் தந்திரக்காரன், கற்பனை வளமுள்ளவன், பொறுப்பில்லாதவன், நம்பத்தகாதவன், விளம்பர விரும்பி போன்ற ஏற்கெனவே நாம் அறிந்தவற்றையே காட்டின. வேறேதும் இயல்பின்மை இல்லை. ஆகவே நான் மேலும் சில சோதனைகளை புனையத்தொடங்கினேன், முற்றிலும் நேர்ந்தவாறாக. அப்போதும் ஒன்றும் தெரியவில்லை. பிறகு ஒரு தலையின் சோதனை முடிவுகளை அடுத்த தலையின் முடிவுகளுடன் மேலமைத்தேன். அப்போதும் ஒன்றுமில்லை. இறுதியில் நான் வீணாக கவலைப்படுவதாக எண்ணி கைவிடநினைத்தபோது இன்னொன்றை சும்மா செய்துபார்க்கலாமே என்று நினைத்தேன். முடிக்கும்போது கடைசியாக நான் செய்தது அந்த மேலமைந்த படங்களை எடுத்து ஒரு பச்சைவடிப்பி மூலம் பார்த்ததுதான். நான் சிறுவனாய் இருந்தபோதே பச்சைநிறத்தில் எனக்கு ஒரு மூடநம்பிக்கை உண்டு என்பது உனக்குத்தெரியுமல்லவா?’*

*டாட்டா தலையசைத்தான்.*

*‘அப்போது தெரிந்தது! மிகத்தெளிவாகத்தெரிந்தது. இரண்டு மூளைகளின் நடுவிலும் தங்களுக்கிடையே தொடர்புடையனவாகவும் சுற்றியுள்ள வேறெந்தப்பகுதியுடனும் தொடர்பில்லாதவையுமான பகுதிகளின் எல்லா நரம்பிணைகளையும் கருக்கி மூளையின் அவ்விருதுண்டுகளையும் ஒரு சிறுக்கிமகன் மின்வழித்துன்புறுத்தியிருக்கிறான்.’*

*டாட்டா வாய்பிளந்து அவனைப்பார்த்து விழித்தான். திலக்கோமை வெளுத்துவிட்டாள்.*

*‘ஐயோ! அப்படியும் யாரும் செய்வார்களா?’ என்று கிசுகிசுத்த குரலில் சொன்னான் டாட்டா.*

*‘ஆம்.’*

*‘இது யார் செய்தது, உனக்குத் தெரியுமா? அல்லது ஏன் என்றாவது தெரியுமா?’*

*‘ஏன் என்பதை நான் ஊகிக்கத்தான் வேண்டும். ஆனால் அந்தச்சிறுக்கிமகன் யாரென்பது எனக்குத்தெரியும்.’*

*‘தெரியுமா? எப்படி?’*

*‘எப்படியென்றால், கருக்கிய நரம்பிணைகளில் சிறுக்கிமகன் தன்பெயரை பொறித்திருக்கிறான். எனக்குத்தெரியவேண்டும் என்பதற்காகவே எழுதிவைத்திருக்கிறான்.’*

*டாட்டா திகிலுடன் அவனை பார்த்தான். அவன் தோலுக்கடியில் ஏதோ ஊர்வதுபோல் இருந்தது.*

*‘பெயரா? உன் மூளையைக்கருக்கி எழுதினானா?’*

*‘ஆம்.’*

*‘என்ன எழுதியிருந்தது?’*

*பீபிள்பிராசன் மீண்டும் அமைதியாக ஒரு கணம் அவனை பார்த்தான். பிறகு வேறு பக்கம் திரும்பிக்கொண்டான்.*

*‘பீபு,’ என்றான். அந்தநேரத்தில் அவர்களுக்குப்பின் ஓர் இரும்பு இழுகதவு தடாலென்று வீழ்ந்தது. அறையினுள் வளிமம் பாயத்தொடங்கியது.*

*மூச்சுத்திணறியதால், ‘மீதியை அப்புறம் சொல்கிறேன்,’ என்றான் பீபிள்பிராசன். அவர்கள் மூவரும் மயங்கிவிழுந்தனர்.*

# *அத்தியாயம் 21*

*மகரத்தியாவின் மேற்பரப்பில் ஆரதன் ஏதோ சிந்தனையுடன் நடமாடிக்கொண்டிருந்தான்.*

*அவனுடைய பொழுதுபோக்கு வாசிப்புக்காக, டாட்டா முன்யோசனையுடன் தன்னுடைய பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டியை அவனிடம் விட்டுச்சென்றிருந்தான். ஆரதன் நேர்ந்தவாறாக சில பொத்தான்களை அமுக்கினான்.*

*பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டி சீரற்ற முறையில் திருத்தமைக்கப்பட்ட ஒரு நூல். அதன் பல திருத்தமைப்பாளர்கள் அந்தந்த நேரங்களில் தமக்குத்தோன்றியவாறு எழுதிய பல கட்டுரைகள் அதில் உள்ளன.*

*அவற்றுளொன்று (ஆரதன் அப்போது படித்துக்கொண்டிருந்தது) யாரோ வீரவூசகி என்பவருடைய அனுபவங்களைப்பற்றியது. அவர் பெருமெகலப்பல்கலைக்கழகத்தில் ஓர் அமைதியான இளைஞ மாணவராக இருந்தார். அவர் ஒரு மதிப்புக்குறிய அறிவகத்தொழின்மையை மேற்கொள்ள விரும்பி, தொன்மையிலக்கியவியல், உருமாற்றநன்னெறியியல், வரலாற்றுப்புலனுணர்வின் அலையொத்திசைவுக்கோட்பாடு போன்ற துறைகளில் படித்துவந்தார். ஓரிரவுமுழுவதும் பீபிள்பிராசனுடன் அகிலண்டத்தொண்டையுறுமி குடித்துக்கழித்தபின், தான் கடந்த பல ஆண்டுகளாக வாங்கி வைத்திருந்த கராக்களுக்கு என்னவானது என்ற சிக்கலில் ஒரு பைத்தியமான ஆர்வம் அவருக்கு வரத்தொடங்கியது.*

*அதைத்தொடர்ந்த ஒரு நீண்டகாலத்துக்கு விண்மீன்திரளிலுள்ள எல்லா முக்கியமான கரா இழப்புமையங்களுக்கும் பயணம்செய்து கடின ஆய்வுகளில் ஈடுபட்டு இறுதியில் அக்காலத்தில் மக்களின் கவனத்தை மிகவும் கவர்ந்த ஓர் அருமையான கோட்பாட்டை வெளியிட்டார். அந்த கோட்பாட்டின்படி, விண்ணகத்தில் மனிதவனையங்கள், ஊர்வனனையங்கள், மீனனையங்கள், நடக்கும் மரமனையங்கள், நீலநிறத்தின் உயர் அறிவுக்கூர்மையான சாயல்கள் ஆகியவை இருப்பதுடன் எங்கோ ஓரிடத்தில் முற்றிலும் கரா உயிரினங்களுக்கே உரிய ஒரு கோளும் இருக்கிறது. இந்தக்கோளுக்குத்தான் கராக்கள் வெளியிலுள்ள புழுத்துளைகள் வழியாக நாம் கவனிக்காதபோது அமைதியாக நழுவிச்சென்றுவிடுகின்றன. அங்கு முற்றிலும் கராசார்தூண்டல்களுக்கு பதிலளித்து, ஒரு தனித்துவ கராவனைய வாழ்க்கைமுறையை அனுபவித்து, பொதுவாக ஒரு நல்வாழ்வின் கரா சமானியை வாழலாம் என்பது அவற்றுக்கு தெரியும்.*

*கோட்பாடுகளைப்பொறுத்தவரை இதுவும் ஓர் ஆர்வமான இனிய ஒன்றாகத்தான் இருந்தது. ஆனால் வீரவூசகி அந்தக்கோளை கண்டுபிடித்து விட்டதாகவும் அங்கு ஒரு கஞ்சத்தனமான பச்சைப்பின்னிழுவிக்குடும்பத்துக்கு சிறப்புந்து ஓட்டுநராக சிலகாலம் பணிபுரிந்ததாகவும், பிறகு கைது செய்யப்பட்டு சிறையிலடைக்கப்பட்டதாகவும் அப்போது ஒரு நூலை எழுதியதாகவும், இறுதியில் தம்மைத்தாமே பொதுவிடங்களில் முட்டாளாக்கிக்கொள்ளும் எவருக்கும் நிகழ்வதுபோல் வரிவெளியேற்றம் செய்யப்பட்டதாகவும் சொன்னபோது யாரும் அதை நம்பவில்லை.*

*ஒருநாள் இந்தக்கோள் இருந்ததாக வீரவூசகி சொன்ன வெளிய ஒருங்களவுகளுக்கு ஒரு நோக்குக்குழு அனுப்பபட்டபோது, அங்கு அவர்கள் ஒரு சிறுகோளையும் அதிலிருந்த ஒரே ஒரு மனிதனையுமே கண்டனர். அந்த மனிதன் எல்லாமே பொய் என்று மீண்டும் மீண்டும் சாதித்தான். பிறகு அவனும் ஒரு பொய்யன் என்று கண்டுபிடிக்கப்பட்டது.*

*ஆயினும், அவனுடைய பிரதிசவாகவங்கி கணக்குக்கு ஆண்டுதோறும் செலுத்தப்படும் மர்மமான 60,000 அல்தாரியப்பணம் பற்றியதும் பீபிள்பிராசனின் மிகவும் பெறுமமடையும் மறுபயன் கரா வியாபாரம் பற்றியதுமான கேள்விகள் தீர்க்கப்படாமலே இருந்தன.*

*ஆரதன் இதைப் படித்து நூலை கீழே வைத்தான்.*

*எந்திரன் இன்னும் முற்றிலும் செயலற்றே அமர்ந்திருந்தான்.*

*ஆரதன் எழுந்து கிண்ணக்குழியின் உச்சிக்கு நடந்தான். அவன் கிண்ணக்குழியை சுற்றிநடந்தான். மகரத்தியாவில் இரண்டு கதிரவன்கள் மறையும் உன்னதக்காட்சியை கண்டான்.*

*கிண்ணக்குழிக்குள் மீண்டும் சென்றான். எந்திரனை எழுப்பினான். வேறு ஒருவரும் இல்லாதபோது ஒரு பித்து மனத்தாழ்வுடைய எந்திரனுடனாவது பேசலாம்.*

*'இரவு வருகிறது. பார் எந்திரா, விண்மீன்கள் தோன்றுகின்றன.'*

*இருண்ட நெபுலத்தின் ஆழத்திலும் ஒரு சில விண்மீன்கள் காட்சியளித்தன. அவை மிகவும் மங்கலாக இருந்தாலும் கண்ணுக்கு தோன்றின.*

*எந்திரன் கீழ்ப்படிந்து மேலே பார்த்தான். பிறகு கீழே திரும்பிக்கொண்டான்.*

*'ஆம். துயரந்தான், இல்லையா?' என்றான்.*

*'ஆ, அந்த கதிரவமறைவு! என் கற்பனை நிறைந்த கனவுகளிலும் அதைப்போல் நான் கண்டிருக்கவில்லை... இரண்டு கதிரவன்கள்! நெருப்பு மலைகள் வெளியில் கொதித்ததுபோலிருந்தது.'*

*'நான் பார்த்திருக்கிறேன். சுத்த அபத்தம்.' என்றான் மார்வின்.*

*'என் கோளில் ஒரு கதிரவன்தான். என் சொந்தக்கோள் புவி என்பது, தெரியுமா?' என்றான் ஆரதன் விடாப்பிடியாக.*

*'தெரியும். அதைப்பற்றித்தான் எப்போதும் புலம்பிக்கொண்டிருக்கிறாயே. அது என்ன அவ்வளவு மோசமானதா?'*

*'ஓ, இல்லை. அது மிக அருமையான இடம்.'*

*'பெருங்கடல்கள் இருந்தனவா?'*

*'ஆம்,' என்றான் ஆரதன் ஒரு பெருமூச்சுடன், 'மாபெரும் அகன்ற சுருளலை நீலக்கடல்கள்...'*

*'பெருங்கடல்களை என்னால் சகிக்கவியலாது.'*

*'உன்னை ஒன்று கேட்க விரும்புகிறேன். நீ மற்ற எந்திரன்களுடன் நன்றாகப்பழகுகிறாயா?'*

*'அவற்றை நான் வெறுக்கிறேன்,' என்ற மார்வின், 'எங்கே போகிறாய்?' என்று கேட்டான்.*

*ஆரதனால் அதற்குமேலும் தாங்க இயலவில்லை. மீண்டும் எழுந்து விட்டான்.*

*'சும்மா இன்னொரு முறை நடந்துவிட்டு வருகிறேன்.'*

*'உன்னைச்சொல்லிக்குற்றமில்லை,' என்ற மார்வின் ஐநூற்றுத்தொண்ணூற்றேழு மும்மடியாயிரம் வரை எண்ணி ஒரு நொடி கழித்து உறங்கிவிட்டான்.*

*ஆரதன் தன்னைத்தானே கைகளால் தட்டி குருதியோட்டம் தன் வேலையில் அதிகக்கவனம் செலுத்துமாறு தூண்டினான். மீண்டும் கிண்ணக்குழியின் சுவரில் ஏறி வெளியேறினான்.*

*வளிக்கோளம் அடர்வற்றதாக இருந்ததாலும் நிலவு இல்லாததாலும் இரவு விரைவாக முன்னேறி அப்போது நன்றாக இருட்டியிருந்தது. இதனால் ஆரதன் தன்முன் நின்றிருந்த ஒரு முதியவரை கவனியாமல் அவர் மீது கிட்டத்தட்ட மோதிவிட்டான்.*

## *அத்தியாயம் 22*

*ஆரதன் பக்கமாக முதுகைத்திருப்பி நின்று அடிவான இருளில் புதைந்துகொண்டிருந்த இறுதிக்கதிர்களின் மினுக்கங்களை பார்த்துக்கொண்டிருந்தார் அவர். உயரமாகவும் முதிர்ந்தவராகவும் காணப்பட்டார். ஒரு சாம்பல்நிற ஒற்றை அங்கி அணிந்திருந்தார். திரும்பியபோது மெல்லியதான தனித்துவமான அவர் முகம் கவலைதோய்ந்ததாகவும் ஆனால் கருணையுடையதாகவும் நம்பத்தகுந்ததுமாக தோன்றியது. ஆனால் ஆரதனின் குரைப்பொலியை கேட்டபின்பும் அவர் திரும்பவில்லை.*

*இறுதியில் கதிரவனின் எல்லாக்கதிர்களும் முற்றிலும் மறைந்தபிறகே அவர் திரும்பினார். அவர் முகத்தில் இன்னும் எங்கிருந்தோ ஒளி வீசிக்கொண்டிருந்தது. ஆரதன் அந்த ஒளியின் மூலத்தைநோக்கி திரும்பியபோது சிலமீட்டர் தொலைவில் ஒரு சிறு வெளிப்படகு நிற்கக்காண்டான். அது தன்னைச்சுற்றி ஒரு மங்கலான ஒளிக்குட்டையை வீழ்த்தியது.*

*அந்த மனிதன் ஆரதனைப்பார்த்ததில் வருத்தம் தோன்றியது.*

*'எங்கள் இறந்தகோளுக்கு இந்த குளிரிரவில்தானா வரவேண்டும்!' என்றார்.*

*'யா... யார் நீங்கள்?' ஆரதன் குழறினான்.*

*மனிதர் வேறுபக்கம் திரும்பினார். மீண்டும் அவர் முகத்தில் சோகம் தவழ்ந்தது.*

*'என் பெயர் முக்கியமில்லை.'*

*அவர் மனத்தில் ஏதோ இருந்ததுபோல் தோன்றியது. பேசுவதில் அவசரம் காட்டவேண்டிய அவசியமில்லை என்ற கருத்துடையவர்போலும். ஆரதன் சங்கடமாக உணர்ந்தான்.*

*'ம்... ஆ... உங்களை திடீரென்று பார்த்ததும் நான் திடுக்கிட்டேன்.'*

*அந்த மனிதர் மீண்டும் திரும்பி அவனைப்பார்த்து புருவத்தை சற்று உயர்த்தினார்.*

*'உம்ம்ம்....?' என்றார்.*

*'உங்களைப்பார்த்ததும் நான் திடுக்கிட்டேன் என்றேன்.'*

*'பயப்படாதே. நான் உன்னை ஒன்றும் செய்யமாட்டேன்.'*

*ஆரதன் முகத்தை சுளித்தான். 'ஆனால் எங்களை எய்தீர்கள்! ஏவுகணைகள்...'*

*மனிதர் குழுக்கிண்ணத்தின் பள்ளத்தினுள் பார்த்தார். மார்வின் கண்களிலிருந்து எழுந்த மங்கலான ஒளிர்வு திமிங்கலத்தின் பெரிய உடல்மீது சிவப்பு நிழல்களை விழச்செய்தது.*

*மனிதர் சற்று சிரித்துக்கொண்டார்.*

*'அது தானியங்கி அமைப்பு,' என்று சொல்லி ஒரு சிறு பெருமூச்சு விட்டார். 'கோளின் வயிற்றில் அமைக்கப்பட்ட தொன்மைக்கணினிகள் இருண்ட ஆயிராண்டுகளை கழிக்கின்றன. அவற்றின் தூசுபடிந்த தரவுவங்கிகளை காலம் சோதிக்கிறது. அவ்வப்போது ஒரு கணையை ஏவி தங்கள் அலுப்பை குறைத்துக்கொள்கின்றனபோலும்.'*

*ஆரதன் மீது ஒரு கனத்த பார்வையை வீசி, 'நான் அறிவியல் பற்றுள்ளவன், தெரியுமா?' என்றார்.*

*'ஓ... அப்படியா?' என்ற ஆரதன் அந்த மனிதரின் கனிவு ஏதோ ஒரு சங்கடத்தை உண்டாக்கியதாக உணர்ந்தான்.*

*'ஆம்,' என்ற அந்த மனிதர் அதன்பின் பேசுவதை நிறுத்திவிட்டார்.*

*ஆரதன் மீண்டும் பேச வாயெடுத்தான். ஒரு மனிதன் ஒரு பெண்ணுடன் திருட்டுக்காதல் செய்யும்போது அவன் திடுக்கிடும்படி அவள் கணவன் அறைக்குள் வந்து தன் சட்டையை எடுத்து*

*மாட்டிகொண்டு ஏதோ சில வார்த்தைகள் பேசிவிட்டு திரும்பிச்சென்றால் எப்படி இருக்குமோ அப்படி ஆரதன் தன் நிலையை உணர்ந்தான்.*

*'நீ ஏதோ சங்கடத்துடன் தோன்றுகிறாயே' என்றார் முதியவர் கரிசனத்துடன்.*

*'இ... ஆ... இல்லை... ஆம். அதாவது பாருங்கள். இங்கு யாரும் இருப்பார்கள் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. நீங்கள் எல்லாரும் இறந்துபோயிருப்பீர்களோ ...'*

*'இறந்தா? அடக்கடவுளே! இல்லை. நாங்கள் உறக்கத்தில்தான் இருக்கிறோம்.'*

*'உறக்கத்திலா?' என்றான் ஆரதன் நம்பவியலாமல்.*

*'ஆம், பொருளாதார ஒடுங்கம் நீடிக்கும்வரை,' என்றார். ஆரதனுக்கு அவர் சொல்வது ஏதும் புரிகிறதா இல்லையா என்பதைப்பற்றி அவருக்கு கவலையில்லாததுபோல் பேசினார்.*

*ஆரதன் மீண்டும் அவரை தூண்டவேண்டியதாயிற்று.*

*'பொருளாதார ஒடுங்கமா?'*

*'ஆம். ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகளுக்குமுன் விண்மீன்திரளின் பொருளாதாரம் வீழ்ச்சியடைந்தது. தனிப்பயன்கோள்கள் ஒரு சொகுசுப்பொருளானது கண்டு ...'*

*அவர் இடைநிறுத்தி ஆரதனைப்பார்த்தார்.*

*'நாங்கள் கோள்களை கட்டுமானம் செய்தோம், தெரியுமல்லவா?'*

*'ஆம். நான் நினைத்தேன் ...'*

*'ஆர்வமிக்க தொழில்,' என்றார் முதியவர். ஒரு துயரச்சாயல் அவர் கண்களில் தோன்றியது, 'கடற்கரைகளை வடிவமைப்பது எனக்கு மிகவும் பிடித்த வேலை. கூர்குடாக்கள் செய்வதை மிகவும் அனுபவித்துச்செய்தேன். ம்... சரி' என்று சொல்லி மீண்டும் தான் சொல்ல வந்ததை தொடர்ந்தார். 'பொருளாதார ஒடுங்கம் வந்தது. நாங்கள் அது நீடிக்கும்வரை உறங்கி விடுவது பல தொல்லைகளை தவிர்க்கும் என்று முடிவுசெய்தோம். ஆகையால் அது முடிந்ததும் எங்களை எழுப்பும்படி கணினிகளை நிரலாக்கினோம்.'*

*அந்த மனிதர் ஒரு சிறு கொட்டாவியை அடக்கிக்கொண்டு தொடர்ந்தார்.*

*'கணினிகளை விண்மீன்திரள் பங்குச்சந்தை விலைச்சுட்டெண்களுடன் இணைத்து, மற்றவர்கள் பொருளாதாரத்தை மீள்கட்டமைத்து எங்கள் விலையுயர்ந்த சேவைகளைப்பெறும் வசதியடைந்தபின் எங்களை எழுப்புமாறு பணித்தோம்.'*

*தி இந்து பத்திரிகையை விடாமல் படிக்கும் பழக்கமுடைய ஆரதன் இதைக்கேட்டு மிகுந்த அதிர்ச்சியடைந்தான்.*

*'இது நியாயமற்ற நடத்தை! இல்லையா?'*

*'அப்படியா?' என்றார் முதியவர் மிதமாக. 'மன்னிக்கவும். எனக்கு நடப்பு நடத்தைகள் தெரியவில்லை.'*

*அவர் குழிக்கிண்ணத்தினுள் சுட்டினார்.*

*'அந்த எந்திரன் உன்னுடையதா?'*

*'இல்லை,' என்ற பதில் மெல்லிய உலோகக்குரலால் குழிக்கிண்ணத்திலிருந்து வந்தது, 'நான் என்னுடையவன்.'*

*'அதை எந்திரன் என்று சொல்லவியலாது. அது ஒரு மின்பிணக்க எந்திரம்.'*

*'இங்கே கொண்டுவா,' என்றார் முதியவர். ஏதோ முடிவு செய்து விட்டதன் குறிப்பு திடீரென்று அவர் குரலில் இருந்ததைக்கேட்ட ஆரதன் வியப்புற்றான். மார்வினை கூப்பிட்டான். மார்வின் நொண்டிபோல் நடித்துக்கொண்டு பெரும் முயற்சியுடன் சரிவில் தவழ்ந்து ஏறி வந்தான்.*

*'இல்லை, வேண்டாம்,' என்றார் முதியவர், 'அது இங்கே இருக்கட்டும். நீ என்னுடன் வா. பெரிய காரியங்கள் நடக்கப்போகின்றன.' அவர் தன் படகைநோக்கி திரும்பினார். எந்தச்சைகையும் கொடுத்ததாக தோன்றாவிட்டாலும் படகு இருளில் அமைதியாக அவர்களை நோக்கி வந்தது.*

*ஆரதன் கீழே மார்வினை எட்டிப்பார்த்தான். மார்வின் அப்போது கடின உழைப்புடனும் தனக்குத்தானே முனகிக்கொண்டும் கீழ் நோக்கி தவழ்ந்துகொண்டிருந்தான்.*

*'வா. உடனே வா. இல்லாவிட்டால் காலமாகிவிடும்.'*

*'காலமாகிவிடுமா? எதற்கு?'*

*'உன் பெயர் என்ன, மனிதா?'*

*'ஆரதன். மாதவன் மகன் ஆரதன்'*

*'காலமாகிவிடும் என்றால் காலமான ஆரதன்மாதவன்மகனாரதனாகிவிடும் என்று பொருள்,' என்றார் முதியவர் கடுமையாக. 'இது ஒரு விதமான அச்சுறுத்தல் என்பதைத் தெரிந்துகொள்.' மற்றொரு வருத்தம் அவருடைய களைப்புற்ற முதிய கண்களில் தோன்றியது. 'எனக்கு அதில் அதிகத்திறமையில்லை. ஆனால் அது மிகவும் பயனளிக்கும் என்று சொல்கிறார்கள்.'*

*ஆரதன் அவரைப்பார்த்து விழித்தான்.*

*'என்ன விந்தையான மனிதர்,' என்று தனக்குத்தானே சொன்னான்.*

*'என்ன சொன்னாய்?' என்றார் முதியவர்.*

*'ஓ, ஒன்றுமில்லை,' என்றான் ஆரதன் சற்று அவமானத்துடன். 'சரி, நாம் எங்கே போகிறோம்?'*

*'என் வளியுந்தில்,' என்று அவர்களுக்கருகில் அமைதியாக வந்து நின்ற வண்டியில் ஏறும்படி கையசைத்தார். 'நாம் மகரத்தியாவின் வயிற்றின் ஆழத்துக்கு செல்லப்போகிறோம். அங்கு எங்கள் மக்கள் இப்போதுதான் ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகள் உறக்கத்திலிருந்து எழுப்பப்படுகிறார்கள். மகரத்தியா விழிக்கிறது.'*

*ஆரதன் ஒரு தன்விருப்பமற்ற நடுக்கத்துடன் முதியவரின் அருகில் அமர்ந்தான். அந்த வண்டி இரவு வானத்தில் அமைதியாக குதித்துச்சென்ற விதம் ஆரதனின் மனத்தை அமைதியிழக்கச்செய்தது.*

*கருவிப்பலகத்திலிருந்து வந்த சிறு ஒளியில் முதியவரின் முகத்தை பார்த்தான்.*

*'ஐயா, உங்கள் பெயரைச்சொல்லவில்லையே.' என்றான்.*

*'என் பெயரா?' என்ற முதியவரின் முகத்தில் அதே கவலையான சாயல் மீண்டும் தோன்றியது. ஓர் இடைநிறுத்தத்துக்குப்பின் 'என் பெயர் வேதடியாபயன்,' என்றார்.*

*ஆரதன் தொண்டை அடைத்துக்கொண்டது.*

*'மன்னிக்கவும். என்ன சொன்னீர்கள்?'*

*'வேதடியாபயன்,' என்று மீண்டும் சொன்னார் அமைதியாக.*

*'வேதடியாபயன்?'*

*முதியவர் துயரமாக அவனை பார்த்தார்.*

*'நான்தான் அது முக்கியமில்லை என்றேனே,' என்றார்.*

*வளியுந்து இரவின் அமைதியில் பறந்தது.*

# *அத்தியாயம் 23*

*மேலோட்டமாகத்தோன்றுவதே எப்போதும் உண்மைநிலையில்லை என்பது அனைவருமறிந்த ஒரு முக்கிய உண்மை. எடுத்துக்காட்டாக, புவியில் மனிதன் பறளாக்களைவிட தன்னையே அறிவாற்றல் மிக்கவனாக எப்போதும் எடுத்துக்கொண்டிருக்கிறான். ஏனென்றால், மனிதன் சக்கரம், நியூ யார்க்கு, போர்கள் போன்ற பல சாதனைகளை செய்திருக்கும்போது பறளாக்கள் செய்ததெல்லாம் நீரில் அலைந்து விளையாடிக்கொண்டு மகிழ்ந்திருப்பதுதான். ஆனால் திருப்புக்கூற்றாக, பறளாக்கள் தாங்களே மனிதனைவிட அறிவாற்றல் மிக்கவையாக நம்பி வந்திருக்கின்றன – மேற்சொன்ன அதே காரணங்களால்.*

*இதில் வேடிக்கை என்னவென்றால், புவிக்கோள் இடிக்கப்படப்போவதை பறளாக்கள் வெகுகாலமாகவே அறிந்திருந்தன. வரப்போகும் ஆபத்தைப்பற்றி மனிதர்களை அவை எச்சரிக்க முயன்றபோதெல்லாம் அவற்றின் தகவற்றொடர்பு முயற்சிகளைப் பந்துகளை அடிப்பதற்கும் சிறுமீன்களைப் பெறுவதற்கும் அவை செய்யும் வேடிக்கைச்செயல்களாக மக்கள் தவறாக எடுத்துக்கொண்டனர். ஆகவே அவை இறுதியில் அந்த முயற்சியைக்கைவிட்டு, வோகன்கள் வருவதற்குச்சற்றுமுன்பு தாமாகவே புவியை விட்டு வெளியேறின.*

*பறளாவிடமிருந்து வந்த கடைசிச்செய்தி பின்னோக்கிய இரட்டைக்குட்டிக்கரணம் அடித்து ஜன கண மன பாடிக்கொண்டே ஒரு வளையத்தினூடே பாய்வதற்கான ஒரு விந்தையான முயற்சி என்று தவறாகக்கொள்ளப்பட்டது. உண்மையில் அந்தச்செய்தி இதுதான்: சென்று வருகிறோம்; மீன்கள் கொடுத்ததற்காக நன்றி.*

*பறளாவைவிட அதிக அறிவாற்றலுடைய இனம் புவியில் ஒன்றுதான் இருந்தது. அவை நடத்தையியல் சோதனைச்சாலைகளில் சக்கரங்களுள் சுழன்று ஓடிக்கொண்டு மனிதர்கள் மீது மிகவும் அருமையான நளினமான சோதனைகளைச்செய்து தங்கள் காலத்தைக்கழித்தன. இந்த உறவையும் மனிதன் தவறாகப்புரிந்துகொண்டது அந்த விலங்குகள் அவ்வாறு திட்டமிட்டிருந்தபடிதான்.*

# *அத்தியாயம் 24*

*குளிர்மிக்க இருட்டில் ஒரு மென்மையான ஒற்றையொளிர்வாக வளியுந்து மகரத்தியாவின் இரவில் தனிமையாகவும் அமைதியாகவும் பயணித்தது. அது விரைவில் முடுக்கமடைந்தது. ஆரதனுடனிருந்தவர் தன்னுடைய எண்ணங்களிலே மூழ்கியிருந்ததாகத்தோன்றியது. ஆரதன் பேச்சுக்கொடுக்க முயன்றபோதெல்லாம் அவனுக்கு எல்லாம் வசதியாயிருக்கிறதா என்று மட்டும் கேட்பதுடன் பேச்சை நிறுத்திக்கொண்டார்.*

*ஆரதன் தாங்கள் பயணிக்கும் வேகத்தை கணிக்க முயன்றான். ஆனால் வெளியே கருமை முழுமையாக இருந்ததால் நிலையான பொருள் ஏதும் கண்ணுக்கு தோன்றவில்லை. மேலும் அந்த வண்டி நகர்வதுகூட தெரியாத அளவுக்கு அலுங்காமல் சென்றது.*

*பிறகு வெகுதொலைவில் ஒரு ஒளிப்புள்ளி தோன்றியது. சில நொடிகளில் அது மிகப்பெரியதாக வளர்ந்துவிட்டதால் ஆரதன் அது ஒரு அசுரவேகத்தில் தங்களைநோக்கி பயணித்ததை தெரிந்துகொண்டான். தான் இருப்பது எவ்விதமான வண்டி என்பதை ஊகிக்க சுற்றுமுற்றும் பார்த்து அதன் வடிவத்தை காணவியலாமல் தோற்றான். திடீரென்று வளியுந்து தரையைச்சென்று மோதும்வகையில் கீழ்நோக்கி பாய்ந்ததைக்கண்டு துணுக்குற்றான். அவர்களுடைய வேகம் நம்பத்தகாததாக இருந்தது. அவன் ஒரு மூச்சு வாங்குவதற்குள் எல்லாம் முடிந்துவிட்டது. அடுத்து அவன் கண்டதெல்லாம் அவர்களைச்சுற்றிலும் விரைந்த ஒரு வெள்ளி ஒளித்தாரைதான். தன் கழுத்தை முறுக்கிப்பின்திரும்பி பார்த்தபோது ஒரு சிறு கரும்புள்ளி அவர்களை விட்டு அசுர வேகத்தில் விரைந்துசெல்வதை கண்டான். என்ன நிகழ்ந்துவிட்டது என்பதை புரிந்துகொள்ள அவனுக்கு சிலநொடி நேரம் பிடித்தது.*

*அவர்கள் ஒரு சுரங்கப்பாதையில் வீழ்ந்து விரைந்து சென்றுகொண்டிருந்தனர். அந்த அசுர வேகம் அவர்களுடையதுதான். ஒளிப்புள்ளியாகத்தோன்றி வளர்ந்தது நிலையாக இருந்த அச்சுரங்கத்தின் வாய். பிறகு தெரிந்த வெள்ளி ஒளித்தாரைகள் சுரங்கப்பாதையின் வட்டச்சுவர்களில் பதிக்கப்பட்ட விளக்குக்கள். அவர்கள் மணிக்கு பலநூறு கிலோமீட்டர் வேகத்தில் சென்றிருக்கவேண்டும்.*

*ஆரதன் பயத்தில் கண்களை மூடிக்கொண்டான்.*

*எவ்வளவு என்று அவனுக்கு விளங்காத நேரம் கழித்து அவர்கள் வேகத்தில் சற்றுக்குறைவு ஏற்படுவதையும் அதன் பின் சற்றுநேரத்தில் அவர்கள் மெதுவாக அலுங்காமல் நிற்கப்போவதையும் உணர்ந்தான்.*

*கண்களைத் திறந்தான். அவர்கள் இன்னும் அந்த வெள்ளிச்சுரங்கப்பாதையில்தான் மற்றப்பல பாதைகளும் குறுக்கிட வளைந்தும் நெளிந்தும் சென்றுகொண்டு இருந்தார்கள். இறுதியில் ஒரு வளைந்த கூடம்போன்றிருந்த இரும்பு அறையில் அவர்கள் நின்றனர். மற்றப்பல சுரங்கங்களும் இங்கு முடிவடைந்தன. முறுமுனையில் பெரிய வட்டவடிவில் ஓர் எரிச்சலூட்டும் மந்தமான ஒளி தோன்றியது. அது எரிச்சலூட்டியது ஏனென்றால் அது கண்களுடன் ஏதோ விளையாட்டு காட்டியது. அதன்மீது கண்களை குவியச்செய்வதோ அது எவ்வளவு தொலைவிலிருக்கிறது என்று கணிப்பதோ கடினமாயிருந்தது. ஆரதன் அது ஒரு புறவூதா ஒளியாக இருக்கலாம் என்று (தவறாக) ஊகித்தான்.*

*வேதடியாபயன் திரும்பி ஆரதனை தன் முதிய அமைதியான கண்களால் பார்த்தார்.*

*'புவிமனிதா, நாம் இப்போது மகரத்தியாவின் ஆழமான உட்பகுதியில் இருக்கிறோம்,' என்றார்.*

*'நான் புவிமனிதன் என்பது உங்களுக்கு எப்படித்தெரியும்?' என்று வினவினான் ஆரதன்.*

*'இதெல்லாம் உனக்கு புரியவரும்,' என்றார் முதியவர் மென்மையாக. பிறகு ஒரு சந்தேகமான குரலில் 'அதாவது, இப்போது புரிவதைவிட கொஞ்சம் அதிகமாக புரியவரும்,' என்று சேர்த்தார்.*

*அவர் மேலும் தொடர்ந்தார்: 'நாம் இப்போது கடக்கப்போகும் அறை இந்தக்கோளில் இல்லை. அது இதைவிட... இதைவிட பெரியது. நாம் ஒரு நுழைவி மூலம் உயர்வெளிக்கு செல்லப்போகிறோம். இது உனக்கு கொஞ்சம் சங்கடத்தை தரலாம்.'*

*ஆரதன் பயந்த சில ஒலிகளை எழுப்பினான்.*

*வேதடியாபயன் ஒரு பொத்தானை தொட்டார். பிறகு 'எனக்கும் இது குடலை புரட்டும்,' என்று அவர் சொன்னது ஆரதனுக்கு மிகவும் ஆறுதலளிப்பதாக இல்லை. 'நன்றாகப்பிடித்துக்கொள்,' என்றும் சொன்னார்.*

*வளியுந்து திடீரென்று அந்த ஒளி வட்டத்தை நோக்கித் தன்னை எய்தது. ஆரதனுக்கு முடிவிலி என்பது எப்படி இருக்கும் என்று அப்போது நன்றாக விளங்கியது.*

*உண்மையில் அது முடிவிலி அன்று. முடிவிலி வெறும் தட்டையாகவும் ஆர்வமில்லாததும் ஆகும். இரவில் வானத்தைப்பார்ப்பது முடிவிலியைப்பார்ப்பதுதான். அந்தத் தொலைவு நமக்கு புரியாததால் அது பொருளற்றது. வளியுந்து நுழைந்த அறை முடிவிலியாக இல்லாவிட்டாலும் அது மிகமிகப்பெரிது. அது முடிவிலியின் பொருளை முடிவிலியைவிட மிகத்தெளிவாகக்காட்டியது.*

*ஆரதனின் புலன்கள் குதித்துச்சுழன்றன. வளியுந்து அடைந்த மாபெரும் வேகத்தில் திறந்தவெளியில் மேலெழுந்து சென்றபோது அவர்கள் நுழைந்த நுழைவி அவர்களுக்குப்பின்னிருந்த சுவரில் குறுகி ஓர் ஊசிமுனைப்புள்ளியானது.*

*அந்த சுவர்.*

*அந்தச்சுவர் கற்பனையைக்கடந்து மயக்கித்தோல்வியுறச்செய்தது. அந்தச்சுவர் மிகப்பெரிதாகவும் தட்டையாகவும் இருந்து அதன் உச்சி, அடி, பக்கங்கள் எல்லாம் பார்வை எல்லைகளை கடந்திருந்தன. உயரத்தால் ஏற்படும் தலைசுற்றல் அதிர்ச்சியே ஒரு மனிதனை கொல்வதற்குப்போதுமானது போலிருந்தது.*

*அந்தச்சுவர் கச்சிதமான தட்டையாக இருப்பதுபோல் தோன்றியது. ஒரு மிகத்துல்லியமான சீரொளிக்கருவியால் அளந்துபார்த்தால்தான் அதன் முடிவிலிக்கு ஏறியது போன்ற உயரமும், தலைசுற்ற வைக்கும் ஆழமும் இரு புறமும் பரந்து சென்ற பக்கங்களும் சற்றே வளைந்ததை கண்டுபிடிக்கவியலும். பதின்மூன்று ஒளி நொடிகளுக்கு அப்பால் அது தன்னைத்தானே மீண்டும் சந்தித்தது. அதாவது, ஓர் உள்ளீடற்ற கோளத்தின் உட்பக்கம்தான் அந்தச்சுவர். சுமார் ஐந்து இருமடியாயிரம் கிலோமீட்டர் விட்டமுடைய அந்தக்கோளத்தில் கற்பனைக்கெட்டாத ஒளிவெள்ளம் பாய்ந்திருந்தது.*

*'வா, வந்துபார்,' என்று வேதடியாபயன் சொன்னபோது வளியுந்து ஒலியின் மூன்று மடங்கு வேகத்தில் பயணித்து அந்த மனங்கலக்கும் விரிவான வெளியில் ஒரு சிறு தூசுபோல் ஊர்ந்து சென்றுகொண்டிருந்தது. 'எங்கள் உற்பத்திச்சாலையின் கட்டுமானத்தளத்தை பார்.'*

*ஒரு பயந்த வியப்புடன் ஆரதன் தன்னைச்சுற்றிலும் விழித்துப்பார்த்தான். அவர்களுக்கு முன்னால் அவனால் மதிப்பிடவோ ஊகிக்கவோ இயலாத இடைத்தொலைவுகளில் உலோகங்களாலும் ஒளியாலும் வெளிக்கோடிடப்பட்ட பல வியப்பான பொருட்கள் வெளியில் வரிசையாக தொங்கிக்கொண்டிருந்தன.*

*'இங்குதான் நாங்கள் பெரும்பான்மையான கோள்களை செய்கிறோம்,' என்றார் வேதடியாபயன்.*

*'என்ன,' என்ற ஆரதன் சொற்களைத்தேடி, 'அப்படியானால் நீங்கள் இதை மீண்டும் இப்போது தொடங்குகிறீர்களா?' என்றான்.*

*'இல்லை, இல்லை,' என்றார் முதியவர் அவசரமாக, 'அப்படியில்லை. விண்மீன்திரள் இன்னும் எங்களை ஆதரிக்குமளவுக்கு பணக்காரத்தனமாக இல்லை. ஒரே ஒரு தனிச்சிறந்த வேலைக்காக ஒரு மிக... அதாவது... வேறொரு பரிமாணத்திலிருக்கும் ஒரு மிகச்சிறந்த வாடிக்கையாளரால் நாங்கள் எழுப்பப்பட்டோம். உனக்கு அதில் ஆர்வமிருக்கும். அதோ நம் முன்னால் தொலைவில் தெரிகிறது, பார்.'*

*முதியவர் காட்டிய விரலின் திசையில் ஆரதன் பார்வையைச்செலுத்தி அவர் காட்டிய மிதக்கும் கட்டமைப்பை கண்டான். அங்குள்ள பலவற்றிலும் இதில் மட்டும்தான் எவ்விதச்செயலும் நடைபெறும் அறிகுறி இல்லாதது போலிருந்தது. ஆனால் அது ஒரு இனங்காணவியலாத ஓர் உள்மன உணர்வுதான்.*

*ஆனால் அப்போது ஓர் ஒளிக்கீற்று அந்த கட்டமைப்பின் மீது பட்டுச்சென்றதால் அந்த இருண்ட கோளத்திலுள்ள வடிவங்கள் தெளிவாகத்தென்பட்டன. அவை ஆரதனுக்குத்தெரிந்த வடிவங்கள். அவன் மனத்தின் மேசைநாற்காலிகளாக அவன் மூளையில் கிடந்த சொற்களின் தெளிவைப்போல அந்த வடிவங்கள் அவனுக்கு மிகத்தெளிவாகத்தெரிந்தவை. அந்தத்தோற்றங்கள் அவன் மனத்தில் ஓடியலைந்து எங்காவது படிந்து அவனை புரிந்துகொள்ளச்செய்யும்வரை சிலநொடிகளுக்கு அவன் அதிர்ச்சியடைந்த அமைதியில் அமர்ந்திருந்தான்.*

*அவன் மூளையின் ஒரு பகுதி அவன் கண்டது என்னவென்பதும் வடிவங்கள் எதைக்குறிக்கின்றன என்பதும் நிச்சயமாக தெரியும் என்றது. மறு பகுதி அந்த எண்ணத்தை மேற்கொள்ளவே மறுத்து அதற்கு மேலும் அந்தக்கோணத்தில் எண்ணிப்பார்க்கும் பொறுப்பிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டது.*

*ஒளிக்கீற்று மீண்டும் வந்தது. இந்த முறை எவ்வித ஐயமுமில்லை.*

*'புவி...' என்ற சொல் ஆரதனின் வாயிலிருந்தது நழுவி விழுந்தது.*

*'ஆம். புவி, இரண்டாம் பதிப்பு,' என்றார் உல்லாசமாக. 'எங்கள் மூல வரைதிட்டங்களிலிருந்து மற்றொரு நகலை உருவாக்குகிறோம்.'*

*சற்றுநேரம் அமைதி நிலவியது.*

*'நீங்கள் சொல்வது...' என்று ஆரதன் மெதுவாக தன் கட்டுப்பாட்டை இழக்காமலிருக்கும் முயற்சியுடன் சொன்னான், 'நீங்கள்தான் புவியை முதலில் உண்டாக்கினீர்களா?'*

*'ஆமாம்,' என்றார் வேதடியாபயன் மிகுந்த உற்சாகத்துடன். 'நார்வே என்ற இடத்துக்கு எப்போதாவது சென்றிருக்கிறாயா?'*

*'இல்லை. அங்கு நான் சென்றதில்லை.'*

*'ம்... அது நான் செய்தவற்றுள் ஒன்று. அதற்காக எனக்கு பரிசுகிடைத்தது, தெரியுமா? அழகான மடிப்பு விளிம்புகள். அதெல்லாம் இடிக்கப்பட்டபோது எனக்கு மிகவும் துயரமாக இருந்தது.'*

*'உங்களுக்கு துயரமாக இருந்ததா?'*

*'ஆம். ஐந்துநிமிடங்களுக்குப்பின் அழிந்திருந்தால் பரவாயில்லை. அதற்குமுன் இடிந்ததால் நான் மிகவும் அதிர்ச்சியடைந்தேன்.'*

*'ஆங்...?'*

*'சுண்டெலிகள் மிகுந்த கோபமடைந்தன.'*

*'சுண்டெலிகள் கோபமடைந்தனவா?'*

*'ஆமாம்,' என்றார் முதியவர் நிதானமாக.*

*'சரி சரி. அப்படித்தான் நாய்களும் பூனைகளும் வாத்தலகிகளும் கோபமடைந்திக்கக்கூடும், ஆனால்...'*

*'ஆ, ஆனால் அவையெல்லாம் புவிகட்டுவதற்கு பணங்கொடுக்கவில்லையே?'*

*'இதோ பாருங்கள். நான் புரிந்துகொள்வதை கைவிட்டு இப்போதே பைத்தியமாகிவிட்டால் உங்கள் வேலை எளிதாகுமா?'*

*சற்றுநேரம் வளியுந்தில் ஒரு சங்கடமான அமைதி நிலவியது. பிறகு முதியவர் பொறுமையுடன் விளக்க முற்பட்டார்.*

*‘புவிமனிதா, நீ வாழ்ந்த கோள் சுண்டெலிகளால் பணங்கொடுத்து கட்டுவிக்கப்பட்டு நடத்தப்பட்டது. அதை கட்டிய குறிக்கோள் முடிவதற்கு ஐந்து நிமிடங்களுக்குமுன் அது இடிக்கப்பட்டுவிட்டது. ஆகையால் நாங்கள் மற்றொன்றை கட்டவேண்டியதாகிறது.’*

*ஒரே ஒரு சொல்தான் அவன் மண்டையில் உரைத்தது.*

*‘சுண்டெலிகள்?’*

*‘ஆம், புவிமனிதா.’*

*‘இதோ பாருங்கள். மன்னிக்கவும். அந்த வெள்ளை முடியுடைய சிறு விலங்குகளைப்பற்றியா நாம் பேசுகிறோம்? தேங்காய்த்துண்டுக்காக பொறியில்சிக்குவதும் பழைய சிரிப்புத்துணுக்குக்களில் பெண்களை கிரீச்சிட்டு அலறச்செய்வதுமாகிய அதுவா?’*

*வேதடியாபயன் தொண்டையைச் செறுமிக்கொண்டார்.*

*‘புவிமனிதா, சிலநேரம் உன் பேச்சின் போக்கை என்னால் புரிந்துகொள்ள இயலவில்லை. நான் இந்த மகரத்தியா கோளின் உட்பாகத்தில் ஐந்து இருமடியாயிரம் ஆண்டுகள் தூங்கிக்கொண்டிருந்தேன் என்பதை நினைவில் வை. நீ சொல்லும் இந்த பழைய சிரிப்புத்துணுக்கைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீ சுண்டெலி என்றழைக்கும் இந்த உயிரினங்கள் அவை தோன்றுவதுபோலல்ல. அவை மாபெரும் மிகையறிவாற்றல் அனைத்துப்பரிமாண உயிரினங்களின் முப்பரிமாண வீழ்ப்புக்கள். தேங்காயும் கிரீச்சிடுதலும் ஒரு முகமூடிதான்.’*

*முதியவர் இடைநிறுத்தி, ஓர் இரக்கப்பார்வையுடன் சொன்னார். ‘அவை உங்கள்மீது பரிசோதனைகள் நடத்தி வந்திருக்கின்றன.’*

*ஆரதன் இதை ஒரு கணம் சிந்தித்தான். பிறது அவன் முகம் ஒளிர்வடைந்தது.*

*‘ஓ, இப்போது எனக்கு புரிகிறது, நீங்கள் இவ்வாறு தவறாகப்புரிந்துகொண்டதன் காரணம். இல்லை, அப்படியில்லை. என்ன நடந்ததென்றால், நாங்கள் அவற்றை வைத்து பரிசோதனைகள் நடத்துகிறோம். அவை நடத்தையியல் ஆய்வுகளில் அதிகம் பயன்படுகின்றன. பாவ்லாவ் போன்ற சோதனைகள். இது எப்படியென்றால், கற்பதன் இயல்புகளை நாங்கள் ஆய்ந்தறிந்து புரிந்துகொள்வதற்காக சுண்டெலிகள் மணியடிக்கவும், புதிர்ப்பாதைகளில் ஓடவும் கற்பதற்கான பல சோதனைகளில் ஈடுபடுத்தப்படுகின்றன. அவற்றின் நடத்தைபற்றிய எங்கள் கண்டறிதல்களால் எங்களைப்பற்றிப் பல ...’*

*ஆரதனின் குரல் தேய்ந்து மறைந்தது.*

*‘என்ன நுணுக்கம்...’ என்றார் வேதடியாபயன், ‘வியக்காமல் நான் என்ன செய்வது?’*

*‘எதைப்பற்றி?’*

*‘அவர்களின் உண்மையான இயல்பை மறைக்க இதைவிட நல்ல வழி உண்டா? உங்கள் எண்ணங்களை வழிநடத்த வேறெது சிறந்த வழி? புதிர்ப்பாதையில் திடீரென்று தவறான வழியில் செல்வது, தவறான தேங்காய்த்துண்டை உண்பது, எதிர்பாராமல் கோழைக்கழலைமிகைப்பால் இறந்துவிழுவது... துல்லியமாகக்கணக்கிட்ட மொத்தவிளைவுகள்...!’*

*ஒரு விளைவுக்காக அவர் இடைநின்றார்.*

*‘இதோ பார், புவிமனிதா, அவர்கள் உண்மையில் தந்திரமான மிகையறிவாற்றல் அனைத்துப்பரிமாண உயிரினங்கள். பத்து இருமடியாயிரம் ஆண்டுகளாக நடைபெறும் ஓர் ஆய்வுத்திட்டத்துக்காக ஏற்படுத்திய கரிமக்கணினி அணியின் ஓரங்கமே உன் கோளும் அதிலுள்ள மக்களும். நான் முழுக்கதையையும் உனக்குச் சொல்கிறேன். அதற்கு கொஞ்சம் நேரமாகும்.’*

*‘நேரமா? நான் இப்போது நேரத்தைப்பற்றி கவலைப்படவில்லை.’*

# அத்தியாயம் 25

வாழ்வைப்பற்றிய சிக்கல்கள் பல உள்ளன. அவற்றுள் புகழ்பெற்றவை மக்கள் ஏன் பிறக்கின்றனர், ஏன் இறக்கின்றனர், இடைப்பட்ட நேரங்களில் பெரும்பகுதியை அலைபேசியில் ஏன் கழிக்கின்றனர் என்பவை.

மிகப்பல இருமடியாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு மிகையறிவாற்றல் அனைத்துப்பரிமாண உயிரினம் (அந்த அனைத்துப் பரிமாண அண்டத்தில் அவர்களுடைய தோற்றம் நம்முடையதிலிருந்து அதிகம் மாறுபடவில்லை) இக்கேள்விகளால் மிகவும் துன்புற்று, வாழ்வின் பொருளைப்பற்றிய பல வாதங்கள் தங்களுக்குப்பிடித்தமான பொழுதுபோக்கான பிராக்கிய மிகைக்கிரிக்கெட்டு (இந்த விளையாட்டில், எளிதில் விளங்கக்கூடிய காரணம் ஏதுமில்லாமல் ஒருவரை திடீரென்று அடித்துவிட்டு பிறகு ஓடவேண்டும்) பார்ப்பதிலிருந்து தங்கள் கவனத்தைக்கலைத்ததால் அலுப்படைந்து, இந்தச்சிக்கலை ஒட்டுமொத்தமாகத்தீர்த்துவிடுவது என்று அமர்ந்து சிந்தித்தனர்.

அந்த நோக்கத்துடன் அவர்கள் ஓர் அற்புதமான மிகைக்கணினியை கட்டினார்கள். அக்கணினி எவ்வளவு அறிவாற்றல் உடையது என்பது தரவுவங்கிகள் இணைக்கப்படும் முன்பே நான் என்பது என் எண்ணங்களே[7] என்று தொடங்கியதிலிருந்தும், யாரும் அதை உளதாக்குமமுன்பே சேமியாபாயசத்துக்கும் வருமானவரிக்கும் தொடர்ந்ததிலிருந்தும் விளங்குகிறது.

அது ஒரு நகரத்தின் அளவுடையதாக இருந்தது.

அதன் முதன்மைக்காண்திரை தனித்துவமாக வடிவமைக்கப்பட்ட ஓர் உயர்நிர்வாக அலுவலகத்தில் உயர்தர உலோகத்தாலான பணிமேசையில் சிவப்புப்பட்டுத்துணியாலான விரிப்பின் மீது அமர்த்தப்பட்டிருந்தது. கால்கள்பதியும் மென்மையான தரைக்கம்பளமும் தொட்டிகளிலுள்ள பலநிறத்தாவரங்களும் முக்கிய நிரலாக்கர்கள் குடும்பத்துடனிருக்கும் கையொப்பமிட்ட படங்களும் அந்த அறையை அலங்கரித்தன. பெரிய சாளரங்கள் வழியே மரங்கள்சூழ்ந்த ஒரு புல்வெளி தெரிந்தது.

குறிக்கப்பட்ட உளதாக்கநாளில் நிதானமாக உடையணிந்த இரண்டு நிரலாக்கர்கள் அவர்களுடைய கைப்பெட்டிகளுடன் அந்த அறையினுள் அழைத்துச்செல்லப்பட்டனர். அக்கணத்தில் தங்கள் இனம் முழுவதின் நிற்பாளர்களாக தாங்களிருப்பதை அறிந்திருந்தும் அவர்கள் மிகுந்த அமைதியுடனும் நிதானத்துடனும் செயற்பட்டனர். பணிமேசையருகில் பணிவுடன் அமர்ந்து கைப்பெட்டிகளை திறந்து, அட்டைபோட்டு பெயரெழுதி மினுக்கப்பொடிதூவிய தங்கள் குறிப்பேடுகளை எடுத்தனர்.

அவர்களுள் ஒருவன் பெயர் தண்டசோரன். மற்றவள் பெயர் சோம்பி.

சில நொடிகள் அவர்கள் பணிவான அமைதியுடன் இருந்தனர். பிறகு சோம்பியுடன் அமைதியாக பார்வைகளை பரிமாறியபின், தண்டசோரன் முன்னால் குனிந்து ஒரு சிறு கருப்புப்பலகத்தை தொட்டான்.

மிக மென்மையான உம்மொலி அந்த மாபெரும் கணினி முற்றிலும் செயலாக்கநிலையிலிருப்பதை தெரிவித்தது. ஒரு சிறு தாமதத்துக்குப்பின் செறிவான ஆழ்ந்த ஒத்தலைவுக்குரலில் அது அவர்களுடன் பேசியது.

'ஆழ்ந்த சிந்தனை என்ற பெயருடையதும் நேரமும் வெளியும் அடங்கிய அண்டத்திலே மிகச்சிறந்தவற்றில் இரண்டாவதுமாகிய என்னை தாங்கள் வருவித்த நோக்கம் யாது?' என்றது.

தண்டசோரனும் சோம்பியும் வியப்புடன் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

'ஓ கணினி, நீ எங்களுக்குச் செய்ய…' என்று தொடங்கினாள் சோம்பி.

'இரு, இரு. கொஞ்சம் பொறு. இது சரியில்லை,' என்றான் தண்டசோரன் கவலையுடன். 'நாம் இந்த கணினியை மீச்சிறந்ததாக இருக்கும்படி பெருமுயற்சிகள் எடுத்து வடிவமைத்தோம். இரண்டாவது சிறந்ததாக எப்படி ஏற்றுக்கொள்வது? ஆழ்ந்த சிந்தனை,' என்று கணினியை அழைத்துப்பேசினான்.

7மொ. கு: Cogito ergo sum (இலத்தீன்) - ரினே டேகார்ட் என்ற தத்துவமேதை.

*'நாங்கள் வடிவமைத்தபடி நீ எங்கும் எக்காலத்தும் உள்ள கணினிகளிலே மீப்பெரு திறன்வாய்ந்த மாபெரும் கணினி இல்லையா?'*

*'நான் என்னை இரண்டாவது மாபெரும் கணினி என்று விவரிக்கிறேன். அவ்வாறே இருக்கிறேன்,' என்று ஓதியது கணினி.*

*இரண்டு நிரலாக்கரிடையே மற்றொரு கவலைப்பார்வை பரிமாறப்பட்டது. தண்டசோரன் தொண்டையை சரிசெய்துகொண்டான்.*

*'இதில் ஏதோ தவறு இருக்கவேண்டும். ஒரு விண்மீனின் எல்லா அணுக்களையும் ஒரு மில்லிநொடியில் எண்ணக்கூடிய மில்லரின் அரக்கமூளைக்கணினியை விட நீ சிறந்தது இல்லையா?'*

*'மில்லரின் அரக்கமூளைக்கணினியா?' என்றது ஆழ்ந்த சிந்தனை. 'வெறும் மணிச்சட்டம். அதைப்பற்றி பேசாதீர்.'*

*சோம்பி பதற்றத்துடன் முன்வந்து, 'ஒளியின் ஏழாம் விண்மீன்திரளிலுள்ளதும் தங்கரபாத்தில் ஐந்து வாரமாகப்பொழியும் மணற்புயலின் ஒவ்வொரு துகளின் வீசுபாதையையும் கணக்கிடவல்லதுமாகிய மனோவேக விண்மீன்சிந்தனையைவிட நீ சிறந்த பகுப்பாய்வி இல்லையா?' என்றாள்.*

*'ஐந்து வார மணற்புயல்!' என்றது ஆழ்ந்த சிந்தனை ஆணவத்துடன். 'பெருவெடிப்பின் அணுத்திசையன்களை மனத்திலடக்கிய என்னிடமா இந்தக்கேள்வியை கேட்கிறீர்? ஒரு கணிப்பானில் போடும் கணக்கைச்சொல்லி என்னை அவமானப்படுத்தாதீர்.'*

*இரண்டு நிரலாக்கர்களும் செய்வதறியாமல் சற்றுநேரம் சும்மா இருந்தனர். பிறகு தண்டசோரன் மீண்டும் முன்வந்தான்.*

*'சிசரானிக்கம் 12-இலுள்ள களைப்படைவிக்கவியலா மாபெரும் மீப்பெரு உருவிலாக்கருத்துருவுருவாக்கியைவிட நீ தீவிரமான விவாதி இல்லையா?'*

*'மாபெரும் மீப்பெரு உருவிலாக்கருத்துருவுருவாக்கி,' என்ற ஆழ்ந்த சிந்தனை, ரு-க்களைத் தேவையில்லாமல் அதிகமாக உருட்டி உச்சரிப்பதன் மூலம் தன் வெறுப்பை வெளிப்படுத்தியது, ' ஓர் ஆர்க்கிரிய மிகைக்கழுதையை ஆற்றங்கரைக்கு இழுத்துச்செல்லலாம். ஆனால் அது நீரை அருந்தும்படிச்செய்வது என்னால் மட்டுமே இயலும்.'*

*'அப்படியானால் என்ன சிக்கல்?' என்றாள் சோம்பி.*

*'சிக்கல் ஒன்றுமில்லை,' என்றது ஆழ்ந்த சிந்தனை ஓர் ஒய்யார மணிக்குரலில். 'நான் நேரமும் வெளியும் அடங்கிய அண்டத்திலே மிகச்சிறந்தவற்றில் இரண்டாவது கணினி. அவ்வளவுதான்.'*

*'ஆனால், இரண்டாவது!' என்றான் தண்டசோரன் விடாப்பிடியாக. 'நீ ஏன் மீண்டும் மீண்டும் இரண்டாவது என்றே சொல்கிறாய்? ஒருவேளை நீ அந்த பலபுரணித்திரலனைய வியர்குளிர்வு தடிமுள்ளத்தை கருதுகிறாயா? அல்லது அந்த எண்ணநடமாடி ...'*

*கணினியின் காண்திரையின் மேற்பக்கத்தில் வலமிருந்து இடமாக ஓர் ஒளிக்கற்றை வட்டவில் பாதையில் சென்றது.*

*'அந்த எளியன்களைப்பற்றி சிந்திக்க நான் ஓர் இணு எண்ணவலகும் செலவிட மாட்டேன்!' என்று இரைந்தது. 'நான் சொல்வது எனக்குப்பிறகு வரப்போகும் கணினியைப்பற்றி.'*

*சோம்பி பொறுமையிழந்தாள். தன் குறிப்பேட்டை தள்ளிவிட்டு, 'இதென்ன, தேவையில்லாத முன்னறிதல்!' என்றாள்.*

*'எதிர்காலத்தைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? நான் என் அளவற்ற மின்சுற்றுகளால் முடிவிலா எதிர்கால நிகழ்தகவுகளின் பாயத்தாரைகளை அலசி, ஒருநாள் வரப்போகும் கணினியின் செயலாக்க அளவுருக்களை கருதவும் நான் தகுதியற்றது என்றும், ஆனால் அவ்வாறான கணினியை வடிவமைக்க கடமைப்பட்டதாவேன் என்றும் அறிகிறேன்.'*

சோம்பி ஒரு பெருமூச்சு விட்டுத் தண்டசோரனை பார்த்தாள்.

'சரி, போகட்டும். நம் கேள்வியை கேட்கலாமா?' என்றாள்.

தண்டசோரன் அவளை பொறுக்கும்படி கையமர்த்தினான்.

'நீ சொல்வது எந்தக்கணினியைப்பற்றி?' என்று கேட்டான்.

'தற்சமயம் நான் அதைப்பற்றி மேலும் பேசப்போவதில்லை. இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?' என்றது ஆழ்ந்த சிந்தனை.

அவர்கள் ஒருவரையொருவர் பார்த்து கைவிரித்தனர். சோம்பி தன்னை ஆயத்தம் செய்துகொண்டாள்.

'ஓ, ஆழ்ந்த சிந்தனை கணினி,' என்று தொடங்கினாள், 'நாங்கள் உன்னை உருவாக்கிய நோக்கம் இதுதான். உன்னிடமிருந்து எங்களுக்கு தேவையானது... ஒரு பதில்!'

'பதில்?' என்றது ஆழ்ந்த சிந்தனை, 'எதற்கான பதில்?'

'வாழ்க்கை!' என்றாள் சோம்பி.

'அண்டம்!' என்றான் தண்டசோரன்.

'எல்லாமே!' என்று இருவரும் ஒருமித்துச்சொன்னார்கள்.

ஆழ்ந்த சிந்தனை ஒரு கணம் இடைநின்று சிந்தித்தது.

'கொஞ்சம் கடினம்தான்.' என்றது இறுதியில்.

'உன்னால் இந்தக்கணக்கை போடவியலுமா?'

மீண்டும் ஒரு கணிசமான இடைநிற்றல்.

'ஆம்,' என்றது ஆழ்ந்த சிந்தனை, 'என்னாலியலும்.'

'அப்படியானால் பதில் இருக்கிறதா?' என்றாள் சோம்பி மூச்சுவிட மறந்து.

'எளிய பதில் இருக்கிறதா?' என்றான் தண்டசோரன்.

'ஆம். வாழ்க்கை, அண்டம், எல்லாமே! பதில் இருக்கிறது. ஆனால், ...நான் அதைப்பற்றி கொஞ்சம் சிந்திக்கவேண்டும்.'

அப்போது ஏற்பட்ட ஒரு திடீர் ஆரவாரம் அந்தக்கணத்தின் முக்கியத்துவத்தை குலைத்தது. ஒரு கதவு திடீரென்று திறந்தது. அதன் வழியே கரிச்சேவ பல்கலைக்கழக சீருடையான வெளிர்நீல வேட்டிகளும் தங்கச்சரிகை மேல்துண்டுகளும் அணிந்த இரண்டுபேர் தங்களை தடுத்து நிறுத்தமுயன்ற இரண்டு நோஞ்சான்களை தள்ளிக்கொண்டு சீற்றத்துடன் உள்ளே பாய்ந்தனர்.

அவர்களுள் இளையவன் அங்கிருந்த அழகிய பெண் உதவியாளரின் கழுத்தை முழங்கையால் தள்ளிவிட்டு, 'எங்களை உள்ளே விடும்படி கட்டளையிடுகிறேன்' என்று கத்தினான்.

மூத்தவன், 'எங்களை தடுக்க உங்களால் இயலாது,' என்று சொன்னதுடன், தடுக்க முயன்ற ஓர் இளநிலை நிரலாக்கரை வாசல் வழியே பின்தள்ளவும் செய்தான்.

'எங்களை தடுக்க உங்களால் இயலாது என்று கட்டளையிடுகிறேன்,' என்றான் இளையவன், அப்போது தடுப்பார் வேறு யாருமின்றி உள்ளே நுழைந்து திடமாக நின்றுவிட்ட பிறகும்.

தண்டசோரன் தன் இருக்கையிலிருந்து எழுந்து, 'யார் நீங்கள்? என்ன வேண்டும் உங்களுக்கு?' என்று கோபத்துடன் கேட்டான்.

*‘நான் தொடையழகன்!’ என்று மூத்தவன் அறிவித்தான்.*

*‘நான் வூம்பவளன் என்று கட்டளையிடுகிறேன்,’ என்று இளையவன் இரைந்தான்.*

*தொடையழகன் வூம்பவளனை நோக்கித் திரும்பி, ‘பரவாயில்லை. அதை கட்டளையிடத்தேவையில்லை,’ என்று விளக்கினான்.*

*‘சரி, நான் வூம்பவளன். இது கட்டளையன்று, உண்மை. நாங்கள் கட்டளையிடுவது உண்மைகளை’ என்று அருகிலுள்ள மேசையில் தன் கையால் குத்தி உறுதியாகச்சொன்னான்.*

*‘இல்லையடா, இல்லை,’ என்று தொடையழகன் எரிச்சலுடன் சொன்னான். ‘அதைத்தான் நாம் கட்டளையிடவில்லை.’*

*வூம்பவளன் அதே மூச்சில், ‘நாங்கள் உண்மைகளை கட்டளையிடவில்லை. நாங்கள் கட்டளையிடுவது முற்றிலும் உண்மை அல்லாதவற்றை. நான் வூம்பவளனாக இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம் என்று கட்டளையிடுகிறேன்,’ என்றான்.*

*‘ஏய், யாரடா நீங்கள்?’ என்றாள் சோம்பி பொறுக்கவியலாமல்.*

*‘நாங்கள் தத்துவமேதைகள்’ என்றான் தொடையழகன்.*

*‘அப்படி இல்லாமலும் இருக்கலாம்,’ என்றான் வூம்பவளன் ஒரு விரலை நிரலாக்கர்களை நோக்கி எச்சரிக்கையாக நீட்டியபடி.*

*‘அப்படித்தான்,’ என்று அழுத்திச்சொன்னான் தொடையழகன். ‘நாங்கள் திட்டவட்டமாக தத்துவமேதைகள்தாம். நாங்கள் இப்போது தத்துவமேதைகள், முனிவர்கள், ஞானிகள், மற்ற சிந்தனையாளர்கள் ஆகியோரின் கலவை ஒன்றியத்தின் நிற்பாளர்களாக இங்கு வந்திருக்கிறோம். இந்த எந்திரம் இலதாக வேண்டும், இப்போதே.’ என்றான்.*

*‘ஏன்? இதில் உங்களுக்கு என்ன சிக்கல்?’ என்று கேட்டான் தண்டசோரன்.*

*‘சொல்கிறேன், சகோதரா, சிக்கல் என்னவென்று சொல்கிறேன். பிரிவரைதான் சிக்கல்.’*

*‘பிரிவரைதான் சிக்கலாக இருக்கலாம் அல்லது இல்லாமலும் இருக்கலாம் என்று கட்டளையிடுகிறேன்.’*

*‘நீங்கள் கூட்டல் கணக்குகளுக்கு மட்டும் எந்திரங்களை அமர்த்துங்கள். அதற்கு நன்றி. தத்துவம்சார்பான கேள்விகளை நாங்கள் கவனித்துக்கொள்கிறோம். இதற்குறிய சட்டதிட்டங்களை போய்ப்பாருங்கள். அதிபர உண்மை தேடல் சட்டத்தின்படி இந்த உரிமை பணியிலிருக்கும் சிந்தனையாளருடைய விலக்கத்தகாத உரிமை. ஏதோவொரு கேலிக்குறிய எந்திரம் அதை கண்டுபிடித்துவிட்டால் நாங்களெல்லாம் வேலையில்லாமல் திண்டாடுவோம். நாங்கள் பாதி இரவு உறங்காமல் அமர்ந்து கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று விவாதித்துக்கொண்டிருக்க, இந்த எந்திரம் கடவுளின் தொலைபேசி எண்ணை நாளை விடிந்ததும் தந்துவிட்டால் எங்களால் என்ன பயன்?’*

*‘அதுதான் சரி! ஐயங்களும் நிச்சயமின்மையும் நிறைந்த துறைகள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட வேண்டும் என்று நான் கட்டளையிடுகிறேன்.’*

*திடீரென்று ஓர் அதிகாரத்தனமான உரத்த குரலின் ஒலி அறையை நிறைத்தது.*

*‘நான் இதைப்பற்றி ஒரு கருத்தை தெரிவிக்கலாமா?’ என்றது ஆழ்ந்த சிந்தனை.*

*‘நாங்கள் வேலைநிறுத்தம் செய்வோம்’ என்று வூம்பவளன் இரைந்தான்.*

*‘ஆம். பன்னாட்டுத்தத்துவமேதைகளின் வேலைநிறுத்தம் நடக்கும்.’*

*அந்த அறையில் இருந்த இம்மொலியின் மட்டம் திடீரென்று உயர்ந்தது. அறையில் சுற்றிலும் நன்கு செதுக்கப்பட்ட பேழைகளில் வெளித்தெரியாமல் பதிக்கப்பட்ட பல துணை உறுமொலிப்பிகள் ஆழ்ந்த சிந்தனையின் குரலுக்கு வலுவூட்டின.*

*'நான் சொல்ல வந்தது என்னவென்றால்,' என்று கணினி உறுமியது, 'வாழ்க்கை, அண்டம், எல்லாமே பற்றிய இறுதிக்கேள்விக்கான விடையைக்கணக்கிட என் மின்சுற்றுக்கள் இப்போது நிறுத்தவியலாமல் ஈடுபட்டுவிட்டன.' சற்று இடைநின்று அனைவர் கவனமும் தன்பால் இருப்பதை உறுதிசெய்தபின் சற்று அமைதியான குரலில் மேலும் தொடர்ந்தது. 'ஆனால் இந்த நிரல் ஓடி முடிவதற்கு கொஞ்சம் நேரமாகும்.'*

*சோம்பி பொறுமையில்லாமல் தன் கைக்கடிகாரத்தைப்பார்த்தாள்.*

*'எவ்வளவு நேரம்?' என்றாள்.*

*'ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகள்,' என்றது ஆழ்ந்த சிந்தனை.*

*தண்டசோரனும் சோம்பியும் ஒருவரையொருவர் பார்த்து விழித்தனர்.*

*'ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகள்...!' என்று இருவரும் ஒரே குரலில் போல் கதறினர்.*

*'ஆம். நான்தான் முன்பே சொன்னேனே, அதைப்பற்றி கொஞ்சம் சிந்திக்கவேண்டுமென்று. மேலும் எனக்கு என்ன தோன்றுகிறதென்றால், இதுபோன்ற ஒரு நிரலை ஓட்டுவது தத்துவத்துறைகளுக்கே பொதுவாக ஒரு மிகப்பெரிய விளம்பரமாக அமையும். நான் இறுதியில் என்ன விடையைச் சொல்லப்போகிறேன் என்று எல்லாரும் தங்கள் கோட்பாட்டை முன்வைப்பார்கள். அதனால் ஊடகங்களில் புகழும் பணமும் அடைவோர் உங்களைத்தவிர வேறு யார்? நீங்கள் ஒருவரோடொருவர் கருத்து வேறுபாடு கொண்டும், ஊடகங்கள் மூலம் ஒருவர்மேலொருவர் சேற்றை வாரி இறைத்துக்கொண்டும் இருக்கும்வரை உங்கள் கூழ்ச்சட்டி வற்றாது. இது உங்களுக்கு பிடித்திருக்கிறதா?'*

*இரண்டு தத்துவமேதைகளும் கணினியை வியந்து பார்த்தனர்.*

*'ஆகா, இது சிந்தனை! பார், வூம்பா, இதுபோன்ற சிந்தனைகள் நமக்கு ஏன் எழுவதில்லை?' என்றான் தொடையழகன்.*

*'தெரியலியே,' என்றான் வூம்பவளன், 'நம் மூளைகள் உயர்நிலையில் பயிற்சியடைந்தவை என்பதால்தான் என்று நினைக்கிறேன், தொடையா.'*

*அவ்வாறு சொல்லி அவர்கள் திரும்பி நடையைக்கட்டினார்கள். அந்த நடை அவர்கள் கனவிலும் எண்ணிப்பார்த்திராத ஓர் உன்னத வாழ்க்கைமுறைக்கு அவர்களை அழைத்துச்சென்றது.*

## *அத்தியாயம் 26*

*‘பாராட்டக்கூடியதுதான்,’ என்றான் ஆரதன், வேதடியாபயன் அந்த கதையின் முக்கிய அம்சங்களை விவரித்ததைக்கேட்டு, ‘ஆனால் இதற்கெல்லாம் புவியுடனும், எலிகளுடனும் மற்றவற்றுடனும் என்ன தொடர்பு என்பதுதான் எனக்கு விளங்கவில்லை.’*

*‘அது கதையின் முதல் பாதிதான், புவிமனிதா,’ என்றார் முதியவர், ‘ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகளுக்குப்பின், அந்த மெருமைக்குறிய பதில்நாளில் என்ன நடந்தது என்று உனக்கு தெரியவேண்டுமானால் என் நூலகத்துக்கு வா. அங்கு அதை எங்கள் உணர்வநாடாக்களில் நீயே உணரலாம். அதற்குமுன் புதுப்புவியின் மேற்பரப்பில் நடந்து பார்க்கவேண்டுமா? அது பாதிதான் முடிந்திருக்கிறது. அதன் உட்பாகத்தில் செயற்கை அச்சமூலி எலும்புக்கூடுகளை இன்னும் பதிக்கவில்லை. அதன்பின் புதிய ஊழியின் மூன்றாமை நான்காமை காலங்களையும் படியவிட வேண்டும். பிறகு ...’*

*‘இல்லை, வேண்டாம். முழுமையான புவியில் நடப்பது போலிருக்காது.’*

*‘இருக்காது. நீ சொல்வது சரிதான்,’ என்று சொல்லி வளியுந்தை திருப்பி மனத்தை மரத்துப்போகச்செய்யும் அந்தச்சுவரை நோக்கி விரையச்செய்தார்.*

## *அத்தியாயம் 27*

*ஒரு பொதுநூலகத்தில் குண்டுவெடித்ததுபோல் வேதடியாபயனது நூலகமும் அலங்கோலமாகக்கிடந்தது. அவர்கள் உள்ளே நுழைந்தபோதே முதியவர் முகத்தைச்சுளித்தார்.*

*'ஒரு விபத்து நிகழ்ந்துவிட்டது. உயிர்க்காப்புக்கணினிகளில் ஓர் இருமின்வாய் வெடித்துவிட்டது. எங்கள் துப்புறவு வேலையாட்களை எழுப்ப முயன்றபோது அவர்கள் முப்பதாயிரம் ஆண்டுகளுக்குமுன் இறந்துவிட்டதாக தெரியவந்தது. இப்போது அந்த உடல்களை யார் எடுப்பது என்றுதான் எனக்குத்தெரியவில்லை. அங்கே உட்கார். உன்னை பொருத்துகிறேன்.'*

*அவர் ஆரதனை ஒரு கூறையலியின் விலாக்கூடால் ஆனதுபோலிருந்த ஒரு நாற்காலிக்கு சுட்டினார்.*

*'அது ஒரு கூறையலியின் விலாக்கூடால் ஆனது' என்று விளக்கிய முதியவர் சரிந்துவிழும் காகிதக்குவியல்களுக்கும் வரைகருவிகளுக்கும் அடியிலிருந்து சில மின்கம்பிகளை தேடியெடுத்தார். 'இந்தா, இதைப்பிடி,' என்று இரண்டு மின்கம்பி முனைகளை ஆரதனிடம் கொடுத்தார்.*

*அவன் அவற்றை பிடித்த அதே கணத்தில் ஒரு பறவை நேராக அவனூடே பறந்துசென்றது.*

*அவன் தனக்கே முற்றிலும் கண்தோன்றாதவனாய் வெளியில் மிதந்து தொங்கினான். அவனுக்கடியில் ஓர் அழகிய நகரத்தின் மரங்கள்சூழ்ந்த ஒரு புல்வெளி தெரிந்தது. அதைச்சுற்றிலும் கண்ணுக்கெட்டிய தொலைவுவரை பல அகலமான வெண்மைத்திண்காரைக்கட்டிடங்கள் காற்றுப்போக்கான வடிவமைப்புடன் காணப்பட்டன. அவை காலத்தால் தேய்ந்தும் கீறலிட்டும் மழைக்கறை படிந்தும் இருந்தன. ஆனால் அன்று கதிரவன் ஒளிர்ந்து கொண்டிருந்தது. மரங்களிடையே ஒரு புதுத்தென்றல் புகுந்து நடனமாடியது. அந்த கட்டிடங்களெல்லாம் அமைதியாக உம்மொலித்துக்கொண்டிருந்ததாக தோன்றியதன் காரணம் புல்வெளியிலும் அதைச்சுற்றிலுமுள்ள தெருக்களிலும் உள்ள மக்கள் கூட்டத்தின் மகிழ்ச்சி ஆரவரமாக இருக்கலாம். எங்கோ ஓர் இசைக்குழு முழங்கிக்கொண்டிருந்தது. பலவண்ண கொடிகள் காற்றில் படபடத்தன. எங்கும் ஒரு திருவிழாக்கோலமாக இருந்தது.*

*ஆரதன் மட்டும் அவற்றுக்கெல்லாம் மேலே காற்றில் மாட்டிக்கொண்டு தனக்கென்று ஓர் உடல் இல்லாமல் தனிமையாக உணர்ந்தான். ஆனால் அதை எண்ணி கவலைப்படத்தொடங்குமுன் புல்வெளிச்சதுக்கத்திலிருந்து ஒரு குரல் ஒலிக்கத்தொடங்கி அனைவரும் கவனம் செலுத்துமாறு வேண்டியது.*

*சதுக்கத்தில் முக்கியமானதாக தெளிவாகத்தெரிந்த ஒரு கட்டிடத்தின் முன் நன்கு அலங்கரிக்கப்பட்ட மேடையில் ஒருவர் நின்று கூட்டத்தை நோக்கி அருணாவில் பேசினார்.*

*'ஆழ்ந்த சிந்தனையின் நிழலில் காத்திருக்கும் மக்களே!' என்று உரக்க அழைத்தார். 'அண்டம் அறிந்தவர்களுள் மிகவும் ஆர்வமான உண்மையான மாபெரும் பண்டிதர்களாகிய வூம்பவளன் தொடையழகன் ஆகியோரின் வழித்தோன்றல்களே... நாம் காத்திருந்த நேரம் வந்துவிட்டது.'*

*கூட்டத்தில் ஆரவாரமான கைதட்டல்கள் எழுந்தன. கொடிகளும் பொலிவன்களும் ஊதொலிகளும் காற்றில் பறந்தன. குறுகலான தெருக்களில் நூறுகாலிகள் முதுகு தரையில் படும்படி புரண்டுபடுத்து தங்கள் கால்களை காற்றில் ஆட்டுவது போலிருந்தது.*

*'பதில் நாள்!' என்று அந்த உற்சாக முன்னடத்தி கூவினார். பரவசமான அந்த கூட்டத்திலிருந்து மகிழொலிகள் வெடித்துச்சிதறின.*

*'இந்த மாபெரும் அறிவூட்ட நாளுக்காக நம் இனம் ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகள் காத்திருந்திருக்கிறது,' என்று சொல்லி மீண்டும் மகிழொலிக்காக இடைநிறுத்தினார்.*

*'ஒருநாளும்... இனி ஒருநாளும்... காலையில் எழுந்திருக்கும்போது, நான் யார்? என் வாழ்வின் நோக்கம் என்ன? நான் இன்று எழுந்து வேலைக்குப்போகாவிட்டால் அண்டத்தில் என்ன இழப்பு ஏற்படும்? என்றெல்லாம் எண்ணவேண்டிய அவசியம் இருக்காது. ஏனென்றால், வாழ்க்கை, அண்டம், எல்லாமே*

*பற்றிய நச்சரிக்கும் சிறு கேள்விகளுக்கு இன்று நாம் இறுதியாக ஒட்டுமொத்தமாக பதிலை பெறப்போகிறோம்.'*

*கூட்டம் மீண்டும் வெடித்தபோது பேச்சாளர் நின்று கூட்டத்தை நோக்கி பேசிக்கொண்டிருந்த மேடைக்குப்பின் இருந்த கட்டிடத்தின் தரைமட்டத்தில் உள்ள ஒரு பெரிய சாளரத்தை நோக்கி தான் காற்றில் மிதந்துசெல்வதை ஆரதன் உணர்ந்தான்.*

*ஆரதன் நேராக சாளரத்தை நோக்கி விரைவதைக்கண்டு ஒரு கணம் பயந்தான். ஆனால் அடுத்த கணம் அவன் சாளரத்தின் தடித்த கண்ணாடியை தொடாமலே அதைக்கடந்து அந்த அறைக்குள் சென்றுவிட்டதால் அந்த பயம் உடனே மறைந்தது.*

*அந்த அறையிலுள்ள யாரும் அவனுடைய விந்தையான வருகையைப்பற்றி ஏதும் சொல்லாததில் வியப்பொன்றுமில்லை; ஏனென்றால் அவன் உண்மையில் அங்கில்லை. அந்த முழு அனுபவமும் ஆறுதட எழுபதுமில்லிமீட்டரில் பதிவுசெய்யப்பட்டதன் வீழ்ப்பு என்பது அவனுக்கு புரியத்தொடங்கியது.*

*அந்த அறை பெரும்பாலும் வேதடியாபயன் விவரித்தபடியே இருந்தது. ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகளாக அது நன்கு பராமரிக்கப்பட்டு வந்திருக்கிறது. ஓரிரு நூற்றாண்டுகளுக்கொருமுறை சுத்தம் செய்யப்பட்டிருக்க வேண்டும். உயர்தர உலோகத்தாலான பணிமேசை விளிம்புகளில் தேய்ந்திருந்தது. தரைக்கம்பளம் நிறம் மங்கியிருந்தது. ஆனால் பெரிய கணினிகாண்திரை நேற்றுதான் கட்டப்பட்டது போன்ற ஒளிர்வுடன் கம்பீரமாக பட்டுத்துணியில் வீற்றிருந்தது.*

*கச்சிதமாக உடையணிந்த இரண்டு பேர் திரையின் முன் பயபக்தியுடன் அமர்ந்து காத்திருந்தனர்.*

*'நேரம் நெருங்கிவிட்டது,' என்றான் அவர்களுள் ஒருவன். அவன் கழுத்தினருகில் ஆரதன் வியக்கும்படி காற்றில் ஒரு சொல் தோன்றியது. அந்தச்சொல் புறாக்குருவி என்பதாகும். அது இரண்டு முறை மினுங்கி பின் மறைந்துவிட்டது. ஆரதன் இதையெல்லாம் உட்கவர்வதற்குள் அடுத்தவன் பேசத்தொடங்கினான். அவன் கழுத்தருகில் ப்ய்ச்க்ங் என்ற சொல் தோன்றியது.*

*'எழுபத்தைந்து தலைமுறைகளுக்கு முன் நம் முன்னோர்கள் இந்த நிரலை துவக்கிவைத்தனர்,' என்றான் இரண்டாம் மனிதன், 'அவ்வளவு காலத்துக்குப்பின் நாம்தான் இந்த கணினி பேசுவதை கேட்கப்போகிறோம்.'*

*'அருமையான வாய்ப்பு, ப்ய்ச்க்ங்,' என்று ஒப்புக்கொண்டான் முதல் மனிதன். ஆரதன் தான் ஒரு துணையுரை கொண்ட பதிவைப் பார்த்துக் கொண்டிருப்பதைத் திடீரென்று புரிந்துகொண்டான்.*

*'அந்த முக்கியமான பதிலை நாம்தான் முதலில் கேட்கப் போகிறோம்,' என்றான் ப்ய்ச்க்ங்[8].*

*வாழ்க்கை...!' என்றான்.*

*'அண்டம்...!' என்றான் புறாக்குருவி.*

*'எல்லாமே...!'*

*'சூ,' என்ற புறாக்குருவி ஒரு சிறு உடலசைவுடன், 'ஆழ்ந்த சிந்தனை பேசுவதற்கு ஆயத்தமாகிறது என்று நினைக்கிறேன்,' என்றான்.*

*ஓர் எதிர்பார்ப்பு இடைநிற்றலுக்குப்பின் காண்திரையின் முன்னிருந்த பலகங்கள் மெதுவாக ஒளிரத்தொடங்கின. பல விளக்குகள் உளதுமிலதுமாக சிலமுறை மாறியபின் ஒரு பாங்கில் நிலைத்தன. தகவற்றொடர்புக்கால்வாய்வழியாக ஓர் இம்மொலி கேட்டது.*

*'காலை வணக்கம்,' என்றது ஆழ்ந்த சிந்தனை இறுதியில்.*

*'ம்... காலை வணக்கம், ஓ, ஆழ்ந்த சிந்தனையே,' என்றான் புறாக்குருவி பதற்றத்துடன். 'நீ... அதாவது...'*

---

*8மொ. கு: நான் என்ன செய்யட்டும்! இவையெல்லாம் வேற்றுலகப் பெயர்கள். நீங்கள் வேண்டுமானால் உச்சரிக்கவியலாப் பெயருடைய தத்துவமேதை என்று ப்ய்ச்க்ங்கை அழைக்கலாம்.*

*'பதில் தரப் போகிறேனா என்று கேட்கிறாயா?' என்று ஆழ்ந்த சிந்தனை பரிவுடன் எடுத்துக்கொடுத்தது. 'ஆம், என்னிடம் பதில் இருக்கிறது.'*

*இரண்டு பேரும் எதிர்பார்ப்பினால் நடுங்கினர். அவர்கள் காந்திருந்தது வீண்போகவில்லை.*

*'உண்மையில் பதில் இருக்கிறதா?' என்று ப்ய்ச்க்ங் கேட்டான்.*

*'உண்மையில் பதில் இருக்கிறது,' என்று ஆழ்ந்தசிந்தனை உறுதியளித்தது.*

*'எல்லாவற்றுக்கும்? வாழ்க்கை, அண்டம், எல்லாம் பற்றிய பெருங்கேள்விக்கு?'*

*'ஆம்.'*

*இரண்டு பேரும் அந்தக்கணத்துக்காக பயிற்சிபெற்றிருந்தனர். அவர்கள் வாழ்வே இதற்குரிய ஆயத்தமாதல்தான். அவர்கள் பிறந்தபோதே பதிலை கேட்கக்கூடியவர்களாக தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். இருப்பினும் அவர்கள் வியப்புமூச்சு விடுவதும் படபடப்பான குழந்தைகள் போல் நெளிவதுமாக இருந்தனர்.*

*'அதை எங்களுக்கு சொல்லப்போகிறாயா?' என்றான் புறாக்குருவி.*

*'ஆம்.'*

*'இப்போதே?'*

*'இப்போதே!'*

*இருவரும் தங்கள் உலர்ந்த உதடுகளை நக்கிக்கொண்டனர்.*

*'ஆனால் அந்த பதில் உங்களுக்கு பிடிக்காது என்று நினைக்கிறேன்.' என்றது ஆழ்ந்த சிந்தனை.*

*'பரவாயில்லை... எங்களுக்கு தெரியவேண்டும்,... இப்போதே!'*

*'இப்போதே?*

*'ஆம். இப்போதே...!'*

*'சரி,' என்ற கணினி அமைதியில் ஆழ்ந்தது. இரண்டு மனிதர்களும் கைகால் உதற காத்திருந்தனர். அந்த தவிநிலையை அவர்களால் தாங்க இயலவில்லை.*

*'உண்மையில் அது உங்களுக்குப் பிடிக்கவே பிடிக்காது,' என்றது ஆழ்ந்த சிந்தனை.*

*'சொல்!'*

*'சரி,' என்றது ஆழ்ந்த சிந்தனை. 'வாழ்க்கை...'*

*'ம்...'*

*'அண்டம், எல்லாமே...'*

*'ம்...!'*

*'பற்றிய பெருங்கேள்வியின் பதில் ...'*

*'ம், ம்... சொல்!'*

*'நாற்பத்திரண்டு,' என்றது ஆழ்ந்த சிந்தனை, ஒரு முடிவிலா கம்பீரத்துடனும் அமைதியுடனும்.*

# அத்தியாயம் 28

வெகுநேரம் யாரும் பேசவில்லை.

வெளியே உள்ள சதுக்கத்தில் தவிப்புடன் எதிர்பார்த்திருந்த மக்கட்கடலின் முகங்கள் ப்ய்ச்க்ங்யின் ஓரக்கண் பார்வையில் தெரிந்தன.

‘நாம் கல்லடி படப்போகிறோம், இல்லையா?’ என்று கிசுகிசுத்தான்.

‘இது ஒரு கடினமான கணக்கு,’ என்றது ஆழ்ந்த சிந்தனை மெதுவாக.

‘நாற்பத்திரண்டு!’ என்று இரைந்தான் புறாக்குருவி. ‘ஏழறை இருமடியாயிரம் ஆண்டுகளாக வேலை செய்து இதைத்தான் எங்களுக்கு சொல்கிறாயா?’

‘நான் நன்றாகச்சரிபார்த்துவிட்டேன். நிச்சயமாக இதுதான் விடை. நான் என்ன நினைக்கிறேன் என்றால், உங்களுக்கு எப்போதுமே கேள்வி சரியாகத்தெரியவில்லை. அதுதான் சிக்கல்.’

‘ஆனால், அதுதான் பெருங்கேள்வி! வாழ்க்கை, அண்டம், எல்லாமே பற்றிய இறுதிக் கேள்வி!’ என்று கதறினான் புறாக்குருவி.

‘ஆம்,’ என்றது ஆழ்ந்த சிந்தனை, முட்டாளாவதில் தனக்கு வெட்கமில்லை என்ற மனநிலையுடன், ‘ஆனால் அது என்ன கேள்வி?’

முதலில் கணினியைப்பார்த்து முறைத்த இருவரும் ஒரு மடத்தனமான அமைதியுடன் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

‘என்ன, இது தெரியாதா? அது... அது எல்லாமே... எல்லாமேதான்’ என்றான் ப்ய்ச்க்ங் வலுவில்லாமல்.

‘பார்த்தாயா?’ என்றது ஆழ்ந்த சிந்தனை. ‘உனக்கு கேள்வி என்னவென்று புரிந்ததும் பதிலின் பொருளை நீ தெளிவாகப்புரிந்துகொள்வாய்.’

‘ஓ, அற்புதம்,’ என்று முணுமுணுத்த ப்ய்ச்க்ங் தன் குறிப்பேட்டை வீசியெறிந்து ஒரு சிறு கண்ணீர்த்துளியை துடைத்துக்கொண்டான்.

‘சரி, சரி. இதோ பார், அந்தக்கேள்வி என்னவென்றாவது சொல்லேன்!’ என்றான் புறாக்குருவி.

‘இறுதிக்கேள்வி?’

‘ஆம்!’

‘வாழ்க்கை, அண்டம், எல்லாமே பற்றியது?’

‘ஆம்!’

ஆழ்ந்த சிந்தனை ஒரு கணம் சிந்தித்தது.

‘கடினம்தான்,’ என்றது.

‘ஆனால் உனக்குத்தெரியுமல்லவா?’ என்று ஆர்வமாகக் கேட்டான் புறாக்குருவி.

ஆழ்ந்த சிந்தனை ஒரு நீண்ட சிந்தனையில் ஆழ்ந்தது.

இறுதியில், ‘தெரியாது,’ என்றது.

இரு மனிதர்களும் துயரத்துடன் தங்கள் நாற்காலிகளில் நொறுங்கி விழுந்தனர்.

‘ஆனால் யாரால் இதை சொல்லவியலும் என்று சொல்கிறேன்,’ என்றது ஆழ்ந்த சிந்தனை.

*இருவரும் நிமிர்ந்து அமர்ந்தனர்.*

*'யார்? சொல்!'*

*திடீரென்று ஆரதன் தன் இல்லாத தலை மெதுவாக ஆனால் தவிர்க்கவியலாத வகையில் நகர்ந்து கணினித்திரையின் அருகில் செல்வதை உணர்ந்தான். அந்தக்காட்சியை பதிவுசெய்தவரின் நாடகவிளைவான பெரிதாக்கல்தான் அது என்று உடனே புரிந்துகொண்டான்.*

*'நான் சொல்வது எனக்குப்பிறகு வரப்போகும் கணினியைப்பற்றி.' அதன் குரல் வழக்கமான அறிவிப்புப்பாங்கை அடைந்திருந்தது. 'அந்தக்கணினியின் செயலாக்க அளவுருக்களை கருதவும் நான் தகுதியற்றது, ஆனால் அவ்வாறான கணினியை வடிவமைக்க கடமைப்பட்டதாகிறேன். அது இறுதிப்பதிலின் கேள்வியை கணக்கிடவல்ல கணினி. முடிவிலா நுணுக்கமான உட்சிக்கலுடைய அதன் செயற்பாட்டுத்தளவணியில் கரிம உயிரே பங்குபெறும். நீங்களே புது வடிவங்கள் எடுத்து அந்தக்கணினியினுள் சென்று அதன் பத்து இருமடியாயிர ஆண்டு நிரலை வழிகாண்பீர்கள். ஆம்! அவ்வாறான கணினியை நான் வடிவமைப்பேன். நான் அதற்கு பெயருமிடுகிறேன். அதன் பெயர் ... புவி!'*

*ப்ய்ச்க்ங் வாய்பிளந்து ஆழ்ந்த சிந்தனையை பார்த்தான்.*

*'என்ன மழுங்கலான பெயர்,' என்றான். அவன் உடலின் முழு நீளத்துக்கும் ஒரு பிளவு ஏற்பட்டது. புறாக்குருவியும் திடீரென்று எங்கிருந்தோ வந்த வெட்டுக்களை பெற்றான். கணினிக்காண்திரையில் புள்ளிகளும் கீறல்களும் விழுந்தன. சுவர்கள் நடுங்கி நொறுங்கி மறைந்தன. அறை மேலேமோதி அதன்முகட்டில் மறைந்தது...*

*வேதடியாபயன் கையில் கம்பிகளுடன் ஆரதனின் முன் நின்றிருந்தார்.*

*'நாடாவின் முடிவு,' என்று விளக்கினார்.*

# *அத்தியாயம் 29*

*‘பீபூ! எழுந்திரு!’*

*‘ம்... எ... வீ...’*

*‘ஏய், எழுந்திரு.’*

*‘எனக்குத்தெரிந்ததைச்செய்கிறேன், உனக்கென்ன?’ என்று சொல்லி பீபிள்பிராசன் திரும்பிப்படுத்துக்கொண்டான்.*

*‘ஓர் உதை விடட்டுமா?’ என்றான் டாட்டா.*

*‘அதில் உனக்கு மகிழ்ச்சியா?’ என்றான் பீபிள்பிராசன் குழறி.*

*‘இல்லை.’*

*‘எனக்கும் இல்லை. அப்படியானால் அதைச்செய்வதால் என்ன பயன்? என்னை தொந்தரவு செய்யாதே.’ பீபிள்பிராசன் மீண்டும் சுருண்டுகொண்டான்.*

*‘அவன் இரண்டு எடுப்பளவு வளிமம் பெற்றிருக்கிறான். இரண்டு மூச்சுக்குழல்கள் அல்லவா?’ என்றாள் திலக்கோமை.*

*‘பேசுவதை நிறுத்துங்கள். ஏற்கெனவே தூங்குவது கடினமாக இருக்கிறது. ஆனால் இந்த தரை என்ன இவ்வளவு கடினமாகவும் குளிராகவும் இருக்கிறதே.’*

*‘அது தங்கம்.’*

*அனைவரும் வியக்கும்படி ஒரு துள்ளலுடன் பீபிள்பிராசன் எழுந்துநின்று அடிவானத்தை உற்றுநோக்கினான்; ஏனென்றால் அதுவரைதான் தங்கம் எல்லாத்திசைகளிலும் கச்சிதமான பளபளப்புடன் பரவியிருந்தது. அதன் ஒளிர்வு... ம்... அதற்கு உவமை கிடையாது; ஏனென்றால் அண்டத்தில் ஒரு சொக்கத்தங்கத்தாலான கோள்போன்ற வேறெதுவும் இல்லை.*

*‘இவ்வளவும் இங்கே யார் போட்டது?’ என்றான் பீபிள்பிராசன் அகன்றுவிரிந்த கண்களுடன்.*

*‘துள்ளாதே. இது வெறும் விவரப்பட்டியல்தான்,’ என்றான் டாட்டா.*

*‘விவ... யார்?’*

*‘விவரப்பட்டியல். ஒரு மாயத்தோற்றம்,’ என்றாள் திலக்கோமை.*

*‘எப்படித்தெரியும்?’ என்றான் பீபிள்பிராசன், தரையில் மண்டியிட்டு. தரையை தன் விரல் நகங்களால் கீறியும் குத்தியும் பார்த்தான். அது மிகத்திண்மையாகவும் அவன் நகக்கோடுகள் தோன்றும்படி மிகச்சற்றே மென்மையாகவும் இருந்தது. மிகமஞ்சளாகவும் மிகப்பளபளப்பாகவுமிருந்த அதில் அவன் ஊதியபோது சொக்கத்தங்கத்தில் ஊதிய மூச்சு எப்படி ஒரு தனித்தன்மையுடன் ஆவியாகுமோ அவ்வாறே ஆவியானது.*

*‘திலக்கோமையும் நானும் சற்று நேரத்துக்கு முன் எழுந்தோம். நாங்கள் கத்தியதைக்கேட்டு பதிலுக்கு யாரோ கத்திக்கொண்டேயிருந்தார்கள். பிறகு கத்தலில் அலுப்படைந்து, அவர்கள் நம்மை கையாள ஆயத்தமாகும்வரை இதை பார்த்துக்கொண்டிருக்கட்டும் என்று நம்மை அவர்கள் கோள் விவரப்பட்டியலில் போட்டுவிட்டனர். இதெல்லாம் உணர்வநாடா.’ என்று விளக்கினான் டாட்டா.*

*பீபிள்பிராசன் அவனை கசப்புடன் பார்த்தான்.*

*‘சே, என் இனிய கனவுகளிலிருந்து நீ என்னை எழுப்பியது வேறொருவர் கனவை காட்டத்தானா?’ என்று அலுப்புடன் அமர்ந்தான்.*

*‘அங்கிருக்கும் வரிசையான பள்ளத்தாக்குகள் என்ன?’ என்று பீபிள்பிராசன் கேட்டான்.*

*‘முத்திரை. நாங்கள் போய்ப்பார்த்தோம்.’ என்றான் டாட்டா.*

*‘நாங்கள் முன்பே உன்னை எழுப்பவில்லை. இதற்கு முந்திய கோளில் முழங்காலளவு மீன்கள் இருந்தன.’*

*‘மீன்களா?’*

*‘சிலருக்கு அது பிடித்திருக்கிறது.’*

*‘அதற்குமுன் பிளாட்டினக்கோள் வந்தது. அது அவ்வளவு நன்றாக இல்லை. ஆனால் இதைக்காண நீ விரும்புவாய் என்றுதான் எழுப்பினோம்.’*

*அவர்கள் பாரத்த இடமெல்லாம் ஒரே திண்ம ஒளிக்கடலாக தோன்றியது.*

*‘அழகாக இருக்கிறது,’ என்றான் பீபிள்பிராசன் எரிச்சலுடன்.*

*வானில் ஒரு பெரிய பச்சை நிற விவரப்பட்டியலெண் தோன்றியது. அது மினுங்கி மாறியது. அதேபோல் அவர்களைச்சுற்றியிருந்த நிலமும் திடீரென்று மாறியது.*

*எல்லாரும் ஒரே குரலால் பேசுவது போல், ‘அசிங்கம்,’ என்றனர்.*

*கடல் செவ்வூதாவாக இருந்தது. அவர்கள் நின்றிருந்த மணற்கரை சிறு மஞ்சள்நிறக்கற்களாலும் பச்சைநிறக்கற்களாலும் நிரம்பியிருந்தது. அவை விலைமிக்க பண்கற்களாக இருக்கவேண்டும். தொலைவில் சிவப்புக்குன்று முகடுகளையுடைய மலைகள் மென்மையாக அசைந்து ஆடிக்கொண்டு இருந்தன. அருகில் தூய வெள்ளியாலானதும் நீலச்செவ்வூதாநிற குடையும் குஞ்சான்களும் கொண்டதுமான ஒரு மணற்கரை மேசை இருந்தது.*

*வானத்தில் விவரப்பட்டியலெண் மறைந்து அது இருந்த இடத்தில் அப்போது ஒரு தூதுரை தோன்றியது: உங்கள் சுவை எதுவாயினும் மகரத்தியா அதைக் கொண்டளிக்கும். எங்களுக்கு கோடலில்லை.*

*ஐநூறு ஆடையில்லாப்பெண்கள் வானத்திலிருந்து வளிக்குடையுடன் வீழ்ந்தனர்.*

*ஒரு கணத்தில் அந்தக் காட்சி மறைந்து அவர்களை பசுக்கள்நிறைந்த ஒரு பசும்புல்வெளியில் விட்டது.*

*‘அம்மா! என் மூளைகள்!’ என்றான் பீபிள்பிராசன்.*

*‘என்ன? நீ விரும்பினால் மேலும் சொல்,’ என்றான் டாட்டா.*

*‘ஆம். சொல்கிறேன்,’ என்றான் பீபிள்பிராசன். மூவரும் தரையில் அமர்ந்து அவர்களைச்சுற்றி தோன்றிமறைந்த காட்சிகளை புறக்கணித்தனர்.*

*‘என் மனத்துக்கு என்ன நேர்ந்திருந்தாலும் அதை நான்தான் செய்திருக்கிறேன். அதையும் அரசு திரையிடல் சோதனைகளால் கண்டுபிடிக்க இயலாத வகையில் செய்திருக்கிறேன். அதைப்பற்றி நானே அறிய இயலாத வகையிலும் செய்திருக்கிறேன். பைத்தியக்காரத்தனமாக இருக்கிறது, இல்லையா?’ என்றான் பீபிள்பிராசன்.*

*மற்ற இருவரும் ஆமென்று தலையசைத்தனர்.*

*‘ஆகவே, எனக்கு தெரிந்திருக்கிறது என்ற உண்மையே விண்மீன்திரள் அரசுக்கும் எனக்கேயும் உட்பட யாருக்கும் தெரியக்கூடாத ஒரு கமுக்கச்செய்தி எனக்கு தெரிந்திருக்கிறது. அது என்ன என்று சிந்தித்தேன். அதன் பதில் எனக்குத் தெரியாது என்பதுதான். அது தெளிவு. ஆனால் நான் சிலவற்றை ஒன்றாகச்சேர்த்து ஊகிக்கத்தொடங்கலாம். அதிபருக்குப்போட்டியிட எப்போது முடிவு செய்தேன்? அதிபர் யூடான் விராக்கு மறைந்த புதிதில். உனக்கு யூடான் விராக்கு நினைவு இருக்கிறதல்லவா, டாட்டா?’*

*'ஆம். நாம் சிறுவர்களாயிருந்தபோது சந்தித்தோமே அந்த மனிதர். ஆர்க்கிரிய கலத்தலைவன். நல்ல மனிதர். நீ அவருடைய பெருஞ்சுமைக்கலத்துள் காவல்மீறிச்சென்றதற்குச சங்குகள் கொடுத்தார். உன்னைப்போன்ற துடுக்கான பையனை என்றும் கண்டதில்லை என்றார்.'*

*'என்ன இதெல்லாம்?'* என்று திலக்கோமை கேட்டாள்.

*'பழங்கால வரலாறு. ஆதிரையில் நாங்கள் சிறுவர்களாயிருந்த காலத்தியது,'* என்று விளக்கினான் டாட்டா. *'விண்மீன்திரள் மையத்துக்கும் வெளிவட்டாரங்களுக்கும் இடையேயுள்ள வணிகப்போக்குவரத்தில் ஆர்க்கிரியப்பெருஞ்சுமைக்கலங்கள்தாம் பெரும்பாலும் பொருள்சுமந்து சென்றன. ஆதிரையின் வணிக ஓடறிஞர்கள் தேவையிடங்களை கண்டுபிடிப்பதும் ஆர்க்கிரியர்கள் அங்கு பொருள் அளிப்பதுமாக இருந்துவந்தது. பிற்காலத்தில் உதர்தெல்லிப்போரின்போது அழிக்கப்பட்ட வெளிக்கொள்ளையருடைய தொல்லை அக்காலத்தில் அதிகமாயிருந்தது. ஆகையால் விண்மீன்திரள் அறிவியலறிந்த அதியற்புத காப்புக்கேடயங்கள் பெருஞ்சுமைக்கலங்களில் பொருத்தப்பட்டிருந்தன. அக்கலங்கள் கோள்களின் சுற்றுப்பாதைகளில் இருக்கும்போது கதிரவ இடைமறைப்பை ஏற்படுத்துமளவுக்கு மிகப்பெரியதும் மிகமுரடுமானவை.*

*'ஒருநான் இதோ இருக்கும் பீபூ என்ற சிறுவன் அவற்றுள் ஒன்றை திடீர்த்தாக்க முடிவுசெய்தான். படலக்கோள விளையாட்டுக்காக வடிவமைக்கப்பட்ட ஒரு மூவுமிழத்துள்ளுந்தில் ஒரு சிறுவன்! இது ஒரு பைத்தியக்குரங்கைவிட பைத்தியக்காரத்தனம்! இது நடவாத காரியம் என்று நான் பந்தயங்கட்டியிருந்தேன். அவன் ஏமாற்றக்கூடாதென்பதற்காக நானும் அவனுடன் சென்றேன். ஐயோ, என்ன நடந்தது, தெரியுமா? அவன் ஏதோ பல முன்னேற்றங்கள் செய்திருந்த அவனுடைய மூவுமிழத்துள்ளுந்தில் நாங்கள் ஏறி சிலவாரங்களிலே மூன்றுநோமநொடிகளைக்கடந்து, எப்படியென்று எனக்கு இன்னும் விளங்காத முறையில் ஒரு பெருஞ்சுமைக்கலத்துள் திடீரென்று வீழ்ந்தோம். விளையாட்டுஎய்விகளை வீசிக்கொண்டு கலப்பாலத்துக்குச்சென்று சங்குகள் கேட்டோம். இதைவிட முரட்டுத்தனமான ஒன்றை நான் என்றும் கண்டதில்லை. எனக்கு ஓராண்டு செலவுப்படி இழப்பு. எல்லாம் எதற்காக? சங்குகளுக்காக.'* என்று முடித்தான் டாட்டா.

*'கலத்தலைவன்தான் இந்த வெகுவிந்தையான மனிதர் யூடான் விராக்கு,'* என்றான் பீபிள்பிராசன், *'அவர் எங்களுக்கு உணவும் போதைக்குடிகளும் அளித்தார். ஏராளமான சங்குகளுடன் விண்மீன்திரளின் பல பாகங்களில் கிடைக்கும் வேறுபல விந்தைப்பொருட்களும் அளித்தார். நாங்கள் அங்கு இருந்தபோது மிகவும் உல்லாசமாக இருந்தோம். பிறகு அவர் எங்களை விடையனுப்பி தொலைகடத்தியபோது ஆதிரையின் கடுங்காவல் சிறைக்கு நேராக வந்து சேர்ந்தோம். நல்ல மனிதர். பிற்காலத்தில் அவர் விண்மீன்திரளின் அதிபரானார்.'*

பீபிள்பிராசன் இடைநின்றான்.

அவர்களை சூழந்த காட்சி அப்போது மனச்சோர்வூட்டும் இருள்கவிந்ததாக இருந்தது. அடர்ந்த பனிமூட்டம் அவர்களைச்சுற்றி சுழன்றது. யானைபோன்ற உருவங்கள் தெளிவில்லா நிழல்களாக மறைந்திருந்தன. மாய உருவங்கள் வேறு மாய உருவங்களை கொலைசெய்வது போன்ற ஒலிகள் காற்றில் நிறைந்திருந்தன. பணம் கொடுத்து வாங்கும் அளவுக்கு சிலர் அதை விரும்பினர் போலும். அதனால்தான் அதுவும் விவரப்பட்டியலில் இருந்தது.

*'டாட்டா,'* என்றான் பீபிள்பிராசன் அமைதியாக.

*'சொல்!'*

*'யூடான் இறப்பதற்கு முன் என்னைப்பார்க்க வந்திருந்தார்.'*

*'அப்படியா? இதை நீ என்னிடம் சொல்லவே இல்லை.'*

*'இல்லை.'*

*'என்ன சொன்னார்? எதற்காக உன்னை பார்க்கவந்தார்?'*

*‘அவர் தங்க இதயத்தைப்பற்றி எனக்கு சொன்னார். நான் அதை திருடவேண்டும் என்பது அவருடைய யோசனைதான்.’*

*‘அவருடைய யோசனையா?’*

*‘அதைத்திருட ஒரே சாத்தியம் அதன் துவக்க விழாவில் இருப்பதுதான்.’*

*டாட்டா வாய்பிளந்து ஒருகணம் அவனை பார்த்தான். பிறகு விழுந்து விழுந்து சிரித்தான்.*

*‘என்ன இது? நீ விண்மீன்திரளின் அதிபராக வேண்டுமென்று குறியாக இருந்ததெல்லாம் இந்தக்கலத்தைத்திருடுவதற்குத்தான் என்றா சொல்கிறாய்?’*

*‘அப்படித்தான்,’ என்றான் பீபிள்பிராசன். அப்போது அவன் முகத்திலிருந்த புன்னகை வேறு யாராவதாயிருந்தால் அவரை பைத்தியக்காரர்மனைக்கு அனுப்பக்கூடியதாக இருந்தது.*

*‘ஏன்? அதில் என்ன அவ்வளவு முக்கியத்துவம்?’*

*‘தெரியவில்லை. அது வெளிமனத்தளவில் எனக்கு தெரிந்திருந்தால் மூளைத்திரையிடல் சோதனைகளில் வெளிப்பட்டிருக்கும்; நான் தேறியிருக்க மாட்டேன். யூடான் சொன்னவற்றில் பல என் மூளையில் பூட்டப்பட்டுக்கிடக்கின்றன என்று நினைக்கிறேன்.’*

*‘யூடான் பேசியதால் நீயே உன் மூளைக்குள் சென்று குழப்பியிருப்பதாக நினைக்கிறாயா?’*

*‘அவர் பேச்சால் எதையும் சாதிக்க வல்லவர்.’*

*‘ஆம். ஆனால், பீபூக்கண்ணா, உன் உடல்நலத்தை நீ பேணவேண்டும்.’*

*பீபிள்பிராசன் கையை விரித்தான்.*

*‘இதன் காரணமெல்லாம் உனக்கு இம்மியும் தெரியவில்லையா?’*

*பீபிள்பிராசன் இதைப்பற்றி கொஞ்சம் கடினமாகவே சிந்தித்தான். அவன் முகத்தில் ஐயங்கள் தோன்றத்தொடங்கின.*

*‘இல்லை,’ என்றான் இறுதியில். மேலும் சற்றுச்சிந்தித்து, ‘நான் என் கமுக்கங்களை என்னிடமே சொல்வதில்லை. அதுவும் சரிதானே! நான் ஓர் எலியைத்துப்பும் தொலைவுக்குக்கூட நான் என்னை நம்பமாட்டேன்.’*

*அவர்கள் அப்போது கண்ணாடி மேசைகளும் பல வடிவமைப்புப்பரிசுகளும் அடங்கிய ஒரு காத்திருக்கும் அறையில் அமர்ந்திருந்தனர்.*

*ஓர் உயரமான மகரத்திய மனிதன் அவர்கள் முன்னால் நின்றிருந்தான். ‘சுண்டெலிகளைக்காண நீங்கள் உள்ளே வரலாம்,’ என்றான்.*

## *அத்தியாயம் 30*

*'இப்போது புரிகிறதா?' என்றார் வேதடியாபயன். தன் நூலகத்திலுள்ள பயங்கர அலங்கோலத்தை சிறிதளவாவது சீராக்கலாம் என்ற ஒரு வலுவற்ற மேலோட்டமான முயற்சியுடன் ஒரு குவியலின் உச்சியிலிருந்த ஒரு தாளை கையிலெடுத்து அதை வேறெங்கு வைப்பது என்று சிந்தித்து தோல்வியடைந்து மீண்டும் அதே குவியலில் வைத்தார். அந்தக் குவியல் உடனே சரிந்து விழுந்தது. 'ஆழ்ந்த சிந்தனை புவியை வடிவமைத்தது, நாங்கள் கட்டுமானம் செய்தோம், நீங்கள் குடியிருந்தீர்கள்,' என்றார்.*

*'பிறகு நிரல் முடிவதற்கு ஐந்து நிமிடங்கள் முன்பு வோகன்கள் வந்து அதை இடித்துவிட்டனர்,' என்றான் ஆரதன். அவன் குரலில் ஒரு கசப்பு தோன்றாமலில்லை. 'ஆம்,' என்ற முதியவர் இடைநின்று அறை முழுவதும் ஒரு பார்வையிட்டார். 'பத்து இருமடியாயிரம் ஆண்டுகள் திட்டமும் வேலையும் ஒரு நொடியில் போய்விட்டன. பத்து இருமடியாயிரம் ஆண்டுகள், புவிமனிதா... அது போன்ற காலக்கட்டத்தை உன்னால் எண்ணிப் பார்க்க இயலுமா? ஒரு விண்மீன்திரள் கலாச்சாரம் ஒற்றைப்புழுவிலிருந்து வளர்வது அந்த காலக்கட்டத்தில் ஐந்து முறை நிகழலாம். போயிற்று, எல்லாம் போயிற்று. ம்... அதுதான் நடத்துறவு.'*

*'இப்போது புரிகிறது,' என்றான் ஆரதன் சிந்தனையுடன், 'என் வாழ்க்கை முழுவதும் ஒரு புதிரான எண்ணம் எனக்கு இருந்தது. உலகத்தில் ஏதோ நடக்கிறது; ஏதோ பெரியதாக மறைமுகமாக நடக்கிறது. ஆனால் அது என்னவென்று யாரும் எனக்கு சொல்லவில்லை என்றுணர்ந்தேன்.'*

*'இல்லை. அது முற்றிலும் இயல்பான ஐயச்சம். அது அண்டத்தில் எல்லாருக்கும் இருப்பதுதான்,' என்றார் முதியவர்.*

*'எல்லாருக்குமா? ம்... எல்லாருக்கும் இருந்தால் ஒருவேளை அதற்கு ஏதோ ஒரு பொருள் இருக்கலாம்! ஒருவேளை நமக்குத்தெரிந்த அண்டத்தின் வெளியே இருந்து யாராவது...'*

*'இருக்கலாம். அதனால் நமக்கென்ன?' என்றார் வேதடியாபயன், ஆரதன் அதிகம் கிளர்ச்சியடையுமுன்பு. 'ஒருவேளை இது எனக்கு வயதாகி விட்டதாலிருக்கலாம். ஆனால் உண்மையில் என்ன நடக்கிறது என்பதைக்கண்டுபிடிக்கும் வாய்ப்பு இருந்தால் அது மிகமிகக்குறைவாக இருக்கவேண்டும். நாம் செய்யவேண்டியதெல்லாம் அது போன்ற கேள்விகளை மறந்து நம் வேலையைப்பார்த்துக்கொண்டு போவதுதான். என்னை எடுத்துக்கொள்வோம். நான் கடற்கரைகளை வடிவமைக்கிறேன். நார்வேக்காக எனக்கு பரிசு கிடைத்தது.'*

*அவர் ஒரு குப்பைக்குவியலை கிளரி ஒரு பெரிய ஊடுநெகிழ்மக்கட்டியை எடுத்தார். அதில் அவர் பெயரும் நார்வேயின் ஒப்புருவும் கடையப்பட்டிருந்தன.*

*'இதற்கெல்லாம் என்ன பொருள்? எனக்குத்தெரிந்தவரை ஒன்றுமில்லை. நான் என் வாழ்நாள் முழுவதும் கூர்குடாக்கள் செய்துவருகிறேன். ஒரு சிறு காலக்கட்டத்தில் அது ஒயிலாகும்போது நான் ஒரு பெரும் பரிசு பெறுகிறேன்.'*

*அவர் அதை தன் கையில் திருப்பிப்பார்த்து கவனக்குறைவாக ஒரு பக்கமாக வீசியெறிந்தார். ஆனாலும் ஒரு மென்மையான இடத்தில் விழும்படித்தான் வீசினார்.*

*'நாங்கள் இப்போது கட்டும் இந்த புதுப்புவிக்கு என்னை ஆப்பிரிக்கா செய்யச்சொல்லியிருக்கிறார்கள். நான் மீண்டும் கூர்குடாக்களுடன் செய்துவருகிறேன். ஏனென்றால் அது எனக்கு மிகவும் பிடித்தமானது. நான் கொஞ்சம் பழங்காலத்தவன். கண்டங்களுக்கெல்லாம் அலங்கார விளிம்புகள் இருக்கவேண்டும் என்பது என் கருத்து. ஆனால் அதில் சீரொருமை இல்லை என்கிறார்கள். சீரொருமை!' என்று சொல்லி ஒரு வெற்றுச்சிரிப்பு சிரித்தார். 'அறிவியல் பல சாதனைகளை செய்திருக்கிறது. ஆனால் சரியாயிருப்பதைவிட மகிழ்ச்சியாயிருப்பதையே நான் விரும்புகிறேன்.'*

*'நீங்கள் மகிழ்ச்சியாயிருக்கிறீர்களா?'*

*'இல்லையே. அங்குதானே சிக்கல்.'*

*'பாவம். மற்றபடி ஒரு நல்ல வாழ்க்கைமுறையாக தோன்றுகிறது.'*

*சுவரில் எங்கோ ஓரிடத்தில் ஒரு வெள்ளை ஒளி மினுங்கியது.*

*‘வா. நீ சுண்டெலிகளை சந்திக்கவேண்டிய நேரம் வந்துவிட்டது. நீ இந்தக்கோளுக்கு வந்ததால் அதிகக்கிளர்ச்சி எற்பட்டுள்ளது. அண்டத்தின் வரலாற்றிலே அது மூன்றாவது நிகழ்தகவின்மை நிகழ்ச்சியாக ஏற்கெனவே சொல்லப்படுகிறது.’*

*‘முதலிரண்டு என்னென்ன?’*

*‘ஓ, அவை தற்செயலாக இருக்கக்கூடும்,’ என்று வேதடியாபயன் அதிகக்கவனம் செலுத்தாமல் சொன்னார். கதவைத்திறந்து ஆரதன் பின்தொடர்வதற்காக நின்றார்.*

*ஆரதன் தன்னைச்சுற்றி மற்றொருமுறை பார்த்தான்; பிறகு குனிந்து தன்னையும் பார்த்து வியாழக்கிழமை காலை சேற்றில் புரண்ட அதே ஆடையுடன் தான் இருப்பதை உணர்ந்தான்.*

*‘என் வாழ்க்கைமுறை எனக்கு மனநிறைவுதருவதாக இல்லை.’ என்று முணுமுணுத்தான்.*

*‘மன்னிக்கவும். என்ன சொன்னாய்?’ என்றார் முதியவர் மெதுவாக.*

*‘ஒன்றுமில்லை. சும்மா விளையாட்டுக்குச்சொன்னேன்,’ என்றான் ஆரதன்.*

## *அத்தியாயம் 31*

*கவனமற்ற பேச்சு உயிருக்கு ஆபத்தாகலாம் என்பது அனைவரும் அறிந்ததே; ஆயினும் இந்தச்சிக்கலின் முழு அளவு எப்போதும் தெளிவாவதில்லை.*

*எடுத்துக்காட்டாக, ஆரதன் 'என் வாழ்க்கை முறை எனக்கு மனநிறைவுதருவதாக இல்லை' என்று சொன்ன அதே கணத்தில் வெளிநேரத்தொடர்மைத்துணியில் தற்செயலாக ஒரு புழுத்துளை திறந்து அவன் சொற்களை மிகமிகக்கடந்த காலத்தில் முடிவிலி போன்ற ஒரு தொலைவில் உள்ள ஒரு விண்மீன்திரளுக்கு எடுத்துச்சென்றது. அங்கு விந்தையானதும் போர்வீரர்களைப்போன்றதுமான உயிரினங்கள் ஒரு பயங்கரமான விண்மீனிடைப்போரின் தொடக்கவிளிம்பில் இருந்தனர்.*

*இரண்டு எதிர்த்தரப்புத்தலைவர்களும் இறுதி முறையாக சந்தித்துப் பேசிக்கொண்டிருந்தனர்.*

*பேச்சுவார்த்தை மேசையின் ஒரு பக்கம் நகைகள் பதித்த தன் கருப்புப்போர்ச்சட்டையணிந்து வில்கரகர்களின் படைத்தலைவர் அமர்ந்திருந்தார். அவருக்கெதிரே, ஓர் இனிய மணமுள்ள பச்சைமேகம் சூழ குகுக்குந்தர்களின் படைத்தலைவர் அமர்ந்திருந்தார். பயங்கர ஆயுதங்கள் தாங்கிய இருமடியாயிரம் நளின குகுக்குந்த விண்மீன் சீருந்திகள் படைத்தலைவரின் ஒற்றைச்சொற்கட்டளையால் மின்னிறப்புக்களை அவிழ்த்துவிட ஆயத்தமாக காத்திருந்தன. வில்கரகத்தலைவர் குகுக்குந்தத்தலைவரை சரிசமமாகநோக்கி தன்தாயைப்பற்றி அந்தக்கீழ்ந்தரவிலங்கு சொன்ன சொற்களுக்காக மன்னிப்பு கேட்கவேண்டுமென்று சொன்னதைத்தொடர்ந்து அங்கு ஒரு பயங்கர அமைதி நிலவியது.*

*அந்த விலங்கு தன் தகிக்கும் ஆவியில் நெளிந்த அதே கணத்தில் என் வாழ்க்கை முறை எனக்கு மனநிறைவு தருவதாக இல்லை என்ற சொற்கள் பேச்சுவார்த்தை மேசையின் குறுக்கே மிதந்து சென்றன.*

*புன்வாய்ப்பாக, வில்கரக மொழியில் இதுதான் கற்பனையிலும் மிகப்பயங்கரமான அவமானம். அதன் பதில்விளைவாக பலநூற்றாண்டுகள்தொடர்ந்த போர் தொடங்கியதைத்தவிர வேறு வழியில்லை.*

*இறுதியில் அவர்களுடைய விண்மீன்திரள்களை பல ஆயிரமாண்டு காலமாக நொறுக்கித்தள்ளியபின் எல்லாம் ஒரு பேய்த்தனமான பிழை என்றுணர்ந்து தங்களிடையே எஞ்சியிருந்த வேறுபாடுகளைத்தீர்த்துக்கொண்டு அந்த இரண்டு போர்ப்படையினர்களும் இணைந்து அந்த அவமானச்சொற்களின் மூலம் என்று இப்போது ஐயமில்லாமல் அவர்களறிந்த நம் விண்மீன்திரள் மீது படையெடுத்தனர்.*

*மேலும் பல ஆயிரமாண்டுகளாக அந்த மாவலுவான கலங்கள் வெளியின் வெற்றிடத்தின்மூலம் பயணம் செய்து இறுதியில் பால்வீதியை அடைந்ததும் அவர்கள் எதிர்கொண்ட முதற்கோளின் மீது சீற்றத்துடன் பாய்ந்தன. அந்தக்கோளும் ஒரு தற்செயலால் புவிதான். ஆனால் அளவுக்கணக்கில் ஏற்பட்ட ஒரு பெருந்தவறால் அந்தப்போர்ப்படைமுழுவதும் ஒரு நாயால் விழுங்கப்பட்டது.*

*அண்டத்தின் வரலாற்றில் காரணத்துக்கும் விளைவுக்கும் இடையேயுள்ள உட்சிக்கலான இடைச்செயலை ஆய்ந்தறிவோர் இதுபோன்ற நிகழ்ச்சிகள் எப்போதும் நடக்கின்றன என்றும் அதைத்தவிர்க்க நம்மிடம் திறனில்லை என்றும் சொல்கிறார்கள்.*

*'அதுதான் வாழ்க்கை' என்று அவர்கள் சொல்லிவிடுகிறார்கள்.*

*ஒரு சிறு வளியுந்துப்பயணம்செய்து ஆரதனும் முதியமகரத்தியரும் ஒரு வாசலை வந்தடைந்தனர். உந்துவண்டியைவிட்டு கதவின்வழியே நுழைந்து கண்ணாடி மேசைகளும் பல வடிவமைப்புப பரிசுகளும் அடங்கிய ஒரு காத்திருக்கும் அறையில் வந்துசேர்ந்தனர். அதே நேரத்தில் மற்றொரு பக்கமுள்ள கதவின் மேற்பக்கம் ஒரு விளக்கு மினுக்கியதைத்தொடர்ந்து அவர்கள் அந்தக்கதவையும் கடந்து சென்றனர்.*

*'ஆரதா! உனக்கு ஒன்றும் ஆகவில்லை!' என்று ஒரு குரல் வீரிட்டது.*

*'ஓ, அப்படியா? நல்லது,' என்றான் ஆரதனும் வியப்படைந்து.*

*அங்குள்ள வெளிச்சம் மந்தமாக இருந்ததால் பலவிதமான புத்தயல் உணவு வகைகளும் இனிப்புக்களும் வேற்றுலகப்பழங்களும் அழகாக அடுக்கப்பட்ட மேசையைச்சூழ்ந்து டாட்டாவும் திலக்கோமையும் பீபிள்பிராசனும் அமர்ந்திருந்ததைக்காண ஒரிரு கணங்கள் ஆனது. அவர்கள் நன்றாக பிடித்துவெட்டிக்கொண்டிருந்தனர்.*

*'உங்களுக்கு என்ன ஆனது?' என்று கேட்டான் ஆரதன்.*

*ஒர் எலும்பில் நிறைந்திருந்த வாட்டிய சதையை தாக்கிக்கொண்டிருந்த பீபிள்பிராசன், 'நம் விருந்தோம்பிகள் எங்களை வளிமமிட்டும் எங்கள் மூளையைக்கசக்கிக்கொண்டும் பொதுவாக விந்தையான நடத்தையுடனும் இருந்தார்கள். பிறகு அதற்கெல்லாம் ஈடுகட்டுவதுபோல் நல்ல விருந்தினை அளித்திருக்கின்றனர். இந்தா, கொஞ்சம் விப்பானியநீர்யானை வடை சாப்பிடு. இதுபோன்றவற்றை நீ சாப்பிடுகிறவனானால் இது மிகவும் சுவையானது,' என்றான்.*

*'விருந்தோம்பிகளா? அது யார்? இங்கு வேறு யாரும் ...'*

*ஒரு சிறு குரல் 'நல்வரவு, புவியினமே. உணவு எடுத்துக்கொள்,' என்றது.*

*ஆரதன் சுற்றிலும் பார்த்து திடீரென்று கத்திக்குதித்தான்.*

*'ஆ, உணவருகில் எலிகள் இருக்கின்றன!' என்றான்.*

*எல்லாரும் ஆரதனை குறியாகப்பார்த்தனர். ஒரு சங்கடமான அமைதி ஒரு கணம் நிலைத்தது.*

*அவனோ மேசையில் கண்ணாடிக்கூண்டுகள்போல் தோன்றியவற்றில் இருந்த இரண்டு வெள்ளை எலிகளை கண்கொட்டாமல் பார்த்தான். அமைதியை உணர்ந்து எல்லாரையும் திரும்பிப்பார்த்தான்.*

*'ஓ!' என்றான் ஒரு திடீர் அறிவெழுச்சியுடன். 'ஓ, மன்னிக்கவும். நான் இதை கொஞ்சமும் எதிர்...'*

*'நான் அறிமுகம் செய்கிறேன்,' என்று திலக்கோமை முன்வந்தாள். 'ஆரதா, இது பெங்கன் சுண்டெலி.'*

*ஒரு சுண்டெலி கண்ணாடிக்கூண்டுக்குள்ளிருந்த தொடுவுணர்வுடையதென்று நாம் ஊகிக்கக்கூடிய பலகத்தில் தன் மீசையால் வருடியது. அப்போது கூண்டு குனிவது போல் முன் நகர்ந்தது.*

*'இது பிரங்கன் சுண்டெலி.'*

*மற்றச்சுண்டெலியும் 'உன்னை சந்தித்தில் மகிழ்ச்சி,' என்று சொல்லி அதேபோல் குனிந்தது.*

*ஆரதன் வாயைப்பிளந்து, 'ஆனால், இவை ...' என்று தொடங்கினான்.*

*திலக்கோமை குறுக்கிட்டு, 'ஆம், இவைதாம் நான் புவியிலிருந்து கொண்டு வந்தவை,' என்றாள்.*

*அவள் அவனுடைய கண்களுக்குநேராக பார்த்தாள். அதில் ஏதோ தோல்வியின் சிறு அடையாளம் இருந்ததாக ஆரதனுக்கு தோன்றியது.*

*'அந்த துருவிய ஆர்க்கிரிய மிகைக்கழுதையை கொஞ்சம் நகர்த்துகிறாயா?' என்றாள்.*

*வேதடியாபயன் மெதுவாக கனைத்துச்செருமினார்.*

*'நன்றி, வேதடியாபயன். நீ போகலாம்,' என்றது பெங்கன் சுண்டெலி கறாராக.*

*'என்ன? ஓ... சரி' என்றார் அதை எதிர்பார்த்திராத முதியவர், 'அப்படியானால் நான் போய் என் கூர்குடா வேலையை கவனிக்கிறேன்.'*

*'ஆ, உண்மையில் அதற்கு அவசியமில்லை,' என்றது பிரங்கன் சுண்டெலி. 'இனி எமக்கு புவி தேவைப்படாது என்றே தோன்றுகிறது. இப்போது கோளுக்கு உரியவன் ஒருவனை கண்டுபிடித்து விட்டோம். கோள் அழிவதற்கு சிலகணங்கள்முன்புவரை இவன் அங்கு இருந்திருக்கிறான்.' தன் செந்நீலக்கண்களை ஆரதனை நோக்கி உருட்டியது.*

*‘என்ன? அப்படியெல்லாம் நீங்கள் விடக்கூடாது. நான் ஆயிரம் பனியடுக்குக்களை செய்துவைத்துக்கொண்டு ஆப்பிரிக்காவை அழகுபடுத்த காத்திருக்கிறேன்.’*

*‘சரி, அதை பிரித்துப்போடுமுன்பு ஒருமுறை பனிச்சருக்கு விளையாட்டுக்கு சென்றுவா,’ என்றது பிரங்கன் சுண்டெலி.*

*‘பனிச்சருக்கு விளையாட்டு!’ என்று முதியவர் கரைந்தார். ‘அந்தப்பனியடுக்குக்கள் கலைச்சிற்பங்கள்! நளினமாகச்செதுக்கப்பட்ட கோடுகள், வானளாவிய பனிச்சிகரங்கள், ஆழ்ந்த கம்பீரமான மடுக்கள்! உயர்தரக்கலையில் பனிச்சருக்கி விளையாடுவது அதை அவமதிப்பதாகும்!’*

*‘நன்றி, வேதடியாபயன். போகலாம்,’ என்றது பெங்கன் சுண்டெலி திடமாக.*

*‘சரி, ஐயா. மிக்க நன்றி,’ என்றார் முதியவர் இறுக்கமாக. ‘விடைபெறுகிறேன், புவிமனிதா. உன் வாழ்க்கைமுறை நலமாக என் வாழ்த்துகள்.’*

*மற்றவர்களுக்கும் ஒரு சிறு தலையசைத்தலுடன் அவர் திரும்பி சோகமாக நடந்து அறையை விட்டு வெளியேறினார்.*

*ஆரதன் என்ன சொல்வதென்று தெரியாமல் அவரை பார்த்துக்கொண்டேயிருந்தான்.*

*‘சரி, இனி நம் செயலுக்கு வருவோம்,’ என்றது பெங்கன்.*

*டாட்டாவும் பீபிள்பிராசனும் தங்கள் தம்ளர்களை உயர்த்தி ஒன்றுடனொன்றை தட்டிக்கொண்டு, ‘வெற்றி!’ என்றார்கள்.*

*‘என்ன?’ என்றது பெங்கன் சுண்டெலி.*

*டாட்டா சுற்றும் பார்த்தான்.*

*‘மன்னிக்கவும். இதைத்தான் சொல்கிறீர்கள் என்று நினைத்தேன்,’ என்றான்.*

*இரண்டு சுண்டெலிகளும் தங்கள் கூண்டுக்குள் பொறுமையில்லாமல் அலைந்தன. பிறகு அவை தங்களை சமாளித்துக்கொண்டதும், பெங்கன் ஆரதனைநோக்கி சொன்னது.*

*‘புவியினமே, சுருங்கச்சொல்வதானால், இதுதான் நம் நிலைமை. நாங்கள் இந்த இறுதிக்கேள்வி என்னும் பிசாசை கண்டுபிடிப்பதற்காக குறைந்தது பத்து இருமடியாயிரம் ஆண்டுகளாக உங்கள் கோளை நடத்தி வந்திருக்கிறோம் என்பது உனக்கு தெரியும்.’*

*‘ஏன்?’ என்றான் ஆரதன் விரைப்புடன்.*

*‘இல்லை. நாங்கள் அதையெல்லாம் போட்டுப்பார்த்தோம்,’ என்று குறுக்கிட்டுச்சொன்னது பிரங்கன், ‘அது பதிலுடன் பொருந்தவில்லை. ஏன்? நாற்பத்திரண்டு... பார்த்தாயா? பொருந்தவில்லை.’*

*‘அதைச்சொல்லவில்லை. நீங்கள் ஏன் அப்படிச்செய்தீர்கள் என்று கேட்டேன்,’ என்றான் ஆரதன்.*

*‘ஓ, அப்படியா?’ என்ற பிரங்கன், ‘உண்மையைச்சொல்லவேண்டுமானால், அது ஒரு பழக்கம் என்றுதான் சொல்லவேண்டும். ஏறக்குறைய இதுதான் உண்மை. அதாவது, எல்லாமே எங்களுக்கு சலித்து விட்டது. இந்த முரட்டு வோகர்களை கருதுப்போது, இதையெல்லாம் மீண்டும் முதலிலிருந்தே செய்ய வேண்டுமென்ற எண்ணமே எனக்கு மயக்கத்தைத்தருகிறது. நான் சொல்வது புரிகிறதா? பெங்கனும் நானும் எங்கள் வேலையை முடித்துவிட்டு கோளைவிட்டு ஒரு விடுமுறைக்காக வெளியேறியது ஒரு நல்வாய்ப்பினால்தான். பிறகு உன் நண்பர்களின் செயல்கள்மூலம் மகரத்தியாவுக்கு திரும்பிவரும்படி செய்திருக்கிறோம்.’*

*‘மகரத்தியா எங்கள் பரிணாமத்துக்கு ஒரு நுழைவி’ என்று சேர்த்தது பெங்கன்.*

*பிறகு அதன் எலியத்துணைவன் தொடர்ந்தது. ‘அதன்பின், எங்கள் சொந்தவூரான பரிமாணத்தில் ஓர் ஐம்பரிமாண பேச்சுக்காட்சியும் சொற்பொழிவு உலாவும் நடத்துவதற்காக எங்களுக்கு அதிக வருமானம்*

*தரக்கூடிய ஒரு கொழுத்த ஒப்பந்தம் வழங்கப்பட்டுள்ளது. நாங்கள் அதை எடுத்துக்கொள்ள மிகவும் விரும்புகிறோம்.'*

*'நானாயிருந்தால் எடுத்துக்கொள்வேன். டாட்டா, நீயும் அப்படித்தானே?' என்றான் பீபிள்பிராசன்.*

*'ஓ, ஆமாம். உடனே துள்ளிக்குதித்து பிடுங்கிக்கொள்வேன்,' என்றான் டாட்டா.*

*ஆரதன் இதெல்லாம் எங்கே சென்று முடியப்போகிறதோ என்று விளங்காமல் விழித்தான்.*

*'ஆனால், அதற்கான விற்பனைப்பொருள் வேண்டுமே!' என்றது பிரங்கன். 'அதாவது, அந்த இறுதிக்கேள்வி எப்படியும் ஏதாவது ஒரு வடிவில் எங்களுக்கு வேண்டும்.'*

*பீபிள்பிராசன் ஆரதனிடம் குனிந்து சொன்னான். 'இதோபார். வாழ்க்கை, அண்டம், எல்லமே பற்றிய விடை தங்களுக்குத்தெரியும் என்று சொல்லிக்கொண்டு இவர்கள் படமனையில் சும்மா உல்லாசமாக கொஞ்சநாள் உட்கார்ந்திருந்து, இறுதியில் அந்த விடை நாற்பத்திரண்டு என்று சொன்னால், காட்சி அத்துடன் முடிந்துவிடும் பார். தொடர்கதையாக இழுப்பதற்கு ஒன்றுமில்லாமல் போய்விடும்.'*

*'கேட்பதற்கு நன்றாக இருக்கும்படி ஏதாவது எங்களுக்கு வேண்டும்,' என்றது பெங்கன்.*

*'கேட்பதற்கு நன்றாக இருக்க வேண்டும்!' என்றான் ஆரதன், 'ஓ, கேட்பதற்கு நன்றாக இருக்கும்படி ஓர் இறுதிக் கேள்வி. அதுவும் இரண்டு சுண்டெலிகளுக்கு!'*

*சுண்டெலிகள் கொதிப்படைந்தன.*

*'எல்லாம் சரிதான்,' என்றது பிரங்கன், 'நல்லியல்பிசம், தூய ஆய்வின் பெருமை, உண்மையை எல்லா வழிகளிலும் தேடுவது எல்லாமே சரிதான். ஆனால் ஒரு குறிப்பிட்ட நிலைமையில், உண்மை என்ற ஒன்று இருந்தால் அது இந்த பற்பரிமாண முடிவிலா அண்டம் முழுவதும் ஒரு பைத்தியக்காரக்கூட்டத்தால் நடத்தப்படுவதுதானோ என்ற ஐயம் ஏற்படுகிறது. அதைக்கண்டுபிடிக்க மேலும் பத்து இருமடியாயிரம் ஆண்டுகள் செலவிடுவதா அல்லது பணத்தை எடுத்துக்கொண்டு ஓடுவதா என்ற விருப்பத்தேர்வு இருந்தால், ஓடுவதால் கொஞ்சம் உடற்பயிற்சியாவது கிடைக்கும் என்றுதான் எனக்குததோன்றுகிறது.'*

*'ஆனால்...' என்று நம்பிக்கையில்லாமல் தொடங்கினான் ஆரதன்.*

*'ஏய், புரியவில்லையா, புவிமனிதா?' என்று இடைமறித்தான் பீபிள்பிராசன், 'நீதான் அந்த கணினித்தளவணியின் கடைசித்தலைமுறை உற்பத்திப்பொருள். உள் கோளுக்கு சங்கூதுவதற்கு சிலகணங்கள்முன்புவரை நீ அங்கு இருந்திருக்கிறாய். சரியா?'*

*'யீ...வ...'*

*'ஆகையால் உன்மூளை அந்தக்கணினிநிரலின் ஈற்றயலஅமைவடிவத்தின் ஒரு வளர்பகுதியாகும்,' என்றான் டாட்டா. அவன் மிகத்தெளிவாகவே பேசியதாக எண்ணினான்.*

*'புரிகிறதா?' என்றான் பீபிள்பிராசன்.*

*'ஆம்...' என்றான் ஆரதன் சந்தேகத்துடன். எதனுடைய வளர்பகுதியாகவும் தானிருந்ததாக அவன் உணர்ந்ததில்லை. அதையே அவனுடைய சிக்கல்களில் ஒன்றாக அவன் கருதியிருந்தான்.*

*'வேறுவிதமாகச்சொன்னால்,' என்றது பெங்கன், தன் சிறப்பூர்தியை ஆரதனைநோக்கி திருப்பிக்கொண்டு, 'கேள்வியின் கட்டமைப்பு உன் மூளையின் கட்டமைப்பில் பதிந்திருப்பதற்கு ஒரு நல்ல வாய்ப்பிருக்கிறது. ஆகவே நாங்கள் அதை உன்னிடமிருந்து வாங்கிக்கொள்ள விரும்புகிறோம்,' என்றது.*

*'எதை? கேள்வியையா?' என்றான் ஆரதன்.*

*'ஆம்,' என்றனர் டாட்டாவும் திலக்கோமையும்.*

*'ஏராளமான பணம் கொடுத்து,' என்றான் பீபிள்பிராசன்.*

*‘இல்லை, இல்லை. நாங்கள் மூளையைத்தான் வாங்கவிரும்புகிறோம்,’ என்றது பிரங்கன்.*

*‘என்ன!’*

*‘அந்த வாய்ப்பை நாங்கள் இழப்போமா?’ என்றது பெங்கன்.*

*‘அவன் மூளையிலிருந்து கேள்வியை மின்வழிகளால் படித்தெடுப்பதாகத்தானே சொன்னீர்கள்?’ என்று திமிறினான் டாட்டா.*

*‘ஆம்,’ என்றது பிரங்கன், ‘ஆனால் முதலில் வெளியே எடுக்கவேண்டும். அதை ஆயத்தப்படுத்த வேண்டும்.’*

*‘பதப்படுத்த வேண்டும்,’ என்றது பெங்கன்.*

*‘நறுக்கவேண்டும்.’*

*‘நன்றி,’ என்று இரைந்த ஆரதன் தன் நாற்காலி சரிந்து கீழேவிழும்படி எழுந்து மேசையிலிருந்து பின்வாங்கினான்.*

*‘அதற்கு ஒரு பதிலி செய்துகொள்ளலாம்,’ என்றது பெங்கன், ‘அது முக்கியம் என்று நீ கருதினால்.’*

*‘ஆம். ஒரு மின் மூளை. ஒரு எளிய மூளை போதும்,’ என்றது பிரங்கன்.*

*‘எளிய மூளை!’ என்று ஆரதன் அரற்றினான்.*

*‘ஆம்,’ என்றான் பீபிள்பிராசன் ஒரு கள்ளச்சிரிப்புடன், ‘என்ன? எனக்குப்புரியவில்லை. காப்பி எங்கே கிடைக்கும்? என்றெல்லாம் சொல்வதற்குத்தானே அதை நிரலாக்க வேண்டும்? வேறுபாடு தெரியாது.’*

*‘என்ன?’ என்ற ஆரதன் மேலும் பின்வாங்கினான்.*

*‘பார்த்தீர்களா? நான் சொன்னது சரிதானே?’ என்ற பீபிள்பிராசன் உடனே வலியால் கத்தினான். திலக்கோமை அவனை ஏதோ செய்திருந்தாள்.*

*‘வேறுபாடு எனக்குத்தெரியும்,’ என்றான் ஆரதன்.*

*‘தெரியாது,’ என்றது பிரங்கன் சுண்டெலி, ‘தெரியாதபடி நிரலாக்கி விடுவோம்.’*

*டாட்டா கதவைநோக்கி சென்றான்.*

*‘இதோ பாருங்கள், சுண்டெலி நண்பர்களே,’ என்றான் அவன். ‘இந்த வியாபாரம் எங்களுக்கு ஏற்பில்லை.’*

*‘ஏற்பாகத்தான் இருக்கவேண்டும் என்று நாங்கள் கருதுகிறோம்,’ என்று இரண்டு சுண்டெலிகளும் ஒரே நேரத்தில் சொல்லின. அதுவரை அவற்றிடம் இருந்த பெருந்தன்மை மறைந்து குரல் நொடியில் சூடானது. அவற்றின் கண்ணாடி ஊர்திகள் ஒரு கிரீச்சிடும் ஒலியுடன் திடீரென்று மேசையிலிருந்து உயர்ந்து காற்றில் வளைந்து ஆரதனைநோக்கிச்சென்றன. அவன் செய்வதும் எண்ணுவதும் அறியாமல் மேலும் பின்வாங்கி ஒரு மூலையில் பதுங்கினான்.*

*திலக்கோமை அவசரமாக அவன் கையைப்பிடித்து கதவைநோக்கி இழுக்கமுயன்றாள். டாட்டாவும் பீபிள்பிராசனும் கதவைத்திறக்க மும்முரமாக முயன்றுகொண்டிருந்தனர். ஆனால் ஆரதன் வெறும் எடையானான். தன்னைநோக்கி காற்றில்பறந்த எலியங்களைக்கண்டு செயலிழந்து காணப்பட்டான்.*

*அவள் அவனைப்பார்த்து கத்தினாள். ஆனால் அவன் வாய்பிளந்து நின்றான்.*

*மற்றொரு வலுவான இழுப்பால் டாட்டாவும் பீபிள்பிராசனும் கதவை திறந்துவிட்டனர். கதவின் மறுபக்கம் மகரத்தியாவின் குண்டர்கள் என்று நாம் ஊகிக்கக்கூடிய பல முரடர்களடங்கிய ஒரு குழு*

*நின்றிருந்தது. அவர்கள் அசிங்கமாக இருந்ததுமல்லாமல், அவர்கள் தாங்கிய ஆயுதங்களும் அவர்களைவிட அழகானவையாக தோன்றவில்லை. அவர்கள் பாய்ந்தனர்.*

*அப்படியானால்? ஆரதனின் தலை வெட்டித்திறக்கப்படப்போகிறது. திலக்கோமையால் அவனுக்கு உதவ இயலவில்லை. டாட்டாவும் பீபிள்பிராசனும் தங்களைவிட மிகவும் பெரிய உருவங்களும் மிகவும் கொடிய ஆயுதங்களுமுடைய குண்டர்களால் தாக்கப்படப்போகிறார்கள்.*

*அந்த நேரத்தில் அந்தக்கோளிலுள்ள எல்லா விழிப்பலறிகளும் காதைப்பிளக்குமளவுக்கு அலறத்தொடங்கியது ஒரு நல்வாய்ப்புதான்.*

# *அத்தியாயம் 32*

*‘அபாயம்! அபாயம்!’ என்று மகரத்தியா முழுவதும் உள்ள எல்லா விழிப்பலறிகளும் அலறின. ‘பகைமைக்கலம் கோளில் இறங்கியுள்ளது. எட்டாம் பகுதியில் ஆயுதமேந்திய வன்புகர்கள். தற்காப்பு நிலையங்கள், தற்காப்பு நிலையங்கள்!’*

*இரண்டு சுண்டெலிகளும் தரையில் கிடந்த தங்கள் ஊர்திகளின் உடைந்த பாகங்களைப்பார்த்து எரிச்சலுடன் முகத்தைச்சுளித்தன. ‘அடச்சே,’ பிரங்கன் சுண்டெலி முணுமுணுத்தது, ‘ஒரு கிலோ புவியன்மூளைக்காக இவ்வளவு தொந்தரவு.’ அது தன் செந்நீலக்கண்களை சிமிட்டி அங்குமிங்கும் ஓடியபோது அதன் வெள்ளை முடிகள் மின்னூட்டத்தால் குத்திட்டு நின்றன. ‘இப்போது நாம் செய்யக்கூடிய ஒன்றே ஒன்று,’ என்றது பெங்கன் தன் மீசையை சிந்தனையுடன் தடவி குறுகி, ‘ஒரு பொய்க் கேள்வியை உண்டாக்குவதுதான். கேட்பதற்கு நன்றாக இருக்கக்கூடிய ஒரு கேள்வியை நாம் புனைய வேண்டும்’ என்றது.*

*‘கடினம்,’ என்றது பிரங்கன். அது சிந்தித்தது. ‘இதெப்படி? மஞ்சளானதும் ஆபத்தானதும் எது?’*

*பெங்கன் இதை ஒரு கணம் சிந்தித்தது.*

*‘இல்லை. சரியாக இல்லை. கேள்விக்குப் பொருந்தவில்லை,’ என்றது.*

*சில நொடிகளுக்கு அவை அமைதியில் ஆழ்ந்தன.*

*‘சரி. ஆறையும் ஏழையும் பெருக்கினால் எவ்வளவு?’*

*‘வேண்டாம். அது வேண்டவே வேண்டாம். அது மிகவும் வெறுமையானது. வெறும் உண்மை. பார்வையாளர்களின் கவனத்தை அது பிடித்துவைக்காது.’*

*மீண்டும் அவை சிந்தித்தன.*

*பிறகு பிரங்கன் சொன்னது: ‘எனக்கொரு யோசனை. ஒரு மனிதன் எத்தனை சாலைகளில் நடக்க வேண்டும்?’*

*‘ஆ,’ என்றது பெங்கன், ‘ஆகா, இது நன்மைபயப்பதாக தோன்றுகிறது!’ அது அந்த சொற்றொடரை தனக்குள் சொல்லிப்பார்த்தது. ‘ஆம். இது அற்புதம்! பொருளுடையது போல் தோன்றுகிறது. ஆனால் எந்த ஒரு குறிப்பிட்ட பொருளுடையதாகவும் கட்டுப்படவில்லை. ஒரு மனிதன் எத்தனை சாலைகளில் நடக்க வேண்டும்? நாற்பத்திரண்டு. அற்புதம், அற்புதம். இது அவர்களை சரிக்கட்டிவிடும். பிரங்கக்கண்ணா, நாம் பிழைத்தோம்.’*

*அவை கிளர்ச்சியடைந்து ஓடியாடி ஒரு நடனமாடின.*

*அவற்றின் அருகில் தரையில் சில முரட்டுக்குண்டர்கள் கனத்த வடிவமைப்புப்பரிசுகளால் தலையிலடிபட்டு விழுந்துகிடந்தனர்.*

*சுமார் ஒரு கிலோமீட்டர் தொலைவில் நான்கு உருவங்கள் ஒரு தாழ்வாரத்தில் வெளியேறும்வழியைத்தேடி ஓடிக்கொண்டிருந்தன. அவர்கள் ஓர் அகன்ற திறந்ததிட்ட கணினிச்சதுக்கத்தில் வெளிப்பட்டனர். அங்குமிங்கும் பரக்கப்பரக்க பார்த்தார்கள்.*

*‘எப்படிப்போகலாம் என்று நினைக்கிறாய், பீபூ,’ என்றான் டாட்டா.*

*‘ஒரு நீண்ட ஊகத்தால் இங்கே என்று சொல்வேன்,’ என்று சொல்லி பீபிள்பிராசன் ஒரு கணினி அடுக்குக்கும் சுவருக்குமிடையே ஓடினான். மற்றவர்கள் அவனைத்தொடர்ந்து ஓடியபோது, அவனுக்குமுன் சிலசென்றிமீட்டரில் வளியில் பளிச்சிட்டதும் சுவரின் ஒரு பகுதியை கரித்ததுமாகிய ஒரு கொல்லதிர்ச்சியின் ஆற்றல்மின்னலால் அவன் நிறுத்தப்பட்டான்.*

*அருணாவில் ஒரு குரல் சொன்னது, 'ஏய், பீபிள்பிராசன், அப்படியே நில். நாங்கள் உன்னை சூழ்ந்துள்ளோம்.'*

*'காவலர்கள்,' என்று கிசுகிசுத்த பீபிள்பிராசன் திரும்பிக்குனிந்து ஒடுங்கினான், 'உனக்கு ஏதாவது தோன்றுகிறதா, டாட்டா?'*

*'சரி, இப்படி வா,' என்றான் டாட்டா. நால்வரும் இரண்டு கணினிவரிசைகளுக்கு நடுவில் ஓடினார்கள்.*

*அந்த வரிசைகளின் முடிவில் ஏராளமான ஆயுதங்களும் வெளிக்கவசமும் அணிந்த ஓருருவம் ஒரு கொடிய கொல்லதிரிச்சி எய்வியை ஆட்டிக்கொண்டு தோன்றியது.*

*'நாங்கள் உன்மீது எய்ய விரும்பவில்லை, பீபிள்பிராசன்,' என்றது அந்த உருவம்.*

*'எனக்கும் அது விருப்பமில்லைதான்,' என்று இரைந்த பீபிள்பிராசன் இரண்டு தரவலசி அகைகளுக்கிடையிலிருந்த அகலமான இடுக்கில் பாய்ந்தான்.*

*மற்றவர்கள் கூர்மையாகத்திரும்பி அவனைத்தொடர்ந்து சென்றார்கள்.*

*'இரண்டு பேர் இருக்கிறார்கள்,' என்றாள் திலக்கோமை, 'நம்மால் தப்பவியலாது.'*

*அவர்கள் ஒரு பெரிய கணினிக்கும் சுவருக்கும் இடையே இருந்த கோணத்தில் தங்களை இடுக்கிக்கொண்டனர்.*

*மூச்சைப்பிடித்துக்கொண்டு காத்திருந்தனர்.*

*திடீரென்று காற்றில் ஆற்றல்மின்னல்கள் வெடித்தன; இரண்டு காவலர்களும் ஒரேநேரத்தில் அவர்கள் மீது குண்டுகளை எய்யத்தொடங்கியிருந்தனர்.*

*'ஏய், அவர்கள் நம்மீது எய்கிறார்கள்,' என்றான் ஆரதன், ஒரு பந்தாக சுருண்டுகொண்டு, 'எய்ய விரும்பவில்லை என்று இப்போதுதானே சொன்னார்கள்!'*

*'ஆம். நானும் அப்படித்தான் சொன்னதாக நினைத்தேன்,' என்று டாட்டா ஒப்புக்கொண்டான்.*

*பீபிள்பிராசன் அபாயத்தையும் மீறி ஒரு கணம் ஒரு தலையை வெளியே நீட்டினான்.*

*'ஏய், நீங்கள் எங்கள் மீது எய்ய விரும்பவில்லை என்றல்லவா சொன்னீர்கள்!' என்று சொல்லி மீண்டும் குனிந்துகொண்டான்.*

*காத்திருந்தனர்.*

*ஒருகணத்தாமதத்துக்குப்பின் ஒரு குரல் பதிலளித்தது, 'காவலனாயிருப்பது எளிதன்று!'*

*'என்ன சொன்னான்?' என்றான் டாட்டா பெருவியப்புடன்.*

*'காவலனாயிருப்பது எளிதன்று என்று சொன்னான்.'*

*'அது அவனுடைய சிக்கல். நமக்கென்ன?'*

*'நானும் அப்படித்தான் நினைத்தேன்.'*

*டாட்டா இரைந்து சொன்னான், 'ஏய், நீங்கள் எங்கள்மீது எய்வதாகிய சிக்கல் எங்களுக்கிருக்கிறது. உங்கள் சிக்கலையும் எங்கள்மீது சுமத்தாமலிருந்தால் நம் அனைவருக்கும் நிலைமையைச்சமாளிப்பது எளிதாகும்.'*

*மற்றொரு இடைநிற்றலுக்குப் பின் அந்தக்குரல் மீண்டும் சொன்னது.*

*‘இதோ பாருங்களடா. நீங்கள் எதிர்கொள்வோர் ஏதோ சோற்றுக்காக வேலைசெய்யும் தொப்பையும் வழுக்கையும் உள்ள அறிவில்லாத பேசத்தெரியாத காவலர்கள் அல்லர். நாங்கள் அறிவுள்ள இரக்கமுள்ள இருவர். வேறு சமூகச்சூழ்நிலையில் சந்தித்தால் எங்களை உங்களுக்கு பிடிக்கும். எனக்குத்தெரிந்த வேறுசில காவலர்களைப்போல் நான் சும்மா விளையாட்டுக்காக யாரையும் எய்துவிட்டு பிறகு என்மனைவியிடம் போய் பெருமையடித்துக்கொள்பவன் அல்லேன். நான் விளையாட்டுக்காக யாரையும் எய்துவிட்டு பிறகு என்மனைவியிடம் போய் வருத்தப்படுபவன்!’*

*‘நான் புதினங்கள் எழுதுகிறேன்!’ என்று அடுத்த காவலன் சொன்னான், ‘ஆனால் என் புதினங்கள் ஏதும் பதிப்பாகவில்லை. ஆகவே நான் ஒரு வெறுப்புமனநிலையில் இருக்கிறேன் என்பதைத்தெரிவித்து உங்களை எச்சரிக்கிறேன்.’*

*டாட்டாவின் கண்கள் கண்குழிகளிலிருந்து பாதி தெரித்துவிட்டன. ‘யாரிந்தப்பயல்கள்?’ என்றான்.*

*‘தெரியவில்லை. இவர்கள் பேசுவதைவிட எய்வதே மேல்,’ என்றான் பீபிள்பிராசன்.*

*‘நீங்களாகவே அமைதியாக வருகிறீர்களா அல்லது நாங்கள் உங்களை தகர்த்தெறியவேண்டுமா?’ என்றான் காவலர்களுள் ஒருவன்.*

*‘உன்விருப்பம் என்ன?’ என்று இரைந்தான் டாட்டா.*

*ஒரு மில்லிநொடிக்குப்பின் காற்று மீண்டும் பொறியத்தொடங்கியது. கொல்லதிர்ச்சிக்குண்டுகள் சுழன்றுவந்து அவர்கள்முன்னிருந்த கணினிவரிசையில் பட்டன.*

*அந்த ஆயுதத்தாக்கல் தாங்கவியலாத செறிவுடன் பலநொடிகளுக்கு தொடர்ந்தது.*

*அது நின்றபோது எதிரொலிகள் மறைவதற்காக சிலநொடிகள் அமைதியாயிருந்தனர்.*

*‘இன்னும் அங்கேதான் இருக்கிறீர்களா?’ என்று கூப்பிட்டான் ஒரு காவலன்.*

*‘ஆம்,’ என்றார்கள் இவர்கள்.*

*‘இதை நாங்கள் விரும்பிச்செய்யவில்லை,’ என்று இரைந்தான் அடுத்த காவலன்.*

*‘புரிகிறது,’ என்று இரைந்தான் டாட்டா.*

*‘கவனி, பீபிள்பிராசன். நன்றாகக்கவனி!’*

*‘ஏன்?’ என்று இரைந்தான் பீபிள்பிராசன்.*

*‘ஏனென்றால், அது அறிவுடைமையும் ஆர்வமானதும் மனிதாபிமானமானதுமாகும். நீங்கள் அனைவரும் இப்போதேவந்து எங்களிடம் அடிவாங்கிக்கொள்ளுங்கள். நாங்கள் அதிகம் அடிக்கமாட்டோம்; ஏனென்றால் நாங்கள் தேவையில்லாத வன்முறையை எதிர்ப்பவர்கள். இல்லாவிட்டால், இந்தக்கோள் முழுவதையும் நாங்கள் வெடித்துச்சிதறடிப்பதுடன் வரும்வழியில் கண்ட ஓரிரண்டு கோள்களையும் சிதறடிப்போம்.’*

*‘இது என்ன பைத்தியக்காரத்தனம்!’ என்று வீரிட்டாள் திலக்கோமை, ‘அப்படியெல்லாம் செய்வீர்களா?’*

*‘ஆம், செய்வோம்,’ என்று இரைந்த காவலன், ‘செய்வோம், இல்லையா?’ என்று மற்றவனிடம் கேட்டுக்கொண்டான்.*

*‘ஓ, ஆம். நிச்சயமாக அப்படித்தான் செய்யவேண்டியதிருக்கும். ஐயமேயில்லை,’ என்றான் அடுத்தவன்.*

*‘அதுதான் ஏன்? நீங்கள் அறிவுள்ள தாராளமனமுள்ள இரக்கமுள்ள காவலர்களாக இருந்தாலும் சிலசெயல்களை செய்யத்தான் வேண்டும் என்பதற்காகவா?’ என்றாள்.*

*‘இப்படியும் மக்கள் இருப்பதை என்னால் நம்ப இயலவில்லை,’ என்று முணுமுணுத்தான் டாட்டா, தலையை ஆட்டிக்கொண்டு.*

*ஒரு காவலன் மற்றவனை நோக்கி இரைந்தான். ‘இன்னும் கொஞ்சம் எய்யலாமா?’*

*‘செய்யலாமே, தாராளமாக!’*

*மற்றொரு மின் ஆயுதத்தாக்கலை பறக்கவிட்டனர்.*

*வெப்பமும் இரைச்சலும் மிக அதிகமாயிருந்தன. கணினிவரிசை மெதுவாக சரியத்தொடங்கியது. முன்பக்கம் கிட்டத்தட்ட உருகிவிட்டது. தடித்த உருகிய உலோகத்தாரைகள் அவர்கள் குன்றியிருந்த இடத்தைநோக்கி வழிந்துவந்தன. அவர்கள் மேலும் தங்களை பின்னால் சுருக்கிக்கொண்டு முடிவுக்குக்காத்திருந்தனர்.*

# அத்தியாயம் 33

*ஆனால் முடிவு வரவில்லை. அதாவது அப்போது வரவில்லை.*

*திடீரென்று ஆயுதத்தாக்கல் நின்றுவிட்டது. அந்த திடீரமைதியினூடே இரண்டு விந்தையான நெறிக்கப்பட்ட விக்கல்களும் தடாலென்ற ஒலிகளும் மட்டுமே கேட்டன.*

*நால்வரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.*

*'என்ன ஆகிவிட்டது?' என்றான் ஆரதன்.*

*'நிறுத்திவிட்டார்கள்,' என்றான் பீபிள்பிராசன் கையை விரித்து.*

*'ஏன்?'*

*'தெரியவில்லை. வேண்டுமானால் அவர்களைப்போய்க்கேட்டுவா.'*

*'வேண்டாம்.'*

*காத்திருந்தனர்.*

*'யாரங்கே?' என்று டாட்டா கூப்பிட்டான்.*

*பதிலில்லை.*

*'விந்தை!'*

*'ஒருவேளை இது தந்திரமாக இருக்கலாம்.'*

*'அவர்களுக்கு அவ்வளவு அறிவில்லை.'*

*'அந்த தடாலென்ற ஒலிகள் என்னவாயிருக்கும்?'*

*'தெரியவில்லையே!'*

*மேலும் சில நொடிகள் காத்திருந்தனர்.*

*'சரி, நான் போய் பார்க்கப்போகிறேன்,' என்றான் டாட்டா.*

*திரும்பி மற்றவர்களை பார்த்தான்.*

*'என்ன, நீ போக வேண்டாம், நான் போகிறேன் என்று யாரும் சொல்லவில்லையா?'*

*அவர்கள் அனைவரும் தலையாட்டினர்.*

*'சரிதான்,' என்று சொல்லி எழுந்தான்.*

*ஒரு கணம் ஒன்றும் நிகழவில்லை.*

*ஓரிரண்டு நொடிகளுக்குப்பின் ஒன்றும்நிகழாதது தொடர்ந்தது. எரியும் கணினிகளிலிருந்தெழுந்த அடர்ந்த புகையினூடே டாட்டா கூர்ந்துபார்த்தான்.*

*எச்சரிக்கையுடன் வெளியிடத்துக்கு அடியெடுத்து வைத்தான்.*

*அப்போதும் ஒன்றும் நிகழவில்லை.*

*பத்து மீட்டர் தொலைவில் ஒரு காவலனின் வெளிக்கவசமிட்ட உருவம் புகைவழியாக மங்கலாக தெரிந்தது. அவன் தரையில் ஒரு கசங்கிய குவியலாகக்கிடந்தான். மறு திசையில் பத்து மீட்டர் தொலைவில் மற்றொருவன் கிடந்தான். வேறு யாரும் அங்கு இருப்பதாகக்காணவில்லை.*

இது டாட்டாவுக்கு மிகவும் விந்தையானதாகத்தோன்றியது.

மெதுவாக அச்சத்துடன் முதலாவதை நோக்கி நடந்தான். அவன் அணுகியபோது அந்த உடல் உற்சாகமூட்டும் வகையில் அசையாமல் கிடந்தது. அவன் அதையடைந்து அதன் தளர்ந்தவிரல்களில் தொங்கியிருந்த கொல்லதிர்ச்சி எய்விமீது காலை வைத்தபின்பும் அது உற்சாகமூட்டும் வகையில் அசையாமல் கிடந்தது.

அவன் குனிந்து எந்த எதிர்ப்பையும் எதிர்கொள்ளாமல் எய்வியை எடுத்துக்கொண்டான்.

காவலன் இறந்து விட்டான் என்பது தெளிவாகியது.

ஒரு சிறு பரிசீலனை அவன் பிளாகுலகப்பாவைச்சேர்ந்தவன் என்று காட்டியது. அவன் ஒரு மீத்தேன் மூச்சுவிடும் உயிரினம். மகரத்தியாவின் அடர்வுகுறைந்த மூச்சியவளிக்கோளத்தில் பிழைத்திருக்க தன் வெளிக்கவசத்தையே நம்பியிருப்பவன்.

அவன் முதுகுப்பொதிவில் இருந்த சிறு ஆயுளாரவு அமைப்புக்கணினி எதிர்பாராமல் செயலற்று விட்டதாகத்தோன்றியது.

டாட்டா மிகுந்த வியப்புடன் அதை குத்திப்பார்த்தான். இந்த சிறுகணினிகள் கலத்திலுள்ள முதன்மைக்கணினியுடன் துணையீதத்தால் இணைக்கப்பட்டு அதன் முழு ஆதரவுடனிருப்பது வழக்கம். அவ்வாறான அமைப்பு மொத்தப்பின்னூட்டப்பிறழ்ச்செயலைத்தவிர மற்றெல்லாச்சூழ்நிலைகளிலும் செயற்காப்புடையது. ஆனால் அதுபோன்ற பிறழ்ச்செயலை எங்கும் கேட்டதில்லை.

மல்லாந்துகிடந்த மற்றொரு உருவத்திடம் அவன் விரைந்து சென்று, அதற்கும் அதே சாத்தியமற்ற செயல் நிகழ்ந்திருப்பதை கண்டான். இருவருக்கும் ஒரே நேரத்தில் நிகழ்ந்திருக்க வேண்டும்.

அவன் மற்றவர்களை கூப்பிட்டு பார்க்கச்சொன்னான். அவர்களும் வந்து அவனைப்போலவே பெருவியப்படைந்தனர். ஆனால் அவனுக்கிருந்த அறியார்வம் அவர்களுக்கில்லை.

‘இந்த குழியைவிட்டு ஓட்டம்பிடிக்கலாம், வாருங்கள்,’ என்றான் பீபிள்பிராசன். ‘நான் தேடி வந்தது எதுவாயிருந்தாலும் அது இங்கிருந்தால் அது எனக்கு வேண்டாம்.’ அவன் இரண்டாவது கொல்லதிர்ச்சி எய்வியை எடுத்து ஒரு பாவமும் அறியாத ஒரு கணக்கியல் கணினியை தகர்த்தெறிந்து தாழ்வாரத்துக்கு ஓடினான். மற்றவர்களும் அவனை பின்தொடர்ந்தனர். அவர்களுக்காக வந்து சில மீட்டர் தொலைவில் காத்திருந்த ஒரு வளியுந்தையும் தகர்த்தெறியப்பார்த்தான். வளியுந்தில் யாரும் இல்லை. ஆனால் ஆரதன் அது வேதடியாபயனுடையதென்று இனங்கண்டுகொண்டான்.

கருவிப்பலகத்தின் ஒரு பக்கத்தில் அவர் எழுதிய ஒரு குறிப்பு இருந்தது. அதிலிருந்த ஓரம்புக்குறி ஒரு கட்டுப்பாட்டுப்பொத்தானை சுட்டியது.

அந்தக்குறிப்பு இதுதான் அமுக்குவதற்கு சரியான பொத்தானாக இருக்கலாம் என்றது.

# *அத்தியாயம் 34*

*வளியுந்து ஒரு ஏவூர்திபோல் பதினேழு கிரவுக்கும் மேலான வேகத்தில் அவர்களை இரும்புச்சுரங்கப்பாதைவழியே கோளின் மேற்பரப்புக்கு எடுத்துச்சென்றது. மேற்பரப்பு அப்போது மற்றொரு இருண்ட அதிகாலையின் பிடிப்பில் இருந்தது. பேய்த்தனமான சாம்பல் நிற ஒளிகள் உறைந்துகிடந்தன.*

*கிரவு என்பது ஒரு திசைவேக அளவீடு. அது உடல்நலம், மனநலம், ஐந்து நிமிடங்களுக்கு மேல் பிந்தாமல் சென்றடைவது ஆகியவற்றுக்கு இயைபான ஒரு வேகம் என்று வரையறுக்கப்படுகிறது. ஆகவே அது சூழ்நிலைகளைப்பொறுத்து முடிவிலா விதங்களில் மாறுபடும் ஒரு அளவீடு. முதல் இரண்டு காரணிகள் ஒப்பிலா எண்ணால் அளக்கப்படும் வேகத்தைச்சார்ந்து மாறுபடுவது மட்டுமல்லாமல் மூன்றாவது காரணியை உணர்வதாலும் மாறுபடுகிறது. ஒரு நிதானத்துடன் கையாளாவிட்டால் இந்த வாய்ப்பாடு மன அழுத்தம், உட்புண், அல்லது இறப்பையே விளைவிக்கக்கூடும்.*

*பதினேழு கிரவு என்பது ஒரு குறிப்பிட்ட வேகமன்று. ஆயினும் அது மிக அதிகம் என்பது தெளிவு.*

*வளியுந்து பதினேழு கிரவுக்கும் மேலான வேகத்தில் காற்றில் வளைந்து பறந்துசென்று, உறைந்த தரையில் ஒரு வெளிர்த்த எலும்புபோல் நின்றிருந்த தங்க இதயத்தின் அருகில் கொண்டுவந்து அவர்களை போட்டுவிட்டு தனக்கு வேறொரு அவசரவேலை இருப்பதுபோல் வந்தவழியே திரும்பி விரைந்து சென்றுவிட்டது.*

*நால்வரும் குளிரில் நடுங்கியபடி நின்று கலத்தைப்பார்த்தனர்.*

*அதனருகில் மற்றொன்று நின்றது.*

*அது ஒரு பிளாகுல கப்பா காவற்கலம்; ஒரு குமிழமான சுறாமீனைப்போன்றதும் இளம்பச்சை நிறமானதுமான அதன் உடல் முழுவதும் பல்வேறு அளவுகளும் நட்பின்மையும் உடைய கருப்பு எழுத்துக்கள் இருந்தன. அந்த எழுத்துக்கள் அந்தக்கலம் எங்கிருந்து வருகிறது, காவல் துறையின் எந்தப்பிரிவுக்கு அது அமர்த்தப்பட்டிருக்கிறது, மின்திறன் ழங்கியை எங்கே பொருத்தவேண்டும் என்பனபோன்ற செய்திகளை வாசிப்போருக்கு அறிவித்தன.*

*அதன் இரண்டு பணிக்குழுவினரும் அந்த நேரத்தில் தரையிலிருந்து பல கிலோமீட்டர் ஆழத்தில் ஒரு புகைமண்டிய அறையில் மூச்சுத்திணறிக்கிடப்பதை கணக்கிலெடுத்தபிறகும், அந்தக்கலம் ஒரு இயல்பற்ற இருளுடனும் அமைதியுடனும் இருப்பதாக தோன்றியது. இது விவரிக்கவோ வரையறுக்கவோ இயலாதவற்றுளொன்று; ஆனால் ஒரு கலம் முற்றிலும் இறந்துவிட்டதை எப்படியோ நம்மால் உணரவியலும்.*

*டாட்டா அதை உணர்ந்தான். ஒரு கலமும் இரண்டு காவலர்களும் ஒரே நேரத்தில் தாமாகவே இறந்துவிட்டதாகத்தோன்றியதை ஒரு மர்மமாக எண்ணினான். அவனுக்குத்தெரிந்தவரை அண்டம் அவ்வாறு இயங்கவில்லை.*

*மற்ற மூவரும் அதை உணர்ந்தார்களாயினும், அதைவிட நடுக்கும் குளிரை அதிகமாக உணர்ந்ததால் அறியார்வத்தின் ஒரு குறுங்கடுந்தாக்குதலால் துயருறாமல் தங்க இதயத்துக்குள் அவசரமாக நுழைந்தனர்.*

*டாட்டா பின்தங்கி பிளாகுல கப்பா கலத்தை பரிசீலனைசெய்யச்சென்றான். அவன் நடந்தபோது அந்த குளிர்ந்த புழுதியில் குப்புறக்கிடந்த ஒரு செயலற்ற உலோக உருவத்தின்மீது தடுக்கிவிழப்பார்த்தான்.*

*'மார்வின்!' என்று வியந்தான். 'இங்கே எப்படி வந்தாய்?'*

*'என்னுடன் பேச வேண்டும் என்ற கட்டாயமில்லை,' என்ற மெல்லிய தொய்ந்த குரல் வந்தது.*

*'சரி, ஆனால் எப்படி இருக்கிறாய், உலோக மனிதா?'*

*'மிகவும் மனத்தாழ்ச்சியுடன்.'*

*‘ஏன்? என்ன நிகழ்ந்தது?’*

*‘தெரியாது. நான் போய்ப்பார்க்கவில்லை.’*

*அவனருகில் தரையில் குன்றியமர்ந்து நடுங்கிக்கொண்டே, ‘ஏன் இப்படி புழுதியில் குப்புறக்கிடக்கிறாய்?’*

*‘இதுதான் சோகமாக இருப்பதற்கு சிறந்தவழி. என்னுடன் பேசவிரும்புவதாக நடிக்கவேண்டாம். நீ என்னை வெறுக்கிறாய் என்பது எனக்குத்தெரியும்.’*

*‘இல்லை. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை.’*

*‘ஆம். அப்படித்தான். எல்லாரும் என்னை வெறுக்கிறார்கள். இது அண்டத்தின் இயல்பில் ஒரு பகுதி. நான் ஒருவருடன் பேசத்தொடங்கினால் போதும். அவர் என்னை வெறுக்கத்தொடங்குகிறார். எந்திரன்களும் என்னை வெறுக்கின்றன. என்னை நீ புறக்கணித்தால் நான் மறைந்துவிடுவேன்.’*

*அவன் தன்னை தூக்கி தன் கால்களால் நிறுத்திக்கொண்டு மறுபக்கம் பார்த்துக்கொண்டு நின்றான்.*

*‘அந்த கலம் என்னை வெறுத்தது,’ என்று மனச்சோர்வுடன் சொல்லி காவல்துறைக்கலத்தை காட்டினான்.*

*‘அந்தக்கலமா?’ என்றான் டாட்டா ஒரு திடீர் உற்சாகத்துடன். ‘அதற்கு என்ன ஆனது? உனக்குத்தெரியுமா?’*

*‘நான் அதனுடன் பேசியதற்காக அது என்னை வெறுத்தது.’*

*‘நீ அதனுடன் பேசினாயா? என்ன சொல்கிறாய்?’ என்று வியப்புடன் கேட்டான்.*

*‘ஒன்றுமில்லை. நான் மனத்தாழ்வுடனும் அலுப்புடனும் இருந்ததால் அதனிடம் போய் அதன் புறக்கணினித்துளையில் என்னை பொருத்திக்கொண்டேன். அதனுடன் மிக விவரமாகப்பேசி அண்டத்தைப்பற்றிய என் கண்ணோட்டங்களை விளக்கிச்சொன்னேன்,’ என்றான் மார்வின்.*

*‘பிறகு?’ என்று தூண்டினான் டாட்டா.*

*‘அது தற்கொலை செய்துகொண்டது,’ என்று சொல்லி மார்வின் தங்க இதயத்தை நோக்கி நடந்தான்.*

# அத்தியாயம் 35

*அன்றிரவு தங்க இதயம் தனக்கும் குதிரைத்தலை நெபுலத்துக்குமிடையில் பல ஒளியாண்டுகளைச்செருகும் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்தபோது, பீபிள்பிராசன் கலப்பாலத்திலுள்ள சிறு மரத்தடியில் அமர்ந்து அகிலண்டத்தொண்டையுறுமிகளால் தன் மூளையை நேராக்கி நிமிர்த்தடிக்க முயன்று கொண்டிருந்தான். டாட்டாவும் திலக்கோமையும் ஒரு மூலையில் அமர்ந்து வாழ்க்கையைப்பற்றியும் அதனாலேற்படும் விளைவுகளைப்பற்றியும் பேசிக்கொண்டிருந்தனர். ஆரதன் டாட்டாவின் பால்வீதியின் பயணிகளுக்கான ஒரு வழிகாட்டியுடன் தன் படுக்கையிலிருந்தான். இனி அவன் அங்குதான் வாழப்போவதால் அதைப்பற்றி கொஞ்சமாவது தெரிந்துகொள்ளலாம் என்று எண்ணினான்.*

*அவன் கீழ்க்கண்ட பதிகையைக்கண்டான்.*

*ஒவ்வொரு விண்மீன்திரள் கலாச்சாரமும் மூன்று திட்டவட்டமான இனங்காணக்கூடிய கட்டங்களை கடந்துசெல்கிறது. அவை உயிர்பிழைத்தல், ஆய்ந்தறிதல், பண்படைதல் ஆகியன. அவை எளிமையாக எப்படி, ஏன், எங்கே எனவும் அழைக்கப்படுகின்றன.*

*எடுத்துக்காட்டாக, முதல் கட்டத்தின் தனிப்பண்பான கேள்வி நாம் எப்படி உண்ணலாம் என்பது. இரண்டாவதன் கேள்வி ஏன் உண்கிறோம் என்பது. மூன்றாவதன் கேள்வி எங்கு உண்ணலாம் என்பது.*

*அவன் மேலே படிப்பதற்குமுன் கலத்தின் உட்பேசி உயிர்பெற்று ஒலித்தது.*

*‘ஏய், புவிமனிதா? பசிக்கிறதா, பையா?’ என்றது பீபிள்பிராசனின் குரல்.*

*‘ம்... ஆம்... கொஞ்சம் பசிக்கத்தான் செய்கிறது,’ என்றான் ஆரதன்.*

*‘சரிடா, அண்டத்தின் முடிவிலுள்ள உணவகத்தில் உணவருந்திச்செல்லலாம்.’ என்றான் பீபிள்பிராசன்.*

